# வேங்கடம் முதல் குமரி வரை

—பாலாற்றின் மருங்கிலே—



தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்




எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை
பப்ளிஷர்ஸ் : : திருநெல்வேலி

*Tamil*
*First Edition:* } *3000*
*April 1960*

# VENKATAM MUTHAL KUMARI VARAI

## —PALARRIN-MARUNGILAE—

By

T. M. BHASKAR TONDIMAN M. A., (I.A.S. Retd.)

PRICE **Rs. 3—50 nP.**

*Shanmugam Press Private Limited, Madras-1.*

# முன்னுரை

நான் பள்ளி மாணவனுக இருந்த போதே கோயில் களுக்குச் செல்லும் பழக்கம் உடையவன். நான் தஞ்சையில் உத்தியோகம் ஏற்றிருந்த பொழுது இந்த ஆர்வம் அதிகமாக வளர்ந்தது. தஞ்சை ஜில்லாவில் காவிரிக் கரையில் எத்தனை எத்தனையோ கோயில்கள். அக் கோயில்களில் எல்லாம் அழகு அழகான மூர்த்தங்கள்; சிற்பச் செல்வங்கள். அவற்றை எல்லாம் காணக் காண என் நெஞ்சு நிறைந்தது; உள்ளம் விம்மிப் பெருமிதம் அடைந்தது. இந்த நிலையில்த்தான் தஞ்சையில் கலைக் கூடம் உருவாக்கும் பணியை ஏற்றேன். கலை தேடி அலைந்த காதல் விரிக்கில் பெருகும். தமிழ் நாட்டின் சிற்ப வடிவங்களின் சிறப்பை உணர்ந்தபோது அவைகளைப் பற்றி முதலில் தமிழர்களுக்கும், பின்னர் உலக மக்களுக்குமே எடுத்துச் சொல்ல வேண்டும் என்னும் ஆர்வம் பிறந்தது. இந்த ஆர்வமே கலையைப்பற்றி, கலைவளர்க்கும் நிலையங்களான தமிழ் நாட்டுக் கோயில் களைப்பற்றிப் பல கட்டுரைகள் எழுதத் தூண்டியது.

நான் உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றதும் நண்பர் திரு. சதாசிவம், தொடர்ச்சியாக 'கல்கி'யில் இலக்கியக் கட்டுரைகள் எழுதவேண்டும் என்று விரும்பினுர். நானும், 'வேங்கடம் முதல் குமரி வரை' என்ற தொடரில் நூற்று எட்டுக் கோயில்களைப் பற்றி எழுதுவதாக ஒப்புக் கொண்டிருக்கிறேன். சென்ற ஒன்பது மாதங்களாக் கட்டுரைகள் ஒவ்வொன்ருக வெளிவந்து கொண்டிருக் கின்றன. தமிழ் அன்பர்கள் அதிலும் முக்கியமாகப் பெண்கள் மிக்க ஆர்வத்தோடு படிக்கிருர்கள் என்று அறிகிறேன். முன்னர் கோயில்களுக்குச் சென்ருல் மூர்த்தி களை அவைகள் இருக்கும் வண்ணத்திலே படம் எடுக்க

அனுமதிக்காத தருமகர்த்தர்களும் அர்ச்சகர்களும் இன்று நான் கோயில்களுக்குச் செல்லும் போது மிக்க ஆர்வத்தோடு வரவேற்கிருர்கள்; வேண்டும் வசதி எல்லாம் செய்து கொடுக்கிருர்கள். அவர்களுக்கு என் நன்றி.

கட்டுரைகள் வெளிவரும்போது ஆர்வத்தோடு படித்தவர்களில் நண்பர் திரு ஏ. கே. வேலன் ஒருவர். அவர் எனக்கு முன்பு அறிமுகம் இல்லாதவர். அவர் தான் இக்கட்டுரைகள் புத்தக உருவில் வரவேண்டும் என்று விரும்பினுர். நண்பர் திரு.வே.நாராயணன் அவ் விருப்பத்தை வெளியிட்டு புத்தகம் உருவாவதைத் துரிதப் படுத்தினுர். இவர்களது அன்பும் ஆதரவுமே இக் கட்டுரைத் தொகுதியின் முதல் பாகத்தை 'பாலாற்றின் மருங்கிலே' என்ற பெயரோடு இப்போது வெளியிடத் தூண்டு கோலாக இருந்திருக்கிறது. இவர்களுக்கு என் நன்றி. 'கல்கி'யில் வந்த கட்டுரைகளைப் புத்தக உருவில் வெளியிட அனுமதி அளித்த 'கல்கி' ஆசிரியருக்கும் என் நன்றி உரியது.

கட்டுரைகளைப் பற்றி நான் ஒன்றும் சொல்ல விரும்பவில்லை. அவற்றில் எத்தனையோ குறைபாடுகள் "இதைச் சொல்ல விட்டு விட்டீர்கள், இதைக் குறிப்பிட மறந்து விட்டீர்கள்" என்று எழுதும் அன்பர் பலர், குறித்த அளவிலே சொல்ல வேண்டியதை எல்லாம் சொல்ல நான் தவறுவதில்லை. 'சொல்லிடில் எல்லை இல்லை' என்பதுதான் நண்பர்களுக்கு நான் தரும் பதில். இப் புத்தகம் அச்சுக்குப் போகுமுன், பிரதிகளை சரிபார்த்துத் தந்தவர் சகோதரர் திரு. சா. கணேசன். அவர்களுக்கு என் நன்றி.

இப் புத்தகத்திற்கு ஒரு அருமையான முகவுரையை வழங்கியிருக்கிருர்கள் வேலூர் ஜில்லா நீதிபதி நண்பர் திரு S. மகராஜன் அவர்கள். கொஞ்சம் அளவிற்கு மேலேயே புகழ்ந்திருக்கிருர்களோ என்று அஞ்சுகிறேன். ஆனுல் அணைக்கட்டித் தடுக்க முடியாத அன்பல்லவா அவர்களை இப்படி எல்லாம் எழுதத் தூண்டியிருக்கிறது. அவர்கள் அன்பிற்குத் தலை வணங்குகிறேன்.

நான் நல்ல கலை வாழ்வில் திளைத்த குடும்பத்தில் பிறந்தவன். என் பாட்டனர் திருப்புகழ்ச்சாமி என்னும் முருகதாச சுவாமிகளின் சிஷ்யர். என் தந்தையார் நல்ல சித்ரீகர். பரம்பரைச் சொத்தாக கிடைத்த இக்கலை ஆர்வம் நாளும் வளர வகை செய்தவர்கள் அமரர் ரஸிகமணி டி. கே. சி. அவர்கள். அவர்களுக்கு இந்நூலை உரிமையாக்குவதில் பெருமகிழ்ச்சி அடைகின்றேன்.

புத்தகம் வெளிவருவதில் ஆர்வம் காட்டிய அன்பர்கள் புத்தகத்தை விரைவில் அச்சடித்துக் கொடுத்த பிரசுர கர்த்தர்கள், எல்லோருக்கும் என் அன்பும் நன்றியும். இனிப் புத்தகத்தை ஏற்றுக்கொள்ள வேண்டியது தமிழ் உலகம்.

'சித்ரகூடம்'
திருநெல்வேலி-6.

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்
1-4-60

# முகவுரை

சென்ற சில மாதங்களாக நண்பர் பாஸ்கரத் தொண்டைமான் திருக்கோயில்களைப் பற்றி எழுதி வரும் கட்டுரைகள் தமிழ் நாட்டை ஒரு கலக்கு கலக்கி இருக்கின்றன. ஏதோ சினிமா பத்திரிகைகளைப் படிக்க மக்கள் அடி பிடி போட்டுக் கொள்வதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் 'கல்கி'யில் கோயில்களைப்பற்றி வரும் கட்டுரைகளைப் படிப்பதில் 'நான் முந்தி நீ முந்தி' என்று கணவர்களும் மனைவியரும், கிழவர்களும் குழந்தைகளும் போட்டி போடுவதைப் பார்க்கும்போது அதிசயப்பட வேண்டியிருக்கிறது.

சில நாட்களுக்கு முன், ஒரு ஆந்திர நண்பர், சர்க்கார் டாக்டராக இருப்பவர் என்னைப் பார்த்ததும் 'ஐயா! உங்கள் நண்பர் தொண்டைமான் பெரிய வம்புக்காரராயிருக்கிறார். அவர் எழுதும் கட்டுரை ஒவ்வொன்றையும் படித்து விட்டு, என் மனைவி ''உடனே புறப்படுங்கள் வள்ளி மலை வள்ளியைப் பார்க்க வேண்டும்; கச்சி ஏகம்பனைக் காண வேண்டும்; தணிகைக் குமரனைத் தரிசிக்க வேண்டும்'' என்றெல்லாம் உத்திரவு போடுகிறாள். சர்க்கார் உத்தியோகத்திலிருக்கும், எனக்கு ஸ்தல யாத்திரை எல்லாம் கட்டி வருமா? ''போவோம் போவோம்'' என்று சொல்லி என் மனைவியைத் தாஜாப்பண்ணி வைத்திருக்கிறேன்'' என்று சொன்னார். இப்படி ஸ்தல புராணங்களும் சமயப் பிரசாரகர்களும் சாதிக்க முடியாத காரியத்தைச் சாதித்திருக்கின்றன இக் கட்டுரைகள்; பக்தியையும் ஆர்வத்தையும் அப்படியே ஊட்டி இருக்கின்றன.

இந்த சாதனைக் கெல்லாம் காரணம் கட்டுரை ஆசிரியர் நம்மிடத்தில் வைத்திருக்கும் பரிவுதான். நம்முடைய உள்ளப் பாங்கை உணர்ந்து, நம் இதயத்தோடு ஒட்டி சமய உண்மைகளைப் பக்குவமாக்கிக் கொடுக்கும் வல்லமை

அவரிடத்தில் இருக்கிறது. 'பதி, பசு, பாசம்' என்று மடி சஞ்சி பாஷையில் பேசி அவர் நம்மை மிரட்டுகிறதில்லை. நாமெல்லாம் சினிமா உலகத்தில் ஊடாடிக் கொண்டிருப் பவர்கள் என்று அவருக்குத் தெரியும். ஆகவே 'கடன் வாங்கிக் கல்யாணம்' என்ற சினிமாப் படத்தைப் பற்றிப் பேசி நம்மைத் தன் வசம் ஆக்கிக்கொண்டு, நம் கையைப் பிடித்துக்கொண்டே ஏழுமலையும் ஏறி "வான் நின்ற சோலை வடமலை மேல் நின்ற மாதவன்" சந்நிதியில் கொண்டே நிறுத்தி விடுகிருர். நாம் எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்று அவருக்குத் தெரியும். கலெக்டர் வேலை பார்த்த வருக்கு இது கூடத் தெரியாமலா இருக்கும்? ஆகவே ஜன நாயகத் தேர்தல் முறையைப் பற்றிப் பேசுவார். காது கொடுத்துக் கேட்டுக் கொண்டிருப்போம். உடனே பத்தாவது நூற்ருண்டிலே 'குடவோலை'த் தேர்தல் முறை எப்படி நடந்தது என்று சொல்லுவார். இதைப் பற்றி உத்திர மேரூர் கோயிலிலே ஒரு கல்வெட்டு இருக்கிறது என்று சொல்லி நம்மைக் கோயிலுக்கே இழுத்துச் செல்வார். அப்படியே உள்ளேயிருக்கும் வைகுண்டப் பெருமாள் முன்னிலையிலே கொண்டுபோய் நிறுத்துவார். நம்மை அறியாமலேயே, பகுத்தறிவாளர்களாகிய நமக்கும் பக்தி வந்து விடுகிறது. இவ்வாறு விதம் விதமான உத்திகளைக் கையாண்டு நமக்கு களிப்பூட்டுகிருர்.

அவருடைய தமிழைப் பற்றிச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. உணர்ந்ததை உணர்ந்த படி எல்லாம் தமிழில் எடுத்துக் கூறும் சித்து அவருக்கு கை வந்திருக் கிறது. 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்திக்குப் பின் தமிழை இப்படி சுகமாகக் கையாளுபவர் தொண்டைமான் தான் என்று இன்று பல அன்பர்கள் கருதுகிருர்கள். அவருடைய தமிழ் நடை, முதலிலிருந்து கடைசிவரை துள்ளி விளை யாடிக்கொண்டே செல்கிறது. பம்முவதும், பாய்ச்சல் காட்டுவதும், கர்ணங்கள் போடுவதும், பல்டி அடிப்பதும், ஹாஸ்யங்களை உதிர்ப்பதும், பக்தி வெள்ளத்தில் வாசகர் களை முக்கி முக்கி எடுப்பதுமாக இந்த 'பாஸ்கரத் தமிழ்' செய்கிற ஜாலவித்தைகள் பலப்பல.

ஆசாமி பொல்லாதவர். விளையாட்டுப் போக்கிலேயே பல அரிய உணர்ச்சிகளைப் புகட்டுகிறுர்; மேனி சிலிர்க்கச் செய்கிறுர்; புராணக் கதைகளை பக்தியோடு சொல்கிறுர்; அதே மூச்சிலேயே புராணங்களுக்கு பகுத்தறிவு முலாமும் பூசுகிறுர். கட்டுரைகள், ஸ்தலங்களுக்கு வழி காட்டிகளாக அமைந்திருக்கின்றன. அதோடு நின்று விடவில்லை. அவை வரலாற்று ஆராய்ச்சி செய்கின்றன; கல்வெட்டுகளின் நுணுக்கங்களைக் காட்டுகின்றன; பக்திப் பாடல்களுக்கு இலக்கிய விளக்கம் கொடுக்கின்றன; சிற்பக் கலையின் அழகுகளை எடை போடுகின்றன; மூர்த்திகளை அவனிருக்கும் வண்ணத்திலேயே எடுத்துக் காட்டுகின்றன.

நூலைத் தொட்ட தொட்ட இடமெல்லாம் கற்பூர வாசனை வீசுகிறது. சந்தனமும் ஜவ்வாதும் மணக்கிறது. மூர்த்தி, தலம், தீர்த்தம், அபிஷேகம், அலங்காரம் எல்லாம் பக்திக்கும் ஞானத்திற்கும் இன்றியமையாத சாதனங்கள் என்பதைக் கட்டுரைகள் நிலை நாட்டுகின்றன. மேலும் ஆசிரியருடைய சமரச நிலை பெரிதும் போற்றத் தக்கதாக இருக்கிறது. வைஷ்ணவ வேஷம் போட்டுக் கொண்டு சைவத்தை ஒரே செந்தூக்காகத் தூக்குவார். சைவ வேடம் பூண்டு வைஷ்ணவ விளக்கம் செய்வார். இப்படி ஆயிரம் மூர்த்திகளைப் பற்றியும் பேசினுலும் இறைவன் ஒருவன் தான் என்ற உண்மையையுமே உணர வைத்து விடுகிறுர் எப்படியோ.

ரஸிகமணி டி. கே. சி. சொல்லுவார்கள்: 'பொதுவாக, ஸ்தல யாத்திரை என்ருல், கோயில் குளம், மூர்த்தி பக்தர் குழாம் இவைகளை அனுபவிக்கப் போவதுதான். அதில் நல்ல ஆனந்த அனுபவமும் உண்டு' என்று. அத்தகைய ஆனந்த அனுபவத்தை ஸ்தல யாத்திரை போகக் கொடுத்து வைக்காவிட்டாலும் இந்த நூலைப் படிப்பதன் மூலம் நான் அடைகிறேன். தமிழர்கள் ஒவ்வொருவரும் நான் பெற்ற இன்பத்தை அடைவார்கள் என்றும் நம்புகின்றேன்.

ஜட்ஜ் பங்களா
வேலூர். 16—3—60

எஸ். மகராஜன்.

# பொருளடக்கம்



வட வேங்கடவன்

1

# வடவேங்கடவன்

ஒரு கூனன், ஒரு குருடன், ஒரு முடவன், ஒரு ஊமை. இப்படி நான்கு பேர்கள் ஒரு மலை ஏறுகிறார்கள். மலை என்றால் ஏதோ இமயத்தின் சிகரத்தைப் போன்று நீண்டு உயர்ந்த மலை அல்ல. சின்னஞ் சிறிய மலை தான். அந்த மலைமீது ஒரு கோயில். அந்தக் கோயிலிலே ஒரு தெய்வம். அந்தத் தெய்வத்திடம் அசையாத நம்பிக்கை மக்களுக்கு, கேட்கும் வரத்தை யெல்லாம் அளிக்கவல்லது என்று. ஆதலால் வாழ்க்கையில் இந்த ஊனுடம்பில் ஏற்பட்ட குறை காரணமாகத் துயருறுகிறவர்கள் நால்வர் ழலை ஏறுகிறார்கள். இவர்களைப்போல் உடம்பில் குறை இல்லாவிட்டாலும், உள்ளத்தில் குறையுடையவர்கள் பலரும் மலை ஏறுகிறார்கள்.

திடீரென்று ஒரு அதிசயம் நிகழ்கிறது அங்கே. கூனிக் குறுகிக் கோலூன்றி நடந்தவன் கூன் நிமிர்ந்து ஓடவே தொடங்கி விடுகிறான். குருடன் கண்கள் திறந்து விடுகின்றன. அவன் கண்கள் ஒளிபெற்று நிமிர்ந்து வளைந்திருக்கும் கொம்பொன்றில் தொங்கிக் கொண்டிருக்கும் தேன் கூட்டைப் பார்த்து, 'அதோ தேன், அதோ தேன்' என்று மற்றவர்களுக்குக் காட்டுகிறான்.



ஆனந்த நிலய விமானம்

அதுவரை நொண்டியாய் முடமாய்த் தட்டுத் தடுமாறி மலை ஏறிய முடவனே குருடன் காட்டிய தேன் கூட்டை எடுக்க மரத்தின் மேலேயே ஏற ஆரம்பித்துவிடுகிறான். அவ்வளவுதான். அதுவரை வாய் பேசாது ஊமையாய்ப் பக்கத்தில் சென்றவனே 'எடுக்கும் தேனில் எனக்கும் கொஞ்சம்' என்றே வாய்விட்டுக் கேட்கிறான். இப்படியே கூனன், குருடன், முடவன், ஊமையாக இருந்த நால்வரும் தங்கள் தங்கள் குறை நீங்கியவர்களாய் ஓடுகிறார்கள், மலைமேல் நிற்கும் மாதவனின் திருவடிகளில் சென்று வீழ்ந்து வணங்கி எழுவதற்கு. அத்தனையையும் பார்த்துக் கொண்டிருக்கிறார் ஒரு கவிஞர். அவரும் மலை ஏறுகிறவர்களில் ஒருவர் தான். அவர் உள்ளத்திலும் ஏதோ குறை. அதற்குப் பிரார்த்தனை செய்துகொண்டே ஏறுகிறார் மலைமேலே. அவருக்கு அந்த நிகழ்ச்சியை, அந்த அற்புதத்தைக் கண்டு ஒரே வியப்பு, வியப்பைவிட மலைமேல் இருக்கும் மாதவனிடத்திலேயே ஒரு நம்பிக்கை. அந்த நம்பிக்கையிலே பிறக்கிறது ஒரு பாட்டு. பாட்டு இதுதான் :

கூன் கொண்டு சென்றவன்
கூன் நிமிர்ந்து ஓட,
குருடன் கொம்பில்த்

தேன் என்று காட்ட,
முடவன் அத்தேனை
எடுக்க, அயல்

தானின்ற ஊமை
எனக்கென்று கேட்க
தருவன் வரம்

வான் நின்ற சோலை
வடமலைமேல் நின்ற
மாதவனே.

'இத்தனையும் இப்படியே நடந்ததா? அதற்கு ஆதார பூர்வமான சான்று உண்டா?' என்று ஆராய வேண்டுவதில்லை. பக்தனாகிய கவிஞன் பாடிப் பல நூறாண்டுகள் கழிந்துவிட்டன. என்றாலும் மக்கள் உள்ளத்திலே, அதே அசையாத நம்பிக்கை இன்னும் சுடர் விட்டுக் கொண்டிருக்கிறது என்பது கண்கூடு. இன்றும் நாள் நக்ஷத்திரம் என்று ஒன்றும் பார்க்காமலேயே தினசரி நூற்றுக்கணக்கான மக்கள் நடந்தோ



கோபுரவாயில்

அல்லது காரிலோ, பஸ்ஸிலோ சவாரி பண்ணியோ திருமலை சென்று சேர்கிறார்கள். பணம் படைத்தவர்கள் எல்லாம் நிறையக்கட்டணம் செலுத்தி மலைமேல் நிற்கும் மாதவனைச் சேவிக்கிறார்கள். ஏழைகளும் 'கியூ' வரிசையிலே, மணிக்கணக்காக நின்று, நகர்ந்து, கர்ப்பக் கிருஹத்தில் நுழைந்து வேங்கடேசுவரனைத் தரிசிக்கிறார்கள். இத்துடன் அவரவர்கள் பிரார்த்தனை செய்து கொண்டபடி பணமாக, நோட்டாக, நகையாக எல்லாம் அந்தக் கோயிலில் வைத்திருக்கும் பெரிய உண்டியலில் போட்டுவிட்டு, உண்டியலைச் சுற்றிவந்து நமஸ்கரித்து விட்டு வீடு திரும்புகிறார்கள். உண்டியலில் சேர்வது மாதம் ஒன்றுக்கு மூன்று லட்சம் என்கிறார்கள்; நான்கு லட்சம் என்கிறார்கள். மக்களது இத்தனை நம்பிக்கைக்கும் பாத்திரமாக இருப்பவன்தான், திருப்பதியில் அந்தத் திருமலை மேல் நிற்கும் திருவேங்கடமுடையான். 'வடவேங்கடம் தென் குமரியாயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்' என்று பண்டைத் தமிழர்கள் எல்லை கட்டினார்களே அந்தத் தமிழ் நாட்டின் வட எல்லையில் வானுற ஓங்கி வளர்ந்த வட மாலவன் குன்றத்தின் மீதே, வான் நோக்கி நிமிர்ந்து நிற்கிறான் அவன்.

*

'கடன் வாங்கிக் கல்யாணம்' என்று ஒரு படம். படத்தில் வரும் நிகழ்ச்சிகளுக்கும் படத்தின் பெயருக்கும் பொருத்தம் இல்லை என்கிறார்கள் பார்த்தவர்கள். ஆனால் தமிழ் நாட்டில் கடன் வாங்கிக் கல்யாணம் பண்ணி அந்தக் கடனை அடைக்க முடியாமல் திணறிக் கொண்டிருக்கிற பெருமகன் ஒருவர் உண்டென்றால், அவர் திருப்பதி வேங்கடாசலபதி தான். கதை இதுதான்.

வைகுண்டவாசனாக இருந்த மகா விஷ்ணு வராக அவதாரம் எடுத்து இரணியாக்ஷனை சம்ஹரித்து

பூதேவியை அவனுடைய பிடியிலிருந்து மீட்டவர் வைகுண்டத்துக்குத் திரும்பாமல் இப் பூவுலகிலேயே நிலைத்து விடுகிறார். ஸ்ரீதேவியும் இப்பூவுலகிலே ஒரு தாமரை மலரிலே குழந்தையாக அவதரிக்கிறாள். குழந்தையை ஆகாசராஜன் எடுத்துப் பத்மாவதி எனப் பெயரிட்டு வளர்க்கிறான். நாராயண வனத்திலே பத்மாவதி தேவியும், அந்த நாராயணனையே கணவனாக அடையத் தவமிருக்கிறாள். வேங்கடவனாக மலைமேல் நிலைத்து நின்ற நாராயணன், வகுளமாலிகையைத் தூதனுப்பி, பத்மாவதியை மணம் பேசித் திருமணம் செய்துகொள்ள முனைகிறார். கல்யாணச் செலவுக்குப் பணம் வேண்டுமே. அதற்காகக் குபேரனிடம் ஒரு கோடியே பதினான்கு லக்ஷம் பொன் கடன் வாங்குகிறார். இந்தக் கடனுக்கு வருஷந்தோறும் வட்டி கட்டுவதாகவும் கலியுக முடிவில் அசலைக் கொடுப்பதாகவும் ஒப்புக்கொண்டு பத்திரம் வேறே எழுதிக் கொடுக்கிறார். கடன் பத்திரத்தில் சங்கரனும், பிரம்மாவும் சாக்ஷிக் கையொப்பம் இடுகின்றனர். இப்படிக் கடன் வாங்கிய பணத்தைக் கொண்டு கல்யாணம் 'ஜாம் ஜாம்' என்று நடக்கிறது. கடன்தான் இன்னும் அடைத்தபாடாக இல்லை. அதற்காகவே வேங்கடேசன் இன்னும் பக்தர்களிடம் பிரார்த்தனை மூலம் வாங்கிக் கொண்டிருக்கிறார். வட்டிக்கு வட்டி வாங்கும் வட்டிக் காசுப் பெருமாள் என்ற பெயர் வாங்கியும், வட்டியையும் முதலையும் குபேரனுக்குக் கொடுக்காமலேயே 'மொங் கான்' வைக்கிறார் ஆசாமி. ஒரே ஒரு திருப்தி. வருகிற பணம் முழுவதையும் பள்ளிக்கூடம், கலாசாலை, ஆஸ்பத்திரி, அநாதை ஆசிரமம் என்று தானம் வழங்கி விடுகிறார். குபேரனது கடன் தீராவிட்டால் குபேரனுக்கு என்ன குறைந்துவிடப் போகிறது ?

இந்தப் பெருமாளைப் பற்றி மக்கள் பேசிக்கொள்ளும் கதைகளோ அனந்தம். ஸ்ரீ வேங்கடேசனே திருமலை மீது நிற்கிறார். அங்கு அவர் பக்கத்திலோ துணைவி இருக்கவில்லை. அந்த அலர்மேல்மங்கையோ மலை அடிவாரத்திலிருந்து மூன்றுமைல் தூரத்தில் உள்ள திருச்சானூரில் குடியிருக்கிறாள். இப்படி இவர்கள் பிரிந்திருப்பானேன்? அது தெரியாதா? மணப் பெண்ணான அலர்மேல் மங்கை கணவன் வீட்டுக்கு வரும்போது நிறைந்த ஸ்ரீதனம் எல்லாம் கொண்டு வந்திருக்கிறாள். அவள் கொண்டுவராத பண்ட பாத்திரமோ, தட்டு முட்டோ இல்லை. என்றாலும் ஒரே ஒரு பொருள் மிகவும் அற்பமானதுதான் - அதுதான் கருவேப்பிலைக் கொத்து ஒன்று கொண்டுவர மறந்துவிட்டாள். அதற்காக மணமகன் அவளை விரட்டி அடித்து விட்டார். அவளும் வீம்பு குறையாமல் தன் பிறந்தகத்துக்கு வந்து அன்று தங்கியவள்தான். புருஷன் வீட்டுக்குத் திரும்பவே இல்லை. ஆனால் புருஷனுடைய வீராப்பு எத்தனை நாளைக்கு? இப்போதோ ஒவ்வொரு இரவிலும் ஆசாமி மலையிலிருந்து இறங்கி மனைவியின் மனைக்கே நடக்கிறார். விடிவதற்குள் திரும்பியும் விடுகிறார் யதாஸ்தானத்துக்கு. மனைவியுடன் பிணங்கிக் கொண்டதன் பலன் வேங்கடேசனுக்குச் செருப்பு தேய்கிறது. இப்படியெல்லாம் பக்தர்கள்; அதிலும் பெண் மணிகள் எல்லாம் பேசிக் கொள்வது நம் காதில் விழும் திருப்பதி திருமலை செல்லும் வழியில். ஆனால் இப்படி இவர்கள் மலைமேல் ஒருவரும் நிலத்தில் ஒருவருமாகத் தனித்திருப்பதற்கு ஒரு காரணம் தோன்றுகிறது எனக்கு, வேங்கடவனுக்கும் அலர்மேல்மங்கைக்கும் ஒரு போட்டி. பக்தர்களுக்கு அருள் புரிவதிலே, அப்பனை விட அன்னை அருள் மிகுந்தவள் அல்லவா? ஆதலால், அவள் அவசரம் அவசரமாக இறங்கி ஓடி

வந்து பக்தர்களை எதிர்கொண்டு அருள்புரிவதிலே முந்திக்கொள்கிறள் என்றுதான் எண்ணத் தோன்று கிறது எனக்கு.

இந்தத் திருவேங்கடமுடையானது திருப்பதி இன்று மூன்று பிரிவாக இருக்கிறது. அலர்மேல்மங்கைத் தாயார் கோயில் கொண்டிருக்கும் திருச்சானூர்; கோவிந்தராஜன் திருக்கோயில் இருக்கும் கீழைத் திருப்பதி; வேங்கடவன் நின்ற திருக்கோலத்தில் காட்சி கொடுக்கும் திருமலை. ரயிலிலோ, காரிலோ போகிற வர்கள் எல்லாம் ஒன்று சேர்வது கீழைத் திருப்பதியில் தான். இங்குதான் ராமாநுஜரால் நிர்மாணிக்கப்பட்ட கோவிந்த ராஜன் கோயில் இருக்கிறது. கோயிலைச் சுற்றியே திருப்பதி நகரம். தேவஸ்தானத்தார் நடத்தும் கீழ்த்திசைக் கல்லூரி, சர்வ கலாசாலை, பெண்கள் பள்ளிக்கூடம், அநாத சரணாலயம் எல்லாம் இருப்பது இங்கேதான். வேங்கடேசுவரா விசுவ வித்யாலயம், பாலி டெக்னிக் தொழிற் கல்விச்சாலை, யாத்திரிகர்கள் தங்கப் பிரும்மாண்டாகக் கட்டப்பட்டுள்ள சத்தி ரங்கள் எல்லாம் இருக்கின்றன. இங்கிருந்து தென் கிழக்கே இரண்டு மைல் தூரத்தில் திருச்சானூர். அங் குள்ள பத்மசரோவரம் என்ற குளத்தில் மலர்ந்த தாமரையிலேதான் பத்மாவதித் தாயார் தோன்றி யிருக்கிறள். குளத்துக்குக் கிழக்கே கோயில்.

இனி வேங்கடவாணனைத் தரிசிக்க மலை ஏறலாம். காலிலே வலுவுள்ளவர்கள், ஏழு மலை ஏறி, ஏழுமைல் நடந்து ஏழுமலையானிடம் ஒன்று சேரலாம். கால் கடுக்க நடக்க இயலாதவர்களுக்கு பஸ் வசதி செய் திருக்கிறர்கள். இன்னும் கொஞ்சம் வசதி செய்து கொள்ளக் கூடியவர்கள் 'ஜம்' என்று காரிலேயே பதினேருமைல் தூரத்தில் ஏழுமலையையுமே கடந்து விடலாம். இந்தத் திருமலைத் தொடருக்கு சேஷாசலம்,

என்று பெயர். கீழே இருந்து பார்த்தால் இம் மலைத் தொடர் உடலை வளைத்துப் படுத்துக் கிடக்கிற பாம்பு போலவே இருக்கும். இப்படி எல்லாம் 'வான்கலந்த வண்ணன் வரையைக்' கடந்து சென்றால், 'தேன்கலந்து நீட்டும் திருவேங்கடம்' வந்து சேருவோம். மலை ஏறியதும் சுவாமி புஷ்கரணியில் ஒரு முழுக்குப் போட்டு, அக் குளத்தின் மேல் கரையில் உள்ள வராக மூர்த்தியைத் தரிசித்து விடவேண்டும். உருவிலே சிறிய மூர்த்தி என்றாலும் இவர்தானே ஆதி மூர்த்தி. இனி, கோயிலுக்குள் போகலாம். கோயில் மற்றையத் தமிழ்நாட்டுக் கோயில் கட்டிடக் கலைக்கு எடுத்துக் காட்டாக அமைந்திருக்கிறது. கோயிலின் தலைவாயிலை படிக்காவலி என்கிறார்கள். அந்தவாயிலை ஒரு கோபுரம் அணி செய்கிறது. இந்த வாயிலில் நுழைந்து முதற் பிராகாரத்தையும் கடந்தால் வெள்ளி வாயில் (வெண்டி வாகிலி). அதனுள் நுழைந்தால் விமானப் பிரதக்ஷிணம். இங்கு எங்கே திரும்பினாலும் ஒரே தங்கமயம். பங்காரு பாவி என்னும் தங்கக் கிணறு இருப்பது இங்கேதான். இந்தப் பிராகாரத்தைச் சுற்றினால் கர்ப்பக்கிருஹத்தின் மேல் கட்டப்பட்டிருக்கும் ஆனந்த நிலைய விமானம் ஒரே ஜோதிமயம் இரவிலும் பகலிலும். இந்தப் பொன் போர்த்த விமானத்தைப் புதுப்பிக்க முப்பத்திரண்டு லட்சம் ரூபாய் செலவாம். இந்தத் தங்க விமான தரிசனம் செய்த பின் தங்க வாயிலைக் (பங்காரு வாகிலி) கடந்தால் கர்ப்பக்கிருஹம் வந்து சேரலாம். இந்தத் தங்கவாயிலில் இரண்டு தங்கமயமான துவார பாலகர்கள், தங்கச் சட்டங்களுக்குள்ளே நின்று கொண்டிருப்பார்கள். இவர்கள் கண் திறந்து பார்த்துவிடக் கூடாதே என்று கண்களை மறைத்து ஒரே பட்டையான திரு நாமம். இவர்கள் அனுமதி பெற்றே உள்ளே நுழைய வேண்டும்.

ஆம்! இந்த 'வேங்கடத்து மேவிய வேத நல் விளக்கை'க் கண்டுதொழ எவ்வளவோ வசதி. கட்டணங் கட்டி சேவை செய்கிறவர்களுக்குச் சலுகை அதிகம்தான். தரும தரிசனக்காரர்கள் எல்லாம் 'கியூ' வரிசையிலே காத்து நின்றுதான் வேங்கடவனைக் காண வேண்டும். தரிசனத்திலே (ஆம், பிரசாதத்தில் அல்ல) கண்ணுயிருப்பவர்கள், ஒரு வியாழன் மாலை திருமலை சென்று இரவு ஏழு மணிக்கு ஒரு ரூபாய் கட்டணம் செலுத்தி 'ஆரத்தி' டிக்கட் பெற்று மலரால் அணி செய்திருக்கும் வேங்கடவனின் திருக்கோலத்தைக் கண்டு மகிழலாம். அன்றுதான் கண்களை மறைத்து எப்போதும் இட்டிருக்கும் நாமத்தை அகற்றி விட்டு, மெல்லியதான நாமம் ஒன்றை இட்டுக் கொண்டு அவனுமே கண் திறந்து குளிர்ந்த நோக்கோடு நம்மை அருள்பாலிப்பான். இதே பூலங்கி தரிசனத்தை விரும்பினுல் மறு நாள் (வெள்ளிக்கிழமை) காலையிலும், சுப்ர பாதம், திருப்பள்ளி எழுச்சி எல்லாம் முடியும்வரை திருமாமணி மண்டபத்தில் காத்திருந்து, பின்னர் உள்ளே சென்று காணலாம்.

கலை ஆர்வம் கொண்டவர்கள் இந்தப் பூலங்கி சேவை, அல்லது தோமாலை சேவையினுல் எல்லாம் திருப்தி அடைய முடியாது. அணியும் பணியும் இல்லாமல், வேங்கடவனை அவனிருக்கும் வண்ணத்திலே கண்டு தொழ வெள்ளிக்கிழமை பகல் பத்து மணிக்குத் திரும்பவும் செல்ல வேணும். அன்றுதான் பணம் படைத்த பக்தர்கள் நூற்றுக் கணக்காகவும், ஆயிரக் கணக்காகவும் கட்டணங்கள் கட்டி, கர்ப்பூரக் கிண்ணி, கஸ்தூரிக் கிண்ணி என்றெல்லாம் ஏற்பாடுகள் செய்து திருமஞ்சனம் ஆட்டுவார்கள். அந்த பக்தர்கள் தயவால், அவர்களைச் சேர்ந்தவர்களில் ஒருவராய் உள் நுழைந்து விட்டால் எம்பெருமான் திருக்கோலத்தைக்

கண்குளிரக்காணலாம். வக்ஷ ஸ்தலத்தில் ஸ்ரீதேவியை வைத்திருக்கும் அந்த ஸ்ரீனிவாசப் பெருமாளைப் பாதாதி கேசபர்யந்தம் (ஏன் கேசபர்யந்தம்?) கேசத்துக்கும்



புஷ்கரணி—வராகர் கோயில்

மேலே நீண்டுயர்ந்திருக்கும் மணிமகுடபர்யந்தம் கண்டு தரிசிக்கலாம். அன்று இளங்கோ பாடினரே

'பகை அணங்கு ஆழியும் பால்வெண் சங்கமும்
தகை பெறு தாமரைக் கையில் ஏந்தி
நலம்கிளர் ஆரம் மார்பில் பூண்டு
பொலம்பூ ஆடையில் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடுமால் நின்ற வண்ணம்'

என்று, அந்த வண்ணத் திருவுருவையே கண்டு தொழலாம். அழகினுல் உயர்ந்துள்ள பெருமாள் திருவுருவங்கள் பல பார்த்திருப்போம் நாம். ஆனுல் இந்த வேங்கடவனது திரு உருவில் இருக்கும் காம்பீர்யம் அலாதியாக இருக்கிறது. பல்லவர் காலத்து விஷ்ணு சிலைகளில் உள்ள உத்தரீயம் இல்லை. நில

உலகிலே வேங்கடவாணனுக்கு இருக்கின்ற பெருமை யோடு கலை உலகிலும் வேங்கடவனுகவே (அழிவற்ற ஐசுவர்யம் உடையவனுகவே) இருக்கிருன் இவன்.

தெய்வத் திருமலை வாழ் வேங்கடவன் ரிக்வேதத் திலேயே இடம் பெற்றிருக்கிருன் என்பர். திருமந்திரம் பாடிய திரு மூலரும், திருவந்தாதி பாடிய கபிலதேவ நாயனுருமே இந்த வேங்கடத்து மேயானைப் பாடி இருக்கிருர்கள். தொண்டர்அடிப்பொடியைத் தவிர மற்றைய ஆழ்வார்கள் எல்லாரும் மங்களா சாஸனம் செய்திருக்கிருர்கள். தொண்டைமான் சக்ரவர்த்திதான் இந்தக் கோயிலை எடுப்பித்தவர் என்று வேங்கடாசல மாகாத்மியம் கூறும். பல்லவர், சோழர், பாண்டியர், யாதவர் முதலிய அரசர் பெருமக்கள் எல்லாம் கோயிலை விஸ்தரித்திருக்கிருர்கள் என்ருலும், விஜயநகர மன்னர் கள் காலத்தில்தான் கோயிலின் செல்வம் பல்கிப் பெருகி யிருக்கிறது. சாளுவ நரசிம்மனின் பெரிய பாட்டனுன சாளுவ மங்கதேவனே விமானத்துக்குத் தங்கத்தகடு வேய்ந்திருக்கிருன். கிருஷ்ண தேவரா யனும் அச்சுததேவராயனும் பல துறைகளில் கோயிலை வளப்படுத்தி இருக்கிருர்கள்.

இந்த வேங்கடவனைப் பற்றி ஒரு பெரிய விவாதம். இந்த மூர்த்தி முருகனே என்றும் பின்னர்தான் ராமானுஜர் அந்த மூர்த்தியைச் சங்கு சக்கரம் ஏந்த வைத்து ஸ்ரீனிவாசனுக மாற்றிவிட்டார் என்பர் ஒரு சாரார். ஆதிமுதலே அவன் ஸ்ரீனிவாசனே என்று அறுதி இட்டு உரைப்பார்கள் மற்றவர்கள். இது வேண்டாத விவாதம். தமிழ் நாட்டில் சைவ வைணவ வேற்றுமை கள் ஒரு காலத்தில் தலை தூக்கி நின்றிருந்தாலும் அந்த வேற்றுமைகளை யெல்லாம் மறக்கத் தெரிந்தவர் கள் தமிழ் மக்கள். 'உணர்வார் யார் உன்னுருவம்

தன்னே ?' என்று முதல் ஆழ்வார்களில் முதல்வரான பொய்கை யாழ்வார் மயக்கினுலும் பேயாழ்வாரோ,

> தாழ் சடையும், நீள்முடியும்
> ஒள் மழுவும் சக்கரமும்
> சூழ்அரவும், பொன் நாணும்
> தோன்றுமால்-சூழும்
> திரண்டருவி பாயும்
> திருமலேமேல் எந்தைக்கு
> இரண்டுருவும் ஒன்ருய் இயைந்து

என்று முடிவு கட்டிச் சைவ வைஷ்ணவ ஒற்றுமையை நிலவச் செய்து வருகிருர். இது போதாதா, விவாதத்துக்கு முற்றுப்புள்ளி வைக்க ?



# 2

# காளத்தி அப்பர்

'இறைவனிடத்து இடையரு அன்பு செலுத்திய நாயன்மார்கள் அறுபத்து மூவரில் செயற்கரிய செயல் செய்தார் யார் ?' என்பது ஒரு பட்டி மண்டபத்தில் விவாதத்துக்கு எடுத்துக் கொண்ட பொருள். அறுபத்து மூன்று அன்பர்களது செயலையும் அலசி ஆராய்வது சிரமம் என்று கருதிப் பட்டினத்தார் குறிப்பிடும் மூன்று திருத்தொண்டர்களை மட்டுமே விவாதத்துக்கு எடுத்துக் கொண்டனர்.

வாளால் மகவு அரிந்து ஊட்ட
வல்லேன் அல்லன்; மாது சொன்ன
சூளால் இளமை துறக்க வல்லேன்
அல்லன்; தொண்டு செய்து
நாள் ஆறில் கண் இடந்து அப்ப
வல்லேன் அல்லன்; நான் இனிச்சென்று
ஆளாவது எப்படியோ திருக்
காளத்தி அப்பருக்கே ?

என்று சிறுத்தொண்டர், திருநீலகண்டர், கண்ணப்பர் மூவரையும் போல அரியசெயல் செய்து இறைவன் அருளைப் பெறத் தம்மால் இயல வில்லையே என்று ஏங்

இருக்கிறார் பட்டினத்தார். இம்மூவர் செயலையுமே அன்று அறிஞர்கள் விவாதித்தார்கள். கடைசியில் தலைவரது தீர்ப்பு கண்ணப்பர் பக்கமே இருந்தது. திருநீலகண்டர் தம் உறுதியில் நிலைத்து நிற்பதற்கு அவர் மனைவி இறைவன் பேரிலேயே ஆணை இட வேண்டி யிருந்தது. சிறுத்தொண்டர் பெற்ற மகனையே அரிந்து கறிசமைத்த செயலில் 'எதுவும் எனக்கு அரியது அன்று' என்று சொல்லும் ஆணவம் சிறிது கலந்து விடுகிறது. கண்ணப்பர் ஒருவர்தான் பிற ருடைய தூண்டுதல் ஒன்றுமே இல்லாமல் 'அயல் அறியா அன்பை' இறைவனிடம் செலுத்துகிறார். ஆதலால் அவர் அன்பே சிறந்தது. அவர் செய்ததே அரியசெயல் என்று முடிவு கட்டினார் பட்டி மண்டபத் தலைவர். இப்படி அறுபத்து மூன்று அன்பர்களில் இறை வனிடம் அன்பு செலுத்தியவர்களில் தலை நிற்கிறார் கண்ணப்பர். அத்தகைய கண்ணப்பராலே பெருமை பெற்றவர்தான் காளத்தி அப்பர். கொலைத் தொழிலே புரியும் வேட்டுவக் குலத்திலே பிறந்த திண்ணனார் வேட்டையாடச் சென்ற இடத்திலே, அங்குள்ள குடுமித் தேவருக்கு ஆட்பட்டு, அவருக்கு இயல்பான முறையில் வழிபட்டு நின்றவர். இறைவனது வலக் கண்ணில் உதிரம் ஒழுகியபோது தம் வலக் கண்ணையே தோண்டி எடுத்து அப்பி, வழியும் ரத்தத்தைத் துடைத் தவர். திரும்பவும் இறைவனது இடக் கண்ணிலும் இரத்தம் வடிந்தபோது தக்க மருந்து தம்மிடம் உண்டு என்பதால் குதூகலித்துத் தம் இடக் கண்ணையும் தோண்டி எடுக்க முனைந்தவர். திண்ணனாரது திண்மை யான அன்பைக் கண்ட இறைவனும் 'நில்லு கண்ணப்ப! நில்லு கண்ணப்ப !' என்று அவரது கையைப்பிடித்து, தடுத்து நிறுத்தும் பாக்கியம் பெற்றவர். இத்தகைய 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு' தம்மிடம் இல்லையே

என்றுதான் மாணிக்கவாசகரும் அகங்கரைந்து உருகு கிறார். "வாய் கலசமாக வழிபாடு செய்யும் வேடன், மலராகு நயனம் காய்கணையால் கிடந்து ஈசன் அடி கூடினான்" என்று ஞானசம்பந்தர் வியந்து வியந்து பாடுகின்றார். ஒரே ஒரு ரகசியம். இன்று காளத்தியில் கோயில் கொண்டிருக்கும் காளத்தி அப்பருக்குச் சொந் தமாக ஒரு கண் கூட இல்லை. இடக்கண்ணோ அம்மை யின் கண், வலக்கண்ணோ, கண்ணப்பரது கண். ஆதலால் இரு கண்ணும் இழந்து நிற்கும் ஏழையாக வாழ்கிறார் அவர்.

காளத்தி வாழ் கண்டனை நினைத்தால் கண்ணப்பனை நினைக்கிறோம். நாம் மாத்திரம் என்ன? 'மனத்தகத் தான் தலைமேலான், வாக்கில் உள்ளான், வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர் இனத்தகத்தான், இமை யவர் தம் சிரத்தின் மேலான்' என்றெல்லாம் இறைவன் இருக்கும் இடங்களை வரிசையாக அடுக்கிக்கொண்டே போன அப்பரும் கடைசியில் 'காளத்தியான் அவன் என் கண்ணுளானே' என்றுதானே முடிக்கிறார். இறைவனது அருள் பொழியும் கண்ணை நினைத்தால் கண்ணப்பனை நினைக்கிறோம். கண்ணப்பனை நினைத் தால் காளத்தியானை நினைக்கிறோம்.

இந்தக் காளத்தியான் இருக்கும் கோயிலைத் தன் னகத் தடக்கிய ஊர்தான் இன்று காளாஸ்திரி என்றும் காளஹஸ்தி என்றும் சீகாளத்தி என்றும் வழங்கும் காளத்தி. சீ, காளம், அத்தி (சிலந்தி, பாம்பு யானை) மூன்றும் வழிபட்ட காரணத்தால் சீகாளத்தி என்று இத்தலம் பெயர் பெற்றது என்று ஸ்தல புராணம் கூறும். சிலந்தி தன் வாயால் நூல் இழைத்து அந் நூலாலேயே இறைவனுக்குப் பந்தல் இடுகிறது. அப் பந்தல் தீபச் சுடரால் அழிந்தது கண்டு அத் தீபத்தி லேயே தானும் விழுந்து மடிந்து இறைவன் திருவடி

அடைகிறது. காளன் என்னும் பாம்போ தன்னிட மிருந்த அருமையான ரத்தினத்தை இறைவன் திருமுடி யில் சாத்தி அலங்கரிக்கிறது. அத்தி என்னும் கணத் தலைவன் யானையாக அவதரித்து, தன் துதிக்கையா லேயே நீர் முகந்து இறைவனுக்குத் திருமஞ்சனம் செய் விக்கின்றது. யானை செய்யும் திருமஞ்சனம் புஷ்ப அலங்காரம் எல்லாம் சுத்தமாக இல்லை என்று பாம்பு நினைக்கிறது. அதனால் யானையின் துதிக்கையில் பாம்பு நுழைந்து யானைக்கு வேதனை தருகிறது. யானையும் தும்பிக்கையை ஓங்கி அறைந்து பாம்பைக் கொல்கிறது. பாம்பின் விஷம் ஏறிய காரணத்தால் யானையுமே மாண்டு மடிகிறது. இப்படியே சிலந்தி பாம்பு யானை மூன்றும் இத்தலத்திலேயே முத்தி பெறுகின்றன. அதனால் தலமும் சீகாளத்தி என்றே பெயர் பெறுகிறது.


காளி கோபுரம்

இந்தக் காளத்தி அப்பரது கோயில் பஞ்சபூத ஸ்தலங் களில் ஒன்று. இதை வாயுத்தலம் என்பார் கள். அதற்கேற்பகர்ப் பக் கிருஹத்தில் சுடர் விட்டுக் கொண்டிருக் கும் விளக்குகளில் இறைவன் திரு முடிக்கு அணித்தே உள்ள ஒரு விளக்கின் சுடர் மட்டும் காற் றிலே அசைவுற்று எப் போதும் துடித்துக் கொண்டே இருக் கிறது. இந்த விளக்

குக்குமட்டும் காற்று எங்கிருந்து வருகிறது என்பது கண்டறியாத அதிசயமாகவே இருக்கிறது. இது வாயுத்தலம் என்பதற்கும் ஒரு சிறு கதை. ஆதி சேஷனுக்கும் வாயு பகவானுக்கும் ஒரு பலப் பரீக்ஷை. மேருமலையை ஆதிசேஷன் சுற்றி வளைத்துக் கட்டிப் பிடிக்க, வாயு தன் பலங்கொண்டமட்டும் காற்றை எழுப்பி மலையை அசைக்கக் கடைசியில் அம்மலை யின் பிஞ்சுகள் மூன்று பறித்து எறியப்பட, அப்படி எறியப்பட்ட மலைப்பிஞ்சு ஒன்றே இங்கு விழுந்து காளத்தி மலையாக உருவாகி இருக்கிறது என்பது கர்ண பரம்பரை.

இக் காளத்தி அப்பர் கோயிலுக்குச் செல்ல விரும்பு பவர்கள் ரயிலிலே செல்வதானல் சென்னையிலிருந்து ரேணிகுண்டா சென்று கூடூர் செல்லும் ரயிலில் மாறி ரேணிகுண்டாவிலிருந்து பன்னிரண்டு மைல் செல்ல வேணும். இல்லை, காரிலோ பஸ்ஸிலோ சென்னையி லிருந்து நேரடியாக எண்பது மைல் சென்று இத் தலத்தை அடையலாம். மேற்கே இருந்து வருகிறவர் கள் திருப்பதி சென்று திருமலை ஏறி வேங்கடவனைத் தரிசித்துவிட்டுப் பின்னர் காளத்தி வந்து சேரலாம். ஸ்வர்ணமுகி என்னும் பொன்முகலி ஆற்றங் கரை யிலே அமைந்திருக்கும் கோயிலுக்கும் சென்று தொழ லாம். கோயில் வாசலிலே ஒரு பெரிய கோபுரம்; காளி கோபுரம் என்று பெயர். ஆனல் இந்தக் கோபுரத்துக் கும் கோயிலுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை; தனித்து நிற்கிறது. பக்கத்தில் உள்ள சிறிய கோபுர வாயிலில் நுழைந்து வளைந்து வளைந்து சென்றல் தென் பக்கம் உள்ள கோயிலின் பிரதான வாயிலுக்கு வந்து சேருவோம். அதன்பின் கோயிலில் நுழைந்து வலமாக வந்தால் மேற்கு நோக்கியவராய் இருக்கும் காளத்தியப் பரைத் தரிசிக்கலாம். இவர் சிவலிங்கத்தில் ஒரு பசிய

உருவை ஏற்றிருக்கிறார். மூன்று நான்கடி உயரம். அடியில் பெருத்து முடியில் கூர்மையாக ஒடுங்கிய மூர்த்தி. மாலைபோட்டு அலங்கரிப்பதற்கு என்று ஒரு தனிச் சட்டம், அதை விலக்கிவிட்டு அர்ச்சகர் ஹாரத்தி பண்ணினால், சிலந்தி, நாகம், யானைக் கொம்புகளோடு கண்ணப்பரது ஒரு கண்ணும் லிங்கத் திருஉருவில் தெரியும். அந்தராளத்திலே கூப்பிய கையனாய் வில்லைத் தாங்கிக்கொண்டு கண்ணப்பரும் சிலை உருவிலே நிற்கிறார் அங்கே. காளத்தி அப்பரை வணங்கித் திரும்பவும் வலமாகச் சுற்றினால், கிழக்கே பார்த்த திருக்கோயிலில் ஞானப் பூங்கோதை நிற்கிறாள். கம்பீரமான திரு உரு. இந்த 'வண்டாடும் குழல் உமையைப் பாகத்தில் வைத்து மகிழ்ந்தவனே கண்டார்கள் காதலிக்கும் கணநாதனும் காளத்தியான்' என்பர் சுந்தரர். இன்னும் கோயிலுக்குள் எண்ணற்ற பிரகாரங்கள். வெளியேயும் ஒரு மண்டபத்தில் கண்ணப்பர் சுமார் ஐந்தடி உயரத்தில் நல்ல கற்சிலை வடிவில். இது தவிர, செப்புச் சிலை வடிவிலும் அவர் உண்டு. இவைகளையெல்லாம் படம்பிடிக்க யாருக்கும் அனுமதி இல்லை. கோயிலுக்குள் நுழையும் போதே தான் காமிராவைக் கைப்பற்றிக் கொள்கிறார்களே கோயில் நிர்வாகிகள். ஆனால் இங்குள்ள கண்ணப்பரைக் காட்டிலும் அழகான கண்ணப்பர் ஒருவரை சோழ நாட்டுச் சிற்பி கல்லில் உருவாக்கி, தாராசுரம் ஐராவதேசுவரர் கோயிலில் நிறுத்தி இருக்கிறான். கண்ணப்பர் தமிழ் மக்களின் பொது உடைமைப் பொருளாயிற்றே. அவரைத் தமிழ் நாட்டுப் புராணங்கள் எல்லாம் பாராட்டிப் புகழ்வதுபோலவே சோழநாட்டுச் சிற்பியும் வடித்தெடுத்து நிறுத்தி இருக்கிறான். இந்தக் காளத்தியப்பர் கோயில் பழுதுற்றிருந்ததை, தேவகோட்டை மே. அருநா. ராமநாதன் செட்டியார் குடும்பத்தினர் பத்து லக்ஷம் செலவில் புதுப்பித்திருக்

கின்றனர். இவ்வளவு செலவு செய்தும் உட்கோயில் களையே புதுப்பிக்க முடிந்திருக்கிறது. மற்றவை எல்லாம் பழைய கோயிலாகவே இருக்கிறது இன்றும். புதுப்பித்த ராமநாதன் செட்டியார், கோயிலுக்கு வெளியே பொன் முகலி ஆற்றுக்குச் செல்லும் படிக்கட்டின் பக்கத்திலே ஒரு சிறு மண்டபத்திலே சிலை உருவில் நின்று கொண் டிருக்கிறார். அவரது பக்தி சிரத்தையைப்பற்றி எவ்வளவோ சொல்கிறார்கள் மக்கள்.

கோயிலின் பின் புறத்திலே இரண்டு குன்றுகள்; ஒன்றின் பேரிலே கண்ணப்பர் தொழுத குடுமித் தேவர், இன்று கண்ணப்ப ஈசுவரர் என்ற பெயரோடு எழுந் தருளி யிருக்கிறார். மற்றொரு குன்றின் பேரிலே துர்க்கை. இரண்டு கோயில்களுக்கும் செல்வது கொஞ்சம் சிரமம். உயரம் என்பதினால் அல்ல. சரியான பாதை இல்லாத காரணம்தான். கண்ணப்பர் மலை ஏறும் மலைச்சரிவிலே மணிகண்டேசுவரருக்கு ஒரு கோயில். அதை அடுத்து மலையைக் குடைந்து உண்டாக்கிய மண்டபம். இதற்கு மணி கர்ணிகா கட்டம் என்று பெயர். இங்குதான் பெண் ஒருத்திக்கு இறைவன் தாரக மந்திரத்தை வலது காதில் ஓதி அருளினார் என்று கதை, காசி மணிகர்ணிகா கட் டத்தில் விசுவநாதர் அருளியதுபோல. இன்றும் மக்க ளிடத்து ஒரு நம்பிக்கை. அந்திம திசையை நெருங்கிக் கொண்டிருப்பவர்களை இம்மண்டபத்துக்குக் கொண்டு வந்து வலப்பக்கமாக ஒருக்கச் சாய்த்துக் கிடத்தினால் சாகிறபொழுது உடல் திரும்பி வலது காது வழியாகவே உயிர் உடலை விட்டுப் பிரிந்து செல்லும் என்கிறார்கள். இந்த மணிகண்டீசுவரர் கோயில் மூன்றாம் குலோத் துங்கன் என்னும் வீர ராஜேந்திர சோழன் கட்டியது என்று கல் வெட்டுகள் கூறுகின்றன. ஆதலால் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிற்கு முன்பே காளத்தியப்பர் கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும். கோயிலின

நூற்றுக்கால் மண்டபம், காளி கோபுரம் முதலியன பதினாறும் நூற்றாண்டின் முற்பகுதியில் விஜயநகர மன்னர்கள் கட்டினார்கள் என்று திருவண்ணாமலையில் உள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது.

இத்தகைய சரித்திரப் பிரசித்தியோடு இலக்கியப் பிரசித்தியுமே பெற்றிருக்கிறது இவ்வூர். மதுரை சொக்கலிங்கப் பெருமானிடத்திலேயே குற்றம் குற்றமே என்று வாதாடிய சங்கப்புலவன் நக்கீரன் சாப விமோசனம் அடைந்து கயிலாய தரிசனம் பெற்ற இடம் இதுவே. அதனாலேயே இத் தலத்தை தக்ஷிண கயிலாயம் என்கிறார்கள். 'கயிலை பாதி காளத்தி பாதி' என்று அந்தாதி பாடிய நக்கீரதேவ நாயனார் இத்தலத்தைப் போற்றியிருக்கிறார். காளத்தியைத் தரிசித்தால் கயிலையைத் தரிசித்த பலன். ஆம், நமக்கும் கிடைத்து விடுகிறது, கயிலையைத் தரிசித்த பலன், காளத்தியைப் பற்றி காளத்தி வாழ் கண்ணப்பரைப் பற்றி இவ்வளவு தெரிந்து கொள்கிறகாரணத்தால்.



3

# தணிகைக் குமரன்

---

அருணகிரியார் பிறந்து வளர்ந்து முருகன் அருள் பெற்றுப் பாடத் துவங்கியது அண்ணுமலையிலே. "எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான் சென்றே எந்தை நினது அருள் புகழை இயம்பிடல் வேண்டும்" என்று பிரார்த்தித்த வண்ணமாய், அண்ணுமலையிலிருந்து புறப்பட்டு ஊர் ஊராகக் கடந்து, முருகன் கோயில் கொண்டிருக்கும் தலம் தலமாகச் சென்று, குன்று குன்ருக ஏறி, திருப்புகழ் பாடி மகிழ்ந்தவர் அவர். இப்படிப் பல தலங்களுக்கும் சென்றவர், திருவண்ணுமலைக்குப் பக்கத்திலே சுமார் அறுபது மைல் தூரத்திலே உள்ள திருத்தணிகைக்குச் சென்று அங்கு கோயில் கொண்டுள்ள முருகப் பெருமானைக் கண்டு அவன் புகழ் பாட, பல வருஷ காலமாக வாய்ப்புக் கிடைக்காமல் இருந்திருக்கிருர். இப்படி இருந்தவர் கடைசியாக ஒரு நாள் தணிகைக்கே வந்திருக்கிருர். மலை மீது ஏறியிருக்கிருர். இந்திர நீலச் சுனையில் மூழ்கியிருக்கிருர். ஆபத்சகாய விநாயகரை வணங்கியிருக்கிருர். அருள் ஞான சக்திதரனுகிய தணிகைக் குமரேசனைக் கண்டு தொழுதிருக்கிருர்.

அந்த நிலையில் உள்ளத்திலே ஒரு தாபம். 'நாம் பிறந்து வளர்ந்த ஊருக்கு இவ்வளவு பக்கத்திலேயுள்ள இந்த முருகன் சந்நிதிக்கு இத்தனை நாட்களாக வர இய லாமற் போனதற்குக் காரணம் என்ன?' என்று தம் உள்ளத்தையே கேட்கிறார். இந்தத் தென் தணிகைக் குமரனின் தாள்களைச் சூடாத தலையையும், நாடாத கண்களையும், தொழாத கைகளையும், படாத நாவினையும் பிரமன் நமக்குப் படைப்பானேன்? அப்படி அவன் நம்மைப் படைக்கும்படி நாம் அவனுக்குச் செய்த குற்றந்தான் என்ன? என்றெல்லாம் ஏங்கியவர், 'நான் செய்த குற்றம் என்?' என்ற கேள்வியை அந்த முருகனிடமே கேட்கிறார். இந்தக் கேள்வியே ஒரு நல்ல பாட்டாகப் பிறக்கிறது-அவரது நாவிலே.

கோடாத வேதனுக்கு
யான் செய்த குற்றம் என்?
குன்றெறிந்த
தாடாளனே! தென் தணிகைக்
குமர! நின்
தண்டையந் தாள்
சூடாத சென்னியும்
நாடாத கண்ணும்
தொழாத கையுங்
பாடாத நாவும்
எனக்கே தெரிந்து
படைத்தனனே!

இந்தக் கேள்விக்கு முருகன் அருணகிரி நாதருக்குப் பதில் சொல்லுவாரோ என்னவோ, நமக்குச் சொல்கி றான். நாமெல்லாம் வாழ்நாளில் இதே தவறைச் செய் யாது பிரமனிடமும் ஏன், குமரனிடமுமே நான் செய்த குற்றம் என்? என்ற கேள்வியைக் கேட்காமல் இருக்க வருஷா வருஷம் டிசம்பர் முப்பத்தி ஒன்று மாலையிலே

நம்மை அங்கே அழைக்கிருன். ஜனவரி முதல் தேதி, ஆம். ஆங்கில வருஷப் பிறப்பன்று, வருஷம் பிறந்த உடனே நமக்குத் தரிசனம் தருகிருன். நம்மை மகிழ் விக்கிருன்.

தணிகையிலே நடக்கும் உற்சவங்களிலே சிறந்தது ஆடிக் கிருத்திகை. அன்று பல்லாயிரக்கணக்கான புஷ்பக் காவடிகளைச் சுமந்து கொண்டு மலை ஏறுவது கண் கொள்ளாக் காட்சி. ஆனல் அந்த விழாவினையும் தூக்கி அடிக்கிறது, இந்த டிசம்பர் மாதக் கடைசியிலே நடக்கும் திருப்படித் திருவிழா! இந்த விழாவுக்குச் சென்னையிலிருந்து ஸ்பெஷல் ரயில் புறப்படுகிறது. சென்னை நகரமே திருப்புகழ் மணி அவர்கள் தலைமையில் திருத்தணி நோக்கிச் செல்கிறது. 'முருகா முருகா முருகா' என்னும் நாம பஜனையில் மக்கள் மாத்திரம் அல்ல, ரயிலும், ரயில் தண்டவாளங்களும் சேர்ந்து கொள்கின்றன. இந்த ரயில் வருவதை எதிர்நோக்கி முன்னமேயே லக்ஷக்கணக்கான மக்கள், ஆண்கள், பெண்கள், பிள்ளைகள், அதிகாரிகள், தொழில் அதிபர் கள் எல்லாம் காரிலும் பஸ்ஸிலுமாக ஏறித் திருத்தணி வந்து சேர்ந்து விடுகிருர்கள். எல்லோருமாகச் சேர்ந்து பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் தணிகைக் குமரன் கோயில் கொண்டிருக்கும் மலைமீது ஏறுகிருர்கள். அழ காகக் கட்டி வைத்திருக்கும் முந்நூற்று அறுபத்து ஐந்து படிகளையும் ஏறிக் கடந்து அவன் சந்நிதி சென்று விழுந்து வணங்கி எழுந்து திரும்புகின்ருர்கள்.

ஆங்கில ஆட்சி நம் நாட்டில் இருந்த காலத்தில் ஒவ்வொரு வருஷம் ஜனவரி மாதப் பிறப்பன்றும் அதி காரிகளான துரைமாரைச் சென்று கண்டு காணிக்கை செலுத்துவது என்பது நம் மக்களிடையே ஏற்பட்ட ஒரு சம்பிரதாயம். 'வருஷம் பிறந்ததும் இந்தப் பறங்கியர் முகத்திலே முதல் முதல் விழிக்க வேண்டியிருக்கிறதே,

இதைத் தடுக்க முடியாதா?' என்று எண்ணியிருக்கிறார் ஒரு பக்தர். டிசம்பர் முப்பத்தி ஒன்று மாலை திருத் தணிகை சென்று வருஷம் பிறந்ததும் முருகன் திருவடி களிலே விழுந்து வணங்கியபின், ஊர் திரும்பி அதன் பின் துரைமாரையும் சம்பிரதாயம் தவறாமல் தரிசிக்க லாமே என்று தோன்றியிருக்கிறது அவருக்கு. அதனால் தான் இந்தத் திருத்தணி திருப்படித் திருவிழா ஆரம்ப மாகியிருக்கிறது. அதோடு வருஷம் முந்நூற்று அறுபத் தைந்து நாட்களும் செய்த அக்கிரமங்களுக்குப் பிராயச் சித்தம் தேடுவது போல் 365 படிகளையும் ஏறிக் கடந்து முருகன் திருவடிகளிலே பாவச் சுமையை இறக்கி வைத்துவிட்டு நல்ல மனத்தோடு வீடு திரும்பும் மன நிறைவும் பெறலாம் அல்லவா என்று தோன்றுகிறது எனக்கு.

தணிகை என்றால் அமைதி என்று பொருள். சூர பதுமன் முதலியவர்களைச் திருச்செந்தூரில் சம்ஹாரம் செய்து, அந்த வெற்றிக்குப் பரிசாக இந்திரன் மகளாகிய தெய்வ யானையைப் பெற்றுத் திருப்பரங்குன்றத்தில் அவளை மணம் முடித்துக் கொண்டு அமைதியாக குடும்பம் நடத்த இந்தத் தேவசேனாபதி தேர்ந்தெடுத்த இடம் இந்தத் தணிகைமலை. சூரனோடு போர் செய்த பின் கோபமெல்லாம் தணிந்து இந்தத் தணிகையில் வந்து தங்கி யிருப்பதால் இத்தலத்தில் நடக்கும் கந்த ஷஷ்டி விழாவில் சூரசம்ஹாரம் கிடையாது. இப்படி அமைதி தேடி வந்து வணங்கும் பக்தர்களுக்கும் நல்ல மன அமைதியைத் தந்து தணிகாசலத்தின் புகழை நிலைபெறச் செய்து கொள்கிறான்.

திருத்தணி ஊருக்குச் சென்றதும் நம் கண் முன் நிற்பது தணிகைமலையும் அதன்மேல் ஓங்கி நிற்கும் கோயிலும், இம்மலையின், இரு புறத்திலும் மலைத் தொடர்கள் இருக்கின்றன. வடக்கே இருப்பது சற்று

வெளுத்திருப்பதால் பச்சரிசி மலை என்றும் தெற்கே இருப்பது சற்றுக் கறுத்திருப்பதால் பிண்ணுக்கு மலை என்றும் மக்கள் சொல்கிறார்கள். மலை அடிவாரத்தில் உள்ள திருக்குளம் சரவணப் பொய்கை. இந்தப் பொய் கையைச் சுற்றியும், மற்றும் மலை ஏறும் வழிகளிலும் எண்ணிறந்த மடங்கள், சத்திரங்கள், சுனைகள்,



மலையும் சரவணப் பொய்கையும்

தடாகங்கள்தான். ஆதலால் இந்தப் பகுதிக்கே சர்க்கார் கணக்கில் 'மடம் கிராமம்' என்று பெயர். சுகாதாரக் கொள்கைகள் இல்லாதவர்கள் சரவணப் பொய்கையில் நீராடி விட்டு மலை ஏறலாம். அதற்குத் துணிச்சல் இல்லாதவர்கள் தலையில் தீர்த்தத்தைப் புரோக்ஷித்துக் கொண்டு புறப்பட்டுவிடலாம்.

மலைமேல் ஏறுகிறபோது வழியில் இருக்கும் பிரம சுனை அங்குள்ள விநாயகர் பிரமலிங்கம் எல்லாவற்றை யும் தரிசிக்கலாம். மலை உச்சி சேர்ந்ததும், ரத வீதியில்

வலம் வரலாம். அங்குள்ள இந்திர நீலச் சுனையைப் பார்த்துவிட்டு, செங்கழுநீர் விநாயகரை வணங்கி விட்டு கோயினுள் நுழைந்தால் நாம் முதல் முதல் பார்ப்பது துவஜஸ்தம்ப விநாயகரும் ஐராவதமுமே. இங்கு ஐராவதம் சந்நிதியை நோக்கி நிற்காமல் கிழக்கு நோக்கி எங்கேயோ அவசரமாகப் புறப்படத் தயாராக நிற்பதுபோல் நிற்கிறது. தெய்வயானையின் சீதனப் பொருளாக வந்தது ஐராவதம் என்றும், அப்படி தேவ லோகத்தை விட்டு ஐராவதம் வந்து விட்டதால் அங்கு செல்வம் குறைய ஆரம்பித்ததென்றும். அந்தக் குறை நீங்க முருகன் ஆணைப்படி, கிழக்கேயுள்ள தேவலோகம் நோக்கி நிற்கிறது என்றும் ஸ்தல வரலாறு கூறுகிறது. எனக்கென்னவோ இது சரியான வரலாறு என்று தோன்றவில்லை. தெய்வயானையை மணந்தபின், இந்தக் குமரன் தம் மயில் வாகனத்தைத் துறந்துவிடுகிறார். (இத்தலத்தில் மூலவர் உத்சவர் பக்கத்தில் எல்லாம் மயில் இல்லை என்பது கூர்ந்து நோக்கிக் கவனிக்கத் தக்கது) ஆதலால் பக்தர்கள் குறை தீர்க்க வெளியே விரைந்து செல்ல வேண்டியிருந்தால் வாகனம் வேண்டாமா ? தெய்வயானை கொண்டு வந்த வெள்ளை யானையைத் தயாராக இருக்கும்படி கட்டளை இட்டு இருக்கிறான். அதுவும் 'எவர் ரெடி" என்பதுபோல் எந்த நேரமும் புறப்படத் தயாராய்க் கோபுர வாயிலை நோக்கியே நிற்கிறது என்றுதான் சொல்லத் தோன்றுகிறது எனக்கு.

இனி, கோயிலுக்குள்ளேயே நுழையலாம். அருள் ஞான சக்தி தரனின் அடி பணிவதற்கு முன்னே அர்ச்சகர் நம்மை அழைத்துச் செல்வது, ஆபத் சகாய விநாயகர் சந்நிதிக்குத்தான். உத்சவ மூர்த்தியும் சண்முகரும் இருக்கும் மண்டபத்திலே, கிழக்கு ஓரத்திலே பெரிய உருவிலே இவர் இருக்கிறார். தணிகையில்

வந்து தேவசேனையுடன் அமைதியாக இருக்க விழைந்த இந்தக் குமரன் வாழ்விலும் காதல் குறுக்கிட்டிருக்கிறது. பக்கத்திலே உள்ள குன்று ஒன்றிலே குறப் பெண்ணாக வளரும் வள்ளியை மணக்க விரும்புகிறார். அதற்காக என்னென்னவோ பிரயத்தனங்கள் செய்கிறார். கடைசியில் அந்தப் பொல்லாத வள்ளியை வழிக்குக்கொண்டு வர, அருமை அண்ணாவின் துணையை நாடுகிறார். அவரும் இவருக்கு அந்த ஆபத்தில் உதவுகிறார். அதனால் வள்ளிமலைக் குறத்தி வள்ளியைத் தட்டிக் கொண்டு வந்து விடுகிறார். இப்படி வள்ளியை மணம் புரியதக்க சமயத்தில் உதவிய அண்ணாவுக்கு, பூஜா நேரத்திலும் உத்சவ காலங்களிலும் அக்ர ஸ்தானமே கொடுத்து விடுகிறார். முருகன் மாத்திரம் என்ன, நாமும் ஆபத்சகாயரது சகாயத்தை எப்போதும் நாடுகிறவர் தாமே. நமக்கு வரும் மலைபோன்ற ஆபத்துகளும் பனிபோல் நீங்க வேண்டும் அல்லவா!

இனி கர்ப்பக்கிருஹத்துக்கே சென்று அங்கு கோயில் கொண்டிருக்கும் அருள்ஞான சக்தி தரனைத் தரிசிக்கலாம். ‘பொன்னிறக் காந்தளோடு, செங்குவளை மலர்களும், பொற்பமர் கடம்பமலரும். பூந்தளிர் குறிஞ்சியும், சேத்த கூதளமும் புனைந்த திரு மார்பு உடை அழகனாக அவன் அங்கே நிற்கிறான். இங்குள்ள குமரன் ஆபத் சகாய விநாயகரை ஸ்தாபித்த பின் குமரேசுவர் என்னும் சிவலிங்கப் பிரதிஷ்டையும் செய்கிறான். அன்னையோ தன்னுடைய சக்தியை எல்லாம் ஒன்றாகத் திரட்டி ஞானசக்தியை வேல் வடிவிலே அளிக்கிறாள் தன் மைந்தனுக்கு. சூரபத்மனை சம்ஹரிக்கத் தன் அன்னையிடம் வேல்பெற்ற முருகன், மக்களுக்கெல்லாம் ஞானாசிரியனாக இருந்து அருள் செய்ய மற்றொரு வேலைப் பெறுகிறான் தந்தையிடம். அதனால்தான் அருள்ஞான சக்தி தரன் என்ற திருப் பெயரும் தாங்கு

கிருன். இந்த மூர்த்தி இங்கு மயில் தேவானை வள்ளி யின்றித் தனித்தே இருக்கிருன். அமைதி நாடிய அண்ணல், அணங்குகள் இருவரைப் பக்கத்தில் வைத்துக் கொண்டால் அமைதி பெறுவதேது ? நல்ல அழகிய சுந்தரமூர்த்தியாக அவர் நிற்கிருர். தணிகையின் இணையிலியாக இவர் நிற்கும் அழகைக் காணத்துடித்த இராமலிங்க அடிகள் 'தணிகை மலையைச் சாரேனே ! சாமி அழகைப் பாரேனே ?' என்று ஏங்கியிருக்கிருர், தமது அருட்பாவில். எவ்வளவு நேரம் வேண்டு மானுலும் பார்த்துக் கொண்டே நிற்கலாம் இந்த மூர்த்தியின் அழகை.

எப்போதும் அலங்காரம் செய்யப்பட்ட வண்ணமாகவே இருக்கும் மூர்த்தியை வணங்குவதைவிட அணிகளையும் பணிகளையும் களைந்து, அபிஷேகத்துக்கு ஆயத்தமாக இருக்கும் நிலையில் கண்டு தொழுவதே கலை அன்பர்கள் விரும்புவதொன்று. கோயில் நிர்வாகிகளைக் கலந்து எப்போது வேண்டுமானுலும் அபிஷேகத்துக்கு ஏற்பாடு செய்து கொள்ளலாம். இல்லை என்ருல் கிருத்திகைதோறும் அபிஷேகம் நடக்கும் காலம் அறிந்து சென்று கண்குளிரத் தரிசிக்கலாம். அப்படி அபிஷேகம் நடக்கும்போது கூர்ந்து கவனித்தால், அக்குமரனின் மார்பகத்திலே ஒரு குழி இருப்பதைக் காணலாம். அன்று தாரகாசுரனுல் விடப்பட்ட சக்கரத்தைத் தன் மார்பிலே ஏந்தி அதை அங்கேயே பதித்துக் கொண்டதாகவும், பின்பு இத் தணிகைமலையானை திருமால் பூசித்தபோது, தன் மார்பகத்திலிருந்த சக்கரத்தை எடுத்துத் திருமாலுக்கு வழங்கி விட்டதாகவும் புராணம் கூறுகிறது. சக்கரம் பதிந்திருந்த இடந்தான் இன்று குழியாக இருக்கிறது. இம் மார்பகங் குழிந்த திருவடையாளத்தைக் கண்டு தொழுவோர் இடர் ஒழித்து இன்ப வீடு அடைவர் என்பது பக்தர்களது

நம்பிக்கை. அதனால் இந்த நம்பிக்கை உடையவர்கள் எல்லாம் சென்று தொழ வேண்டியது அபிஷேக காலத்திலேயே.

இந்தப் பெருமானை மும்மூர்த்திகளும் வழிபட்டனர் என்பர். அதனால் அருணகிரியார் திரிமூர்த்திகள் தம்பிரானே என்று பாடுவர். நாமும் இத்திரிமூர்த்திகள் தம்பிரானை வணங்கியபின் அவனுக்கு இடப்பக்கமும் வலப் பக்கமுமாகத் தனிக் கோயில்களிலே இருக்கும் தெய்வயானை வள்ளி இவர்களைக் கண்டு தொழலாம். தேவசேனையின் வலக்கரத்தில் நீலோற்பலமும் வள்ளியின் இடக்கரத்தில் தாமரையும் இருப்பதைத் தவிர இந்த அம்பிகைகளின் சிலா வடிவங்களில் சிறப்பான அம்சம் ஒன்றும் இல்லை. இதோடு மலராலும் நகையாலும் அலங்கரிக்கப்பட்டு உருத்திராக்கத்தைக் கொண்டே விதானம் அமைக்கப்பட்ட விமானத்தில் வள்ளி தேவசேனா சமேதனாக நின்று கொண்டிருக்கும் உற்சவ மூர்த்தியையும் வணங்கிவிட்டு வெளியே வரலாம்.

இக்கோயில் பழம் பெருமை வாய்ந்ததோடு தமிழ் நாட்டோடு நெருங்கிய தொடர்பு கொண்டும் இருக்கிறது. இன்னும் சில மாதங்களில் கோயில், கோயிலைச் சுற்றிய நகரம், நகரத்தைச் சுற்றிய தாலூகா எல்லாமே தமிழ் நாட்டோடு இணைந்து விடப் போகிறது. அன்று கைலையிலிருந்து தென்பொதிகை நோக்கி வந்த அகத்தியரை இடைநிறுத்தி இலக்கணம் கற்பித்து அனுப்பியவரே இத்தணிகைக் குமரன்தான். 'என்றுமுளதென் தமிழை அன்று முதல் இயம்பி இசை கொண்டவனா'கத்தானே அகத்தியன் பொதிகை வந்து சேருகிறான்.

ஆம்! தமிழைப் பொதிகைக்கு அளித்த பெருமையே இத் தணிகாசலத்துக்குத்தான். அத்தணிகை தமிழகத்தோடு இணைவதும் பொருத்தம்தானே.

# 4

# சிங்கபுரத்து நரசிங்கன்

---

மகாவிஷ்ணு எடுத்த தச அவதாரத்தில் நரசிம்ம அவதாரம் ஒன்று. மற்ற அவதாரங்களைவிடப் பார்ப்பவர் உள்ளங்களில் அச்சத்தை விளைவிக்கும் பயங்கரமான அவதாரம் அது. மனித உடலும் சிங்க முகமுமாக இருக்கும் உருவம் ஆதலால் பார்ப்பதற்கே அஞ்சுவோம் நாம்; உபாசிப்பதற்கோ துணிவு வராது நமக்கு. பக்தன் பிரகலாதனுக்காக, இரணியனைச் சம்ஹரிக்கத் தூணைப் பிளந்துகொண்டு உதித்த மூர்த்தி, இரணியன் உடலைக் கிழித்து உதிரம் குடிக்கும் நிலையில் காண்போர் அஞ்சி நிலைகுலைவதில் அதிசயம் இல்லைதானே? 'ஊன் கொண்ட வள் உகிரால் இரணியனை உடல் கிழித்த' நரசிம்ம அவதாரத்தை கவிச்சக்கரவர்த்தி கம்பன் மிகவும் அழகாகச் சொல்கிறான். பேரண்டம் முழுவதும் வியாபித்து இருக்கும் பரம்பொருள் தொட்ட தொட்ட இடமெல்லாம் தோன்றுவான் என்கிறான் பிரகலாதன். அதைக் கேட்டு ஏளனமாகச் சிரித்துவிட்டு 'இந்தத் தூணில் இருக்கிறானா?' என்று கேட்கிறான் இரணியன். 'இந்தத் தூணில் மாத்திரம் என்ன, நீ சொல்கிறாயே, கடவுளாவது தெய்வமாவது என்று

அந்தச் சொல்லில்கூட அவன் இருக்கிருனே' என்று வாதமிடுகிருன் பிரகலாதன். இந்த நிலேயில் தூணை எற்றுகிருன் இரணியன். தூணில் பிறக்கிருன் நரசிம்மன். கம்பன் சொல்கிருன் அதை:

நசை பிறந்து இலங்கப் பொங்கி
நன்று நன்று என்ன நக்கு
விசை பிறந்து உருமு வீழ்ந்தது
என்ன ஓர் தூணின், வென்றி
இசை திறந்து அமர்ந்த கையால்
எற்றினன்; எற்றலோடும்
திசை திறந்து அண்டம் கீறி
சிரித்தது செங்கட் சீயம்

செங்கட்சீயம் சிரித்த காட்சியே இத்தனை பயங்கரம் என்ருல் சீறி எழுகின்ற சிங்கப்பிரானது திருவுருவம் எவ்வளவு பயங்கரமாக இருக்கும் என்று தெரிந்து கொள்ளலாம் அல்லவா?

இறைவனுடைய சக்தி பூமியோடு மட்டும் நிற்பதல்ல, வான் முகடு முழுவதும், எட்டுத் திசைகளையும் தொட்டு நிற்கும் என்ற உண்மையைத் தானே இந்த் மூர்த்தம் விளக்குகிறது. இந்த மூர்த்தி பயங்கர உருவத்தில்தான் இருக்கவேண்டுமா? சாந்தமூர்த்தியாக இருத்தல் கூடாதா என்று எண்ணியிருக்கிருர்கள் கலேஞர்கள். ஆதலால் நரசிம்மனது மடியிலே ல்க்ஷ்மியை இருத்தி லக்ஷிமி நரசிம்மனைக் கண்டிருக்கிருர்கள். யோக நிலேயில் இருந்து மக்களுக்கு எப்போதும் அருள் புரிபவனைக் கற்பனை பண்ணி யோக நரசிம்மனை சிருஷ்டி பண்ணியிருக்கிருர்கள். அப்படிப்பட்ட ஒரு சாந்த நிலேயிலே யோக நரசிம்மனை, கோயில் கொண்டிருக்கும் இடந்தான்சோழசிங்கபுரம் என்னும் சோளங்கிபுரம். ஆங்கிலத்தில் சோளிங்கர் என்ற பெயரோடு

வட ஆற்காடு மாவட்டத்திலே திருத்தணிகைக்கு மேற்கே இருபது மைல் தூரத்திலே இருக்கும் ஒரு பெரிய ஊர் அது.

இச்சோழங்கிபுரம் அன்று கடிகாசலம் என்ற பெயரோடு விளங்கியிருக்கிறது. கடிகை என்ருல் வடமொழியில் ஒரு நாழிகை என்று பொருள். இந்த ஸ்தலத்தில் ஒரு நாழிகை நேரம் தங்கியிருந்து அங்குள்ள யோக நரசிம்மனைக் கண்டு வணங்கினுல், முக்தி பெறலாம் என்பதன் காரணமாகவே, இத் திருப்பதி கடிகை என்று பெயர் பெற்றிருக்கிறது.

தொண்டை நாட்டிடையே, சோழநாடுபோல வளம் மிகுந்து, நரசிங்கமூர்த்தி தங்குவதற்கு வசதியான இடமாக இருப்பதனுல் சோழ சிங்கபுரம் எனப் பெயர் பெற்றிருக்க வேண்டும். அது எல்லாம் இல்லை. இந்த ஊரில் சோழ மன்னன் ஒருவன் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தான்; அதனுலேயே சோழலிங்கபுரம் என்று பெயர் பெற்றது; சோழலிங்கபுரமே நாளடைவில் சோழசிங்கபுரம் என்று மாறிற்று என்று கூறுவாரும் உளர். இதை வலியுறுத்தச் சோழிசுவரர் கோயில் என்று ஊரின் நடுவில் இருக்கும் கோயில் ஒன்றையும் காட்டுவர். இதன் உண்மை எப்படி இருந்தாலும் சோழலிங்கேசுவரர் இன்று சோழ நரசிம்மனுக்கு விட்டுக்கொடுத்துவிட்டுக் கொஞ்சம் ஒதுங்கியே வாழ்கிருர். ஆதலால் நாமும் சோழ நரசிம்மருக்கே பிரதானம் கொடுத்து, சோழ சிங்கபுரம் என்ற பெயராலேயே இந்த ஊரை அழைக்கலாம்.

இந்த யோக நரசிம்மனது கோயில் கிட்டத்தட்ட நானூறு அடி உயரமுள்ள ஒரு மலையின்மேல் இருக்கிறது. எந்தத் திக்கிலிருந்து கோயிலை நெருங்கினுலும் கோயிலும் மலையும் பத்து மைல் தூரம் வரை தெரியும். எங்கு சுற்றினுலும் திருத்தணி சித்தூர் ரோடுக்கு வந்து

அதிலிருந்து பிரியும் பாதை வழியாக மலையடிவாரத்துக்கு வந்து சேரலாம். அடிவாரத்திலிருந்து மலையைப் பார்த்தால் அங்குள்ள கோயிலுக்கு ஏற முடியுமா என்று பிரமித்து நிற்போம். காரணம் கோயில் இருக்கும் மலை உயரமானதென்று அல்ல. அந்த மலைமேல் நிற்கும் கோயிலோடு போட்டி போட்டுக்கொண்டு கோயிலுக்கு முன்னாலே நீண்டு வளர்ந்து நிமிர்ந்திருக்கும் இன்னொரு குன்றுதான் அம்மலைப்பை ஏற்படுத்தும். இதைப் பற்றிக்கூட ஒரு கதை; பைரவேசுவரரது ஆணையின் படி இந்தக் குன்று வளர்ந்து கொண்டே போயிற்றும். அதன் வளர்ச்சி தேவலோகத்தை முட்டிவிடும்போல் இருக்கிறதே என்று எண்ணிய இந்திரன் பலராமனைக்



நரசிம்மர் கோயிலும் படிகளும்

கொண்டு தடுத்து நிறுத்தினான். அதனால்தான் இம் மட்டமோடு நிற்கிறது என்பார்கள் அங்குள்ள மக்கள்.

ராயோஜி என்பவரால் மலைமேல் உள்ள கோயிலுக்கு ஏறப் படிக்கட்டுகள் கட்டப்பட்டன என்று தெரிகிறது. இந்தப் படிக்கட்டுகள் மிகவும் கரடுமுரடாக

இருந்தன என்ற காரணத்தால்—நன்ருகப் புதுப்பித்து அகலமான புதிய படிகளை ஏறுபவர்களுக்கு வசதியாக இருக்கச் சுற்றி வளைத்தே கட்டுகிருர்கள். இன்று படிக் கட்டு வேலை முடியும் தறுவாயில் இருக்கிறது. இப்போது இப்படிக்கட்டுகளின் வழியாக ஏறுவது மிகவும் சுலப மாக இருக்கும். ஒரே ஒரு எச்சரிக்கை. மலை ஏறுபவர் கள் பகல் பதினெரு மணிக்குள்ளோ மாலை நாலு மணிக்கு மேலேயோ ஏறுவது நல்லது. வழியில் மரஞ் செடிகள் எல்லாம் இல்லாததினுல், இதற்கு இடைப்பட்ட காலத்தில் படிகள் கொதித்துக் கொண் டிருக்கும். காலைத் தகிக்கும். இந்தப் படிகள் ஏறும் போது, இந்த இடத்தைத்தாஞ 'வண்டு வளம் கிளரும் நீள் சோலை வண்பூங் கடிகை' என்று பேயாழ்வார் பாடினுர் என்று ஐயம் தோன்றும்.

ஆயிரத்துக்கு மேற்பட்டிருக்கும் படிகள் ஏறி மலைச் சிகரத்தை நெருங்கினுல், கோயிலின் பிரதான வாயில் வடக்கு நோக்கி இருப்பதைக் காண்போம். கோயிலை வலமாகச் சுற்றி வளைந்து உள்ளே சென்ருல், கிழக்கு நோக்கிய வண்ணம் யோக நரசிம்மர் வீற்றிருக்கும் திருக்கோலத்தைக் காணலாம். எப்போதுமே மாலை அலங்காரத்துக் குள்ளேயே இருப்பவர் அவர். அவர் கோலம் எப்படி இருக்கும் என்பதை நேரில் சென்று தான் காணவேண்டும். மூல மூர்த்தி நல்ல கம்பீரமான திருவுருவம். கண்களிலே ஒரு அழகான சாந்தம். யோக நிலையில் இருந்து மனத்தை ஒரு நிலைப்படுத்தி, பக்தர்களில் குறைகளைக் களைவதிலே அவனுக்கு ஒரே ஆர்வம். வசதி உள்ளவர்கள் வெள்ளிக்கிழமை காலை பத்து மணியளவுக்கு மேல் நடக்கும் திருமஞ்சன சேபையில் கலந்துகொண்டால் மூர்த்தியின் வண் ணத்தை முழுவதும் கண்டுகளிக்கலாம். பக்கத்தில்

இருக்கும் அமிர்தவல்லித் தாயாரையும் தொழுது அருள் பெறலாம்.

இந்த மலைமீது உள்ள யோகநரசிம்மனை அன்று திருமங்கை ஆழ்வார் கண்டு வணங்கியிருக்கிறார். இவர் தக்க பெருமை உடைய தயாளு என்று உணர்ந்திருக்கிறார். மேலும் வெல்லம்போல் இனிப்புள்ள கனியாக விளங்குகிறான் அனுபவிப்பவர்களுக்கு. ஆதலால் 'மிக்கான்' என்றே இந்த மூர்த்தியை அவர் நமக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறார்.

> மிக்கானை, மறையாய் விரிந்த
> விளக்கை, என்னுள்
> புக்கானைப் புகழ் சேர்
> பொலிகின்ற பொன்மலையை,
> தக்கானை, கடிகைத் தடங்
> குன்றின் மிசை இருந்த
> அக்காரக் கனியை
> அடைந்து உய்ந்து போனேனே.

என்று பரவசத்தோடே பாடியிருக்கிறார். பிரபந்தப் பாடல்கள் நாலாயிரத்தில், கடிகாசல நரசிம்மனைப் பற்றிய முழுப்பாடல் இது ஒன்றுதான். ஒரு பாட்டு என்றாலும் ஒப்பற்ற பாட்டு. எத்தனை தரம் வேண்டுமானாலும் பாடிப் பாடி அனுபவிக்க வேண்டிய பாட்டு.

இத்தலத்திலே இத்துணைப் பெருமையுடைய தக்கானுக்கும் மிக்கானாக இன்னொரு மூர்த்தி இருக்கிறார், மற்றொரு சிறிய குன்றிலே. அவர்தான் யோக ஆஞ்சநேயர். இவரைக் காண, பெரிய மலையை விட்டுக் கீழே இறங்க வேணும், அடிவாரத்தில் கொஞ்ச தூரம் நடக்க வேணும், படிகளின் வழியாய்ச் சுமார் இருநூறு அடி உயரமுள்ள மலைமீது திரும்பவும் ஏறவேணும். இங்கு படிகள் எல்லாம் புதுப்பிக்கப் படவில்லை. இங்கேயும்



யோக ஆஞ் சநேயர் கோயில்

கோயிலின் பிரதான வாயில் வடக்கு நோக்கி யிருந்தாலும், சந்நிதி மேற்கு நோக்கியே இருக்கிறது. தம்முடைய தலைவனை நரசிம்மனை எதிர்நோக்கியவராய், தம்முடைய வீர உணர்ச்சியை யெல்லாம் அடக்கிக் கொண்டு நரசிம்மனைப் போலவே யோக நிலையிலே தான் இருக்கிறார் இவர். யோக நரசிம்மனையாவது, மற்றும் சில தலங்களிலே கண்டு தொழலாம், யோக ஆஞ்சநேயரை இத்தலத்திலன்றி வேறு தலங்களில் காண முடியாது என்றே சொல்கிறார்கள்.

இவர் யோக மூர்த்தி மட்டும் அல்ல, அற்புதமான அஹிம்சா தர்மத்தை நிலை நிறுத்திய மூர்த்தியும்கூட. அன்று வட மதுரையை ஆண்டு வந்த இந்திரத் துய்மன் என்ற ஓர் அரசன் வேட்டை ஆடியிருக்கிறான். வேட்டையில் ஒரு பெண் மானைத் துரத்திக்கொண்டு இந்த மலையை அடுத்த காட்டுக்கே வந்திருக்கிறான். மானின் மீது அம்பு தொடுக்க முனைந்தபோது, மான் இருந்த இடத்தில் ஒரு ஜோதி தோன்ற அதைத் தொழுது வணங்கி, அன்று முதல் வேட்டையாடுவதையே நிறுத்தியிருக்கிறான். பின்னர் கும்போதரன் என்ற அரக்கனுடைய கொடுமையையும் ஒழித்து, இந்தப் பிரதேச மக்களையே காப்பாற்றியிருக்கிறான்.

நரசிம்மனது ஆணையின்படியே, ஆஞ்சநேயர்தான் ஜோதியாகத் தோன்றி, வடமதுரை மன்னனைச் சிறந்த அஹிம்சா வாதியாக ஆக்கியிருக்கிறார். இந்தச் சேவையை மெச்சியே, இவருக்குச் சங்கு சக்கரமும் சதுர்ப்புஜமும் அருளி இந்தத் தலத்தில் கோயில் கொண்டிருக்கச் செய்திருக்கிறான் நரசிம்மன்.

இதனாலெல்லாம் இந்த யோக ஆஞ்சநேயர் பிரசித்தியடையவில்லை. மக்கள் பிணி தீர்க்கும் மருத்துவனாக அமைந்து தான் தக்க புகழை இன்று தமக்குத் தேடிக்கொண்டிருக்கிறார். மக்களின், அதிலும் பெண்களின் தீராத உடல் நோயை மாத்திரம் அன்றி மன நோயையுமே தீர்த்து வைக்கிறார் இவர். பேய் பிசாசு பிடித்துள்ள பெண்களை இங்கு கூட்டிவந்து மலைமேலுள்ள அனுமந்த தீர்த்தத்தில் முழுகி எழச்செய்து, அனுமார் சந்நிதியில் கொண்டுவந்து இருத்தி விட்டால் போதும். ஏதோ கொஞ்ச நேரம் ஆட்டம் போட்டாலும் அதன்பின் அமைதியாய்ப் படுத்துத் தூங்கி விடுகிறார்கள் பெண்கள். தூங்கி எழுந்தால் பிணி நீங்கி யிருக்கிறது. பேயும் பிசாசும் மலையைவிட்டு இறங்கியே ஓடி யிருக்கிறது. இப்படி மக்கள் பிணி தீர்க்கும் அருளாளனாக இருப்பதனால் தான், இன்றும் நூற்றுக்கணக்கான தேசாந்திரிகள் இங்கு வந்து, இங்



பக்தவத்ஸலர்

குள்ள நரசிம்ம தீர்த்தம் முதலிய திருக்குளங்களில் நீராடி நியமங்களை யெல்லாம் அனுஷ்டிக்கிறார்கள். கார்த்திகை மாதத்தில் இந்த ஊரும், இக்குன்றுகளும், இக்கோயில் களும் 'ஜாம் ஜாம்' என்றிருக்கும்.

இந்த யோக நரசிம்மரும், யோக ஆஞ்சநேயரும் நல்ல சிலா விக்கிரகங்கள். உற்சவ மூர்த்திகளாக—செப்புச் சிலை வடிவில் இவர்கள் உருவாகவில்லை. ஆதலால் உற்சவமெல்லாம் இம்மலைகளைவிட்டு ஒரு மைல் தொலைவில் ஊருக்கு மத்தியில் இருக்கும் பக்தவத்ஸலருக்குத்தான். இவர் யோக நிலையில் இல்லை. ஸ்ரீதேவி, பூதேவி சகிதமாக நல்ல போக நிலையில்தான் இருக்கிறார். யோகமும் போகமும் ஒன்றிய நிலையில் மூர்த்திகளைக் கண்டு வணங்க வசதியாக இத்திருப்பதி அமைந்திருப்பது விசேஷம்தானே. இந்த பக்தவத்ஸலர் கோயில், நாயக்க மன்னர்கள் காலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும். விஸ்தாரமான வெளிப் பிராகாரங்கள், மண்டபங்கள் எல்லாம் நிறைந்திருக்கின்றன இங்கே.

இந்தச் சோழசிங்கபுரம் பதினெட்டாம் நூற்றாண்டின் கடைசியில் ஒரு போர்க்களமாகவும் இருந்திருக்கிறது. 1781-ம் ஆண்டில் கூட் (Coote) என்ற படைத்தலைவன் தலைமையில் ஆங்கிலப் படையும் மைசூர் ஹைதர் அலியின் படையும் கைகலந்திருக்கின்றன. இங்கு நடந்த போரில் மாண்ட மகமதிய சேனை வீரர்கள் இருவரது சமாதி இன்னும் இருக்கிறது இங்கே. இவர்களைப் பற்றிய நினைவுச் சின்னமெல்லாம், இங்குள்ள சப்ரிஜிஸ்திரார் ஆபீசிலே நின்றுகொண்டிருக்கிறது. சரியான இடம்தான். போரில் காட்டிய வீரத்தையெல்லாம் பதிந்துவைக்க ஆவணக் களரியைவிட சிறந்த இடம் வேறு ஏது ?

---

உதயம்

# 5

# வள்ளிமலை வள்ளி

சென்ற சில வருஷங்களுக்கு முன் நான் பூனு நகரத்துக்குப் போயிருந்தேன். இரண்டு மூன்று நாட்கள் தங்கினேன். ஒருநாள் காலை, அங்குள்ள தமிழ் அன்பர்கள் சிலரோடு நகரத்துக்குப் பக்கத்திலே உள்ள பார்வதி மலையில் உள்ள கோயில்களைப் பார்க்கச் சென்றேன். என் மனைவியும் உடன் வந்திருந்தாள். மலை பெரிய மலை இல்லை. திருத்தணி மலை உயரமே இருக்கும். ஆனால் அங்கு கட்டி யிருப்பதுபோல் அழகான படிக்கட்டுகள் இல்லை; மண்டபங்களும் இல்லை. படிக்கட்டு விசாலமாக இருந்தது. படிக்கட்டு கட்டிய மராத்திய மன்னர்கள் குதிரைமேல் ஏறிக்கொண்டே மலைமேல் உள்ள கோவிலுக்குச் செல்வார்களாம். மலைச் சிகரத்தை அடைந்த உடன் நாங்கள் கண்டது தேவ தேவன் கோயில். 'தேவர்கோ, அறியாத தேவ தேவனை' வணங்கிவிட்டு, பக்கத்திலே இருக்கும் பண்டரிபுரம் விட்டல், பவானி அன்னை, மகாவிஷ்ணு முதலியவர்களது கோயில்களுக்குச் சென்றோம். கடைசியாக, தேவ தேவன் கோயிலுக்கு வலப்புறமாக உள்ள ஒரு



வள்ளிமலை வள்ளி

சிறு கோயில் வாசலுக்கு வந்து சேர்ந்தோம். கோயில் வாசலில் ஒரு பலகை. அதில் 'இந்தக் கோயிலுக்குள் பெண்கள் அனுமதிக்கப்பட மாட்டார்கள்' என்று ஆங்கிலத்திலும் மராத்தியிலும் எழுதியிருந்தது. இதற்குக் காரணம் என்ன என்று என் உடன் வந்த நண்பர்களை விசாரித்தேன். 'இங்கு கோயில் கொண்டிருப்பவன் கார்த்திகேயன். அவன் பிரம்மச்சரிய விரதம் அனுஷ்டிக்கிறவன். ஆதலால் அவன் பெண்களையே பார்க்கிறதில்லை என்ற வைராக்கிய சித்தனாக இருக்கிறான்' என்றார்கள். 'சரி' என்று என் மனைவியைக் கோயிலுக்கு வெளியே நிறுத்திவிட்டு நானும் அன்பர்களும் மட்டும் உள்ளே சென்றோம். உள்ளே கோயில் கொண்டிருப்பவன் நமக்கு மிகவும் அறிமுகமான ஆறுமுகன்தான். பளிங்கில் அமைந்திருந்த சிறிய உருவம். மயில்மேல் ஆரோகணித்திருந்தான் அவன். கார்த்திகைப் பெண்களான 'அறுவர் பயந்த ஆறு அமர் செல்வன்' அல்லவா? ஆதலால் அவனைக் கார்த்தி

கேயன் என்று அழைக்கிறார்கள் அங்கே. ஆமாம், அறுமாமுகவன், தமிழ் நாட்டில் ஒன்றுக்கு இரண்டாக, வள்ளி தெய்வயானையை மணந்தவன் இங்குமட்டும் பிரம்மச்சாரி என்று வேஷம் போடுவானேன் என்று எண்ணினேன். நண்பர்களைக் கேட்டேன்; விடை கிடைக்கவில்லை. அன்று மாலை பூனாத் தமிழ் அன்பர்கள் நடத்தும் கலைக் கழக விழாவிலே எனக்கு ஒரு பேச்சு. அங்குள்ள தமிழ் அன்பர்கள் திரளாக வந்திருந்தார்கள். பூனாவிலேயே பிறந்து வளர்ந்த மராத்தியர்கள் சிலரும் வந்திருந்தார்கள். விஷயம் விளங்கிற்று எனக்கு அப்போது. தமிழ் நாட்டுக் குறமகள் நம்பிராஜன் புத்திரி வள்ளியைக் கண்டு சொக்கி, அவள் காதலைப் பெற எவ்வளவோ தகிடுதத்தங்கள் செய்து, அந்த அழகியை மணம்புரிந்தவன், முக்காடிட்ட தலையோடும், வளையங்கள் அணிந்த மூக்கோடும் வரும் அந்த நாட்டுப் பெண்களைக் காணச் சகிப்பானா? இதை அப்பட்டமாகச் சொல்ல முடியாமல்தான் சும்மா பிரம்மச்சாரி வேஷம் போட்டு அங்குள்ளவர்களை யெல்லாம் ஏமாற்றிக் கொண்டிருக்கிறான். ஆம். அவன் 'கலைபயில் புலவன் கார்த்திகேயன்' அல்லவா? ஏமாற்றுவதையே ஒரு கலையாகக் கற்றிருக்கிறான் என்று தோன்றிற்று எனக்கு.

வள்ளியை வேலன் மணந்த வரலாறு நிரம்ப ர்ஸமான கதை. எவ்வளவோ காலமாக, காவியமாக, கதா கால க்ஷேபமாக எல்லாம் எத்தனையோ தடவை கேட்ட கதை. எத்தனையோ நாடக மேடைகளில், வெள்ளித் திரைகளில் எல்லாம் பார்த்தும் அலுக்காத கதை. ஆனால் இந்த வள்ளி பிறந்த இடம், அவள் ஆலோலம் பாடிய பரண், அவளை முருகன் கண்டு காதலித்து மணம் புரிந்து கொண்ட தலம் எல்லாம் எங்கிருக்கின்றன என்று இன்றுவரையில் நிச்சயமாக இல்லை. திருநெல்வேலி ஜில்லாவில், கன்னியாகுமரி

செல்லும் வழியில் ஒரு வள்ளியூர் இருக்கிறது. அங்கு வள்ளி பிறந்து வளர்ந்ததாக வரலாறு இல்லை. திருச்செந்தூரில் வள்ளி ஒளிந்த குகை ஒன்று இருக்கிறது. திருச்செந்தூரில் முருகன் நிகழ்த்தியது, சூரசம்ஹாரம். அதற்குப் பரிசாக, தேவேந்திரனிடம், அவன் மகள்



வள்ளிமலைக் கோயில்

தேவசேனையை மனைவியாகப் பெற்றது திருப்பரங்குன்றத்திலே. மேலும் வள்ளியைக் கண்டு மையல் கொண்டு, அவள் தந்தை தமையன் முதலியோரைக் கண்டு ஓடி ஒளிந்தவன் முருகனே தவிர, முருகனைக் கண்டு வள்ளி ஒளிந்ததாகப் புராணக் கதை ஒன்றும் இல்லை. ஆதலால் 'மலைமேவு மாயக் குறமாதான' வள்ளியைத் திருநெல்வேலி ஜில்லா வாசிகள், தங்கள் நாட்டுக்காரி அவள் என்று உறவு கொண்டாட முடியாதுதான்.

ஆதலால் 'முற்றுப் பசுங்கதிர் செவ்வேனல் காத்த அந்த நீல வள்ளி,' அவள் பெயராலே வழங்குகின்ற வள்ளிமலையைச் சேர்ந்தவளாகத் தான் இருத்தல்

வேண்டும். 'தெய்வ மகளான தேவசேனையை மணந்த பின், தணிகை சென்று அமைதியாகக் குடும்பம் நடத்த விரும்பிய அந்த அருள்ஞான சக்திதரனிடம் ஒரு காதற் கலகத்தையே ஆரம்பித்து வைக்கிறார் நாரதர். 'தேனென்று பாகென்று உவமிக் கொணாத் தெய்வ வள்ளி' அவள் என்று ஆசையையே மூட்டுகிறார். அதோடு, அவள் தணிகைக்கு அணித்தே உள்ள மலையில் வாழ்பவள் என்றும் சொல்கிறார். அவ்வளவு தான், புறப்பட்டு விடுகிறான் முருகன்; கால் கடுக்க நடந்தே செல்கிறான். வேட்டுவப் பெண்ணை மணக்க விரும்பிய குமரன் வேடனாகவே வேஷம் போடுகிறான். வேட்டையாடி வந்த மானைத் தேடிவரும் வில்லனாக (வில்லை ஏந்தியவனாக) தினைப்புனம் காக்கும்வள்ளியை அணுகிறான். அவளிடம் காதல் மொழி பேசுகிறான். அவள் கோபித்து, தந்தையையும் தமையன்மாரையும் அழைத்தபோது, அங்கேயே வேங்கை மரமாக நிற் கிறான். பின்னர், அவளது தந்தையாம் நம்பிராஜனையே கைக்குள் போட்டு விருத்தனாக மாறி, கள்ளச் சிறுமி யாம் வள்ளியை வேட்கிறான். அதுவும் பலன் தராதது கண்டு தன் சகோதரன் விநாயகனையே தொழுது யானையைக் காட்டிப் பயமுறுத்தி, அவள் தன்னைக் கட்டித் தழுவச் செய்கிறான். பின்னர், தன் மெய்யுருவை அவளுக்குக் காட்டி, அவளை மணம் புரிந்து கொள்கி றான். இப்படித்தான் திருத்தணிப் பதியில் வாழும் முருகன், குறமகள் மருவிய பெருமாளாக மாறுகிறான். ஞான சக்தியாகிய வேலேந்திய குமரன், கிரியா சக்தி யான தெய்வயானையை மணந்த பின், இச்சாசக்தியான வள்ளியையும் மணந்து கொள்கிறான் என்று சொல்லு வது பொருத்தம் தானே?

இந்த வள்ளி பிறந்து வளர்ந்த இடம்தான் வள்ளிமலை. வள்ளிக்கிழங்கு தோண்டி எடுத்த இடத்தில் மகாலக்ஷ்

மியின் அவதாரமான மான் வயிற்றிலே பிறக்கிருள். அதனுல் அவளைத் தேடி எடுத்த நம்பிராஜன் என்னும் வேடுவர் தலைவன், அவளை வள்ளி என்றே அழைக்கிருன். இந்த "வள்ளி படர் சாரல் வள்ளி மலை" சென்று வள்ளியை மணந்து வள்ளி மணவாளன் ஆகிருன் என்று அருணகிரியார் அறுதியிட்டு உரைக்கிருர். இந்த வள்ளிமலை இன்று இருப்பது ஆந்திர ராஜ்யத்திலே. சென்னை ராஜ்யத்திலே உள்ள வட ஆற்காடு மாவட்ட எல்லையிலிருந்து எட்டிப் பிடிக்கும் தூரத்திலேதான் இருக்கிறது. சென்னை பங்களூர் ரோட்டில் பெண்ணையாற்றின் கரையில் உள்ள திருவலம் என்னும் தலத்திலிருந்து வடக்கே பத்து மைல் தொலைவில் இருக்கிற சிறிய ஊர். திருத்தணிகைக்கு நேர் மேற்கே இருபது மைல் தூரத்தில் இருக்கும். மிக்க சிரமம் இல்லாமல், நல்ல ரோட்டிலே காரிலோ, பஸ்ஸிலோ இந்தக் கிராமத்துக்குச் சென்று சேரலாம். அடிவாரத்திலே இருக்கும் உற்சவமூர்த்திகளைக் கண்டு வணங்கலாம்.

"இந்த உற்சவ மூர்த்திகளைக் காணவா இவ்வளவு தூரம் வந்தோம்? ஏதோ வள்ளி பிறந்த ஊர். வள்ளி தினைப்புனம் காத்த தலம் என்றெல்லாம் விஸ்தரித்தீரே!" என்று நீங்கள் கேட்பது எனது காதில் விழத்தான் செய்கிறது. அந்த வள்ளியை நல்ல கல்லுருவிலே காண மலை ஏறத்தான் வேண்டும். முந்நூறுக்கு மேற்பட்ட படிகள் அழகாகக் கட்டப்பட்டிருக்கின்றன, ஒரே ஒரு இடத்தில் தான் செங்குத்தான படிக்கட்டுகள். மற்றவை எல்லாம் ஏறுவதற்கு வசதியாகவே இருக்கும். படிக்கட்டுகளில் கட்டியிருக்கும் மண்டபங்களில் எல்லாம் தங்கி இளைப்பாறி மலை முகட்டுக்கு வந்தால், கோயிலின் முன்வாயிலுக்கு வருவோம். கற்பூரக் கொப்பரை, துவஜ ஸ்தம்பம் முதலியவற்ருேடு, குடை

வரையாக அமைத்திருக்கும் கோயிலேயுமே வலம் வரலாம். அப்படி வலம் வந்தால் திரும்பவும் கோயிலின் முகப்பிலே கல்லால் கட்டியிருக்கும் மண்டபத்துக்கே வருவோம். இந்த மண்டபம் கல்லும் சுண்ணும்பும் கொண்டு கட்டியவை. மற்றையப் பகுதி மலேயைக் குடைந்து அமைத்த குடைவரைக் கோயிலே. முன் மண்டபத்தைக் கடப்பதற்குள்ளே இடப் பக்கம் திரும்பினல் கற்பாறையிலே ஒரு பெரிய குகை. அந்தக் குகைக்குள்ளே நிற்கிருள் வள்ளி. கவண் வீசும் கயிற்றை ஏந்தி ஆலோலம் பாடும் நிலேயில் அவளே உருவாக்கி யிருக்கிருன் சிற்பி, அர்த்த சித்திரமாக (Bas relief). ஆம்! இந்த இடமே வள்ளி பிறந்த இடமாக இருக்கவேண்டும். இங்குதான் அவள் தினேப்புனம் காத்து நின்றிருக்க வேண்டும் என்பதில் இனிச் சந்தேகம் எழுவதற்கு நியாயமில்லே.

இனி, குடைவரைக் கோயிலுக்குள் நுழையலாம். அது மூன்று கட்டுகளாக இருக்கும். முதற்கட்டில் ஒரே இருட்டு. அந்தக் கட்டின் பாறைகளில் முட்டாமல் வலப்புறம் உள்ள வாயில் வழி நுழைந்தால், அதைவிட உயரமான அடுத்த கட்டில் நுழையலாம். இங்கு நல்ல வெளிச்சம் வர, கோயில் நிர்வாகிகள் ஏற்பாடு செய் திருக்கிருர்கள். இங்கு எல்லோரும் வசதியாக நின்று தொழுவதற்குமே ஏற்பாடு செய்திருக்கிருர்கள். அடுத்த கட்டுத்தான் மூன்ரும் கட்டு. அது மற்றக் கட்டுக்களே விட இன்னும் கொஞ்சம் உயரம். இந்தக் கட்டில் ஒரு வாயில். அந்த வாயிலுக்கு நேரே, வள்ளிமலே முருகன், வஞ்சனே இல்லாமல் வள்ளியோடு தெய்வயானேயையும் பக்கத்தில் வைத்துக் கொண்டே சிலே உருவில் நிற்கிருன். சின்னஞ்சிறிய வடிவமே என்ருலும் நல்ல அழகான வடிவம். திருத்தணியில் இல்லாத மயில் இங்கு இருக்கும். தன் தலேவன் கால்கடுக்க நடந்து

சென்றிருக்கிருனே என்று அறிந்து பறந்து வந்து சேர்ந்திருக்கும் போலும் !

இந்தக் கர்ப்பக்கிருஹத்தைக் குறியாக வைத்துக் கொண்டே கர்ப்பக்கிருஹத்தின் உச்சியில் உள்ள பாறை மேல் விமானத்தைக் கட்டியிருக்கிருர்கள். குடை வரைக் கோயிலே உருவாக்கியவர்கள் பல்லவர்கள். விமானத்துக்கு முன் மண்டபம் கட்டியவர்கள் பின் வந்த நாயக்க மன்னர்கள். இந்த வள்ளிமலேயிலே பல சுனேகள். அதில் ஒரு சுனேயிலேதான் வள்ளி நீராடி யிருக்கிருள். அந்தச் சுனேக்கரையிலே வள்ளி அன்று மஞ்சள் உரைத்துத் தேய்த்துக் குளித்திருக்கிருள். அந்த அடையாளத்தை எல்லாம் இன்றும் பார்க்கலாம்.

இதுதவிர, மலேமேலே ஒரு பாறையிலே ஐந்தாறு சமண விக்கிரகங்கள். ஒரு காலத்தில் சமண முனிவர் கள் சிலர் தங்கியிருக்க வேண்டும் இங்கே. இவைகள் தாம் பின்னர் பஞ்சபாண்டவர் படுக்கை என மக்களால் அழைக்கப்பட்டிருக்கின்றன.

கானச் சிறுமானே நினேந்து
ஏனற் புனமீது நடந்து
காதற் கிளியோடு மொழிந்து சிலேவேடர்
காணக் கனியாக வளர்ந்து
ஞானக் குறமாதை மணந்த

முருகனே இத்தலத்திலே வணங்குவதில் ஒரு தனி விசேஷம்.

தெய்வ மகளாகிய தேவசேனேயைப் பரிசாகக் கொண்டுவந்து கொடுக்கிருன் தேவேந்திரன். ஆனல் தமிழ் மகளாகிய வள்ளியைத் தேடி ஓடி வந்து காதல் புரிந்து மணக்கிருன் குமரன். இது தமிழ்க் கடவுளான

முருகன் தமிழ் மக்களிடத்து வைத்துள்ள அளப்பரிய அன்பினைத் தெளிவாக்குகிறது அல்லவா? ஆதலால் தான் தமிழ் வருஷப் பிறப்பன்று இத்தலத்தில் திருப்படித் திருவிழா ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அடுத்த திருப் படித் திருவிழா நடக்கும்போது வள்ளிமலை தமிழ் நாட்டோடு இணைந்திருக்கும்.



# 6

# வலம் வந்த விநாயகர்

ஒரு சிறு கதை. அதுவும் பிள்ளையாரைப் பற்றிய கதை. பிள்ளைப் பிராயத்திலே கேட்ட கதையா னாலும், வயது முதிர்ந்த பின்னும் திரும்பத் திரும்ப அந்தக் கதையைக் கேட்பதில் ஒரு சுவை. கதை இதுதான்.

கைலாயத்திலே ஒரு நாள் பார்வதியும் பரமேசு வரனும் தனித்திருக்கிறார்கள்.. அந்தச் சமயத்தில் கலகப் பிரியரான நாரதர் அங்கு வருகிறார். நல்ல மாங்கனி ஒன்றைக் கொண்டுவந்து அதை இறை வனிடம் கொடுக்கிறார். வாங்கிய கனியை அன்னை யிடம் அளிக்கிறார் அவர். கனி பெற்ற தந்தையும் தாயும் கனிவோடே தங்கள் பிள்ளைகளை நினைக்கின்றனர். தங்களை விடப் பிள்ளைகள் சுவைத்து உண்பார்களே என்றுதானே தாயும் தந்தையும் கருதுவார்கள். உல கீன்ற அன்னையும் அத்தனும் அப்படி நினைத்ததில் வியப்பில்லையே. இந்தச் சமயத்தில் பிள்ளைகள் இரு வரும், ஆம், பிள்ளையாரும் முருகனுந்தான் குதித்துக் கொண்டே அங்கு வந்து சேருகின்றனர்.

குழந்தைகளைக் கண்டதும் சிவபெருமானுக்கு இவர் களுக்குள் ஒரு விளையாட்டுப் போட்டி நடத்தலாமே என்று தோன்றுகிறது. உடனே அன்னை கையிலிருந்த அரிய கனியைக் காட்டிக் குழந்தைகளிடம் 'உங்களுக் குள் ஒரு பந்தயம். யார் முதலில் உலகைச் சுற்றி வருகிறீர்களோ அவர்களுக்கே இந்தக் கனி' என்று கூறுகின்றார். பந்தயம், போட்டி என்றாலே குழந்தை களுக்கு ஓர் உற்சாகம். ஆதலால் தெய்வக் குழந் தைகளான பிள்ளையாரும் முருகனும் போட்டிக்குத் தயாராகி விடுகின்றனர். முருகன் நினைக்கிறான்: 'அண்ணன் அவரது மூஷிக வாகனத்தில் ஏறி அவனி யைச் சுற்றுவதாவது, அதற்கு எவ்வளவு காலம் ஆகும்? நம்மிடமோ வான வீதியிலே பறக்கும் மயில் வாகனம் இருக்கிறது. ஆதலால் மாநிலம் மாத்திரம் என்ன, இந்த அண்டகோளங்கள் அத்தனையுமே அரை நொடியில் சுற்றி வந்து விடலாமே. போட்டியில் வெற்றி நமக்குத்தான்' என்று. பிள்ளையாரோ ஒன்றும் பேசாமல் அமுத்தலாக இருக்கிறார்.

போட்டி ஆரம்பமாகி விடுகிறது. உடனே முருகன் தன், 'சீர் திகழ் தோகை மயில் மீது' ஏறி வான வீதியிலே பறந்து உலகத்தைச் சுற்றப் புறப்பட்டு விடுகிறான். அவன் புறப்படும் வரை பிள்ளையார் இருந்த இடத்தை விட்டு அசையவே இல்லை. பின்பு சாவதானமாகத் தன்னுடைய வாகனத்தில் ஏறி, 'ஜம்' என்று சவாரி செய்துகொண்டே, அங்கு வீற்றிருந்த தந்தையையும் தாயையும் ஒரு சுற்றுச் சுற்றுகிறார். சுற்றி விட்டு, தந்தை முன் வந்து மாங்கனிக்குக் கையை நீட்டுகிறார். 'என்னடா இது?' என்று கேட்டால், 'உலகம் தோன்றி நின்று ஒடுங்குவதெல்லாம் உங்களிடம்தானே. ஆதலால் உங்களைச் சுற்றினால் உலகத்தையே சுற்றிய தாகாதா?' என்று எதிர்க் கேள்வியே போடுகிறார்

பிள்ளையார். அவ்வளவுதான். தந்தையும் தாயும் வாயடைத்துப் போய் விடுகிருர்கள். போட்டிப் பரிசாகிய மாங்கனியைத் தட்டிக் கொண்டு, நிற்காமல் கொள்ளாமல் தன்னுடைய வாகனத்தில் ஏறிக்கொண்டு ஓடியே விடுகிருர் அவர். தம்பி வந்து பழத்தில் பங்கு கேட்பானே என்ற பயமோ என்னவோ? உலகெலாம் சுற்றி அலுத்த முருகன் வந்து விஷயம் அறிந்து தளர்வடைகிருன். தந்தை தாயிடம் கோபித்துக் கொண்டு கோவணாண்டியாகப் புறப்படுகிருன். தாயாகிய பார்வதி தன் குழந்தையை எடுத்து மடிமீது இருத்தி, "அப்பா நீயே பழமாக இருக்கும் போது உனக்கு நாங்கள் வேறு பழம் தரவேண்டுமா?" என்று கூறி அவனைச் சமாதானம் செய்து வைக்கிருள்.

'முப்பழம் நுகரும் மூஷிக வாகனர்' மாம்பழம் பெற்றகதை இதுதான். இது எந்த ஸ்தலத்தில் நடந்தது என்பதற்கு ஆதார பூர்வமான அத்தாட்சி ஒன்றும் கிடைக்க வில்லை. அரிய உண்மை ஒன்றை விளக்க எழுந்த அற்புதமான கற்பனைதானே இக்கதை. என்ருலும் இது நடந்ததுதிருவலம் என்ற தலத்தில் தான் என்று அந்த ஊர் மக்கள் நம்புகிருர்கள். கதையையும் அதற்குரிய படங்களையும் எழுதி, அங்குள்ள வல்லநாதஈசுவரர் கோயிலில் தொங்க விட்டும் வைத்திருக்கிருர்கள்.

திருவலம் என்ற இந்தச் சிறிய ஊர் வட ஆற்காட்டு மாவட்டத்தில் சென்னை பெங்களூர் ரோட்டில் சென்னையிலிருந்து எழுபத்தைந்து மைல் தூரத்தில் இருக்கிறது. பொன்னை என்று இன்று வழங்கும் நீவா நதிக்கரையில் இருக்கும் தலம் இது. சென்னையிலிருந்து செல்வோர் இந்த ஊர் சேர்வதற்கு முன் ஆற்றின் மேல் கட்டப்பட்டுள்ள பாலம் ஒன்றைக் கடக்க வேண்டும். பாலம் மற்றப் பாலங்களைப் போல் செங்கல்லும் சுண்ணும்பும் வைத்துக் கட்டப்பட்டது அல்ல. எல்லாம்



வல்லநாதர்-வல்லாம்பிகை

லின் குடைவருவாயிலைக் கடந்து உள்ளே வந்தால் ஓர் அழகிய சிறிய கோபுர வாயிலுக்கு வந்து சேருவோம். இக் கோபுர வாயிலையும் கடந்து உள்ளே வந்தால், அங்கு கோயில் கொண்டிருக்கும் பிள்ளையாரைக் கண்டு வணங்கலாம். பிள்ளையாருக்கு வலம் வந்த விநாயகர் என்று பெயர் இல்லை. வரசித்தி விநாயகர் என்றே பெயர் இட்டிருக்கிறார்கள். வலம் வந்து மாங்கனி பெற்று வரசித்தி பெற்றவர் அவர். பிரார்த்தனை செய்து கொள்ளும் பக்தர்களும் வரசித்தி பெறுவதற்கு அருளுவார். இவரை இலக்கியத்தில் காண வேண்டுமானால் பதினோராம் திருமுறையையே ஒரு திருப்புத் திருப்ப வேணும். நம்பியாண்டார் நம்பி பாடியுள்ள நாரையூர் விநாயகர் இரட்டை மணிமாலைப் பாடல்களைப் படிக்க வேணும்.

கொம்பனைய வள்ளி
கொழுநன் குறுகாமே
வம்பனைய மாங்கனியை
நாரையூர் - நம்பனையே
தன்னவலம் செய்துகொளும்
தாழ்தடக்கையாய், என்நோய்
பின்அவலம் செய்வது எனோ பேசு?

என்ற பாடலைப் படித்தால் வலம் வந்த விநாயகர் பெருமை தெரியும். கலை உலகில் இவரைக் காண, வட ஆற்காட்டு மாவட்டத்தின் தலைநகரான வேலூருக்கே போகவேண்டும். அங்குள்ள கோட்டையின் உள்ளே மூர்த்தி இல்லாக் கீர்த்தியோடு விளங்கும் ஜலகண்டேசுவரர் கோயிலுக்குள்ளேயே நுழைய வேண்டும். கலை உலகில் பிரசித்தி பெற்ற கல்யாண மண்டபத்துத் தூண் ஒன்றின் அடித்தலத்திலே அவரைக் காணலாம். போட்டிப் பந்தயத்தில் மாங்கனியைப் பெற்றபின் அந்த உற்சாகத்தில் அவர் மூஷிக வாகனத்தில் ஏறிச்

சவாரி செய்வதே ஒரு ஜோர். இந்த நிலையிலே உற்சாக மாக அவர் வாகனத்தில் சவாரி செய்யும் நிலையை எந்தச் சிற்பியுங் தமிழ் நாட்டில் உருவாக்கக் காணோம்.

வலம் வந்த வரசித்தி விநாயகரை வணங்கிவிட்டு வல்லநாதரையும் வல்லாம்பிகையையும் வணங்கலாம். சிலை வடிவிலே அமைந்திருக்கும் அவர்களது கோலத் தில் சிறப்பான அம்சம் ஒன்றும் இல்லைதான். என்ரு லும் செப்புச் சிலைவடிவில் இருக்கும் அவர்களது திரு உருவம் கண்டு மகிழத்தக்கது. சாதாரணமாக எல்லாக் கோயில்களிலும் இருக்கும் சந்திரசேகரரைப் போலவே தான் வல்லநாதர் இருக்கிருர். அவர் பக்கலில் எழிலே உருவெடுத்தாலன்ன அழகோடு வல்லாம்பிகை நிற்கி ருள். இருவரையும் நீங்கள் இங்கு உள்ளபடத்திலே பார்க்கலாம். நல்ல சோழர் காலத்துச் செப்புச் சிலை போலவே இருக்கின்றன.

இனி, கோயிலை ஒரு சுற்றுச் சுற்றி வெளியே உள்ள மகாமண்டபத்துக்கு வந்தால், அங்கு ஓர் அதிசயம் காத்திருக்கும். எல்லாச் சிவன் கோயிலிலும் நாம் நந்தி யைப் பார்த்திருக்கிருேம். பார்த்த பல கோயில்களிலும் நந்தி இறைவனை நோக்கிய வண்ணமாயிருப்பதையே கண்டிருக்கிருேம். ஆண்டவன் கட்டளைக்கு அடிபணிய எக்கணமும் தயார்ராயிருப்பதுபோல, அவர் கடைக்கண் சாடைக்குக் காத்திருப்பது போல மேற்குத் திசையை நோக்கியிருக்கும் நந்தியைத்தான் மற்றத் தலங்களில் கண்டிருக்கிருேம். ஆனுல் இத்தலத்தில் மட்டும் நந்தி, சிவபிரானுக்குத் தன் பின் பாகத்தைக் காட்டிக்கொண்டு கிழக்கு நோக்கிய வண்ணமாக இருக்கிறது. இது காணக்கிடைக்காத ஓர் அதிசயம்தானே? விசாரித்தால் பக்கத்தில் உள்ள வல்லாம்பேட்டை என்னும் மலையில் வாழ்ந்து வந்த கஞ்சாரன் என்னும் அசுரன் இங்கு மக்களை வருத்த, அவர் தம் துயர் துடைக்க நந்தியை

இறைவன் ஏவ, அன்று அவ்வசுரனைத் துரத்திச் சென்ற நந்தி திரும்பாமலேயே இருக்கிறது என்கிறார்கள். பசுவாகிய உயிர்கள் என்றுமே இறைவனை விட்டு ஓடத்தான் செய்கின்றன. ஆனால் இறைவனோ அந்த உயிர்களுக்கு அருள் புரிய அவ்வுயிர்களைத் துரத்திக்கொண்டே ஓடி வருகிறார் என்பது இறைவனின் அளப்பரிய கருணையை விளக்கும் ஒரு தத்துவம். அந்த தத்துவத்தையே அருள் வேட்டை (Hound of Heaven) என்ற பாட்டிலே பிராங்சிஸ் தாம்ஸன் என்ற மேலை நாட்டுக் கவிஞன் விளக்குகிறான். திருவலத்தில் உள்ள வல்லநாதரும் தம்முடைய நந்தியை, உயிர்கள் ஓடும் பக்கமாக விரட்டுகிறாரோ என்று எண்ணத் தோன்றுகிறது எனக்கு.

வல்லம் என்ற சொல் அரசனுடைய ஊரைக் குறிக்கும் என்பர் ஊரையும் பேரையும் ஆராய்ச்சி செய்தவர்கள். இந்தத் திருவல்லத்தில் வாணர்குல மன்னர்களுக்கு உரிய கோட்டை ஒன்று இருந்தது என்றும், அது ஒரு பெரிய படை வீடாய்ப் பத்தாம் நூற்றாண்டில் விளங்கியது என்றும் ஒரு சாஸனம் கூறுகிறது. ஆனால் இந்தக் கோட்டையோ, கோட்டை இருந்த அடையாளமோ ஒன்றும் இன்று நமக்குத் தென்படுவதில்லை. பரவாயில்லை. சாஸனம் கூறுவதை நம்பலாந்தானே. பொன்னியின் செல்வனும் ராஜ ராஜனது துணைவனாய்ப் பல போர்க்களங்களில் விழுப்புண் பெற்று, ராஜ ராஜனது தமக்கை குந்தவையை மணம் புரிந்த வல்ல வரையன் வந்தியத் தேவன் இந்த ஊர்க்காரனே என்று அறிகிற போது, ஓ! அவனா? நமக்கு நன்கு அறிமுகம் ஆனவன் ஆயிற்றே என்று சொல்லத் தோன்றுகிற தல்லவா?

# 7

# பாலாற்றில் பள்ளிகொண்டான்

ஒரு சிறு சம்பவம் சுவாமி விவேகானந்தர் வாழ்க்கையில். அவர் பள்ளியில் படித்துக்கொண்டிருக்கும் பொழுது நடந்தது. அது ஒரு பெரிய உண்மையையே விளக்குகிறது. விவேகானந்தர் என்னும் நரேந்திரன் பத்துப் பன்னிரண்டு வயதில் ஒரு சிறு பள்ளியில் மாணவனுகப் படித்துக் கொண்டிருந்தான். ஒரு நாள் வகுப்பில் உபாத்தியாயர் பூகோளப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். நரேந்திரன் அப்போது கண்களை மூடி தியானத்தில் இருப்பவன்போல் இருந்தான். இதை உபாத்தியாயர் பார்த்து விட்டார். 'அடே! பாடம் நடக்கும்போது தூங்கவா செய்கிருய்?' என்று சொல்லிப் பையன் நரேந்திரனைக் கோபித்துப் பிரம்பால் இரண்டு அடியும் கொடுத்து விட்டார். பாடம் முடியும் தறுவாயில் உபாத்தியாயர் பையன்களிடம் கேள்விகள் கேட்டார். விழித்த கண் விழித்த படியே இருந்து பாடங் கேட்ட பையன்கள் எல்லாம் கேள்விக்கு விடை சொல்லக் கூடாமல் 'திரு, திரு' என்று விழித்தார்கள். நரேந்திரனிடம் கேள்விகள்



ஆண்டாள்

கேட்டபோது, அவன் ஒவ்வொரு கேள்விக்கும் 'டக், டக்' என்று பதில் சொன்னான். ஐயோ! இந்தப் பையன் பாடம் கேட்கும்போது தூங்குகிருன் என்று அடித்து விட்டோமே என்று வருந்திஞர் உபாத்தியாயர். உபாத்தியாயருக்கு அன்று ஒரு பெரிய உண்மை விளங்கிற்று. மனத்தை ஒரு நிலைப்படுத்திப் பிறர் சொல்லும் விஷயங்களைத் தெரிந்து கொள்ளக் கண்களை அகல விரித்துப் பார்த்துக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. கண்களை மூடி, அறிவைச் செலுத்திக் கூர்மையாக விஷயங்களைக் கிரஹித்தல் வேண்டும் என்று அறிந்தார். நரேந்திரர் பின்னர் எவ்வளவு கூர்ந்த மதியுடையவஞக வளர்ந்தார் என்றும், அரிய தத்துவங்களை யெல்லாம் உலக மக்களுக்கு எடுத்துச் சொல்லும் ஆற்றல் பெற்று, விவேகானந்தர் என்னும் பெயருக்கு ஏற்ப விளங்கினுர் என்பதும் நாம் அறிந்ததே.

இந்தச் சம்பவம் ஒரு பெரிய தத்துவத்தையே விளக்குகிறது எனக்கு. 'பாற்கடலிலே பரந்தாமன் படுத்துக் கிடக்கிருன்; அரவணையிலே அறிதுயில் கொள்ளுகிருன் என்றெல்லாம் காத்தற் கடவுளான விஷ்ணுவைக் கலைஞர்கள் கற்பனை பண்ணி யிருக்கி ருர்களே, அது சரிதான ?' என்று எண்ணினேன் நான். எண்ணிறந்த ஜீவராசிகளை யெல்லாம் காத்தளிக்கும் பொறுப்பை ஏற்றுள்ள பரந்தாமன், சும்மா கண்களைத் திறந்து வைத்துக்கொண்டு, பூலோகத்திலும் வைகுண் டத்திலும் நடக்கும் காரியங்களை யெல்லாம் கண் கொண்டு பார்த்துக்கொண்டிருந்தால் காரியம் உருப் படுமா என்ன? ஆதலால் கண்களை மூடி அறிதுயி லில் அமர்ந்து மக்களுக்குச் செய்ய வேண்டிய காரி யங்கள் எல்லாம் என்ன என்ன என்று அறிவதிலே தன் முழுக் கவனத்தையும் செலுத்திக் கொண்டிருக்கிருன். இப்போது விளங்குகிறது அரவணை கிடந்து அவன் ஏன் அறிதுயில் கொள்ளுகிருன் என்று.

இவனையே 'குன்றினில் நின்று, வானில் இருந்து நீள் கடல் கிடந்த ஆதிதேவன்' என்று திருமழிசை யாழ்வார் பாடுகிருர். இவன் பள்ளி கொள்வதற்குத் தேர்ந்தெடுத்த இடம் கடல், ஆறு, அரங்கம் (ஆற்றின் நடுவிலே உள்ள தீவு). தமிழ் நாட்டிலே இந்த அரங்கன் துயில் கொள்கின்ற இடங்கள் கிட்டத்தட்ட முப்பதுக்கு மேல் இருக்கும். அவைகளில் அதிமுக்கிய மானவை இரண்டே. ஒன்று உத்தர ரங்கம் என்னும் பள்ளி கொண்டான். மற்ருென்று தென்னரங்கம் என்னும் திரு அரங்கம் (ஸ்ரீரங்கம்) ஆம். அவன் 'தென் சொல் கடந் தான் என்ருலும் வடசொற் கலைக்கு எல்லை தேர்ந்த வன்' ஆயிற்றே. சமீபத்தில் மகா சம்ப்ரோக்ஷணம் செய்து பிரசித்தி பெற்ற ஸ்ரீரங்கநாதனை எல்லோரும் அறிவோம். இன்று நாம் காணப்போவது அவனை



கண்ணன்

அல்ல; உத்தர ரங்க நாதனை. எல்லா இடத்திலும் அவன் பள்ளிகொண்ட பரந்தாமனாகவே இருந்தாலும், இந்தத் தலம் ஒன்றிலே தான் அவன் பள்ளிகொண்டான் என்ற பெயரோடு விளங்குகின்றான். இந்தப் பள்ளிகொண்டான் கோயில் கொண்டிருக்கும் தலமே பள்ளிகொண்டான் (பள்ளிகொண்டை என்று மக்கள் அழைத்தாலும்) என்று பெயர் பெற்றிருக்கிறது. இந்தப் பள்ளிகொண்டான் வட ஆர்க்காடு மாவட்டத்திலே பாலாற்றின் கரையிலே உள்ள ஒரு சிறிய ஊர். இங்கு வந்து இவன் பாயை விரித்துப் பள்ளி கொள்வானேன்? இதைத் தெரிந்துகொள்ள உத்தர ரங்க மகாத்மியத்தையே ஒரு புரட்டுப் புரட்ட வேண்டியதுதான். புரட்டினுல் கிடைக்கும் ஒரு கதை. மாமியார் மருமகள் சண்டை உலகம் தோன்றுவதற்கு முன்னமேயே தோன்றியிருக்கிறது. செல்வம் கொழிக்கும் மாமியான லக்ஷ்மிக்கும், கல்வி நிரம்பிய மருமகளான சரஸ்வதிக்குமே ஒரு விவாதம், தங்களில் யார் பெரியவர் என்று. இந்தப் பிரச்னைக்கு முடிவு காணும் பொறுப்பு பாவம் அந்தப் அப்பாவி பிரமன் தலையில் விழுந்திருக்கிறது. அவர் எவ்வளவுதான் மனைவிக்கு அடங்கி

நடப்பவர் என்றுலும், உண்மையை ஒளிக்கவில்லை. இந்த நில உலகில், கல்வியை விடச் செல்வத்துக்குத் தானே மதிப்பு. ஆதலால் லக்ஷ்மியே பெரியவள் என்று தீர்ப்புக் கூறுகிறுர். கோபம் பிறக்கிறது சரஸ்வதிக்கு. புருஷனிடம் கோபித்துக் கொண்டு பூலோகத்துக்கே வந்து விடுகிருள். சஹ்ய பர்வதத்தில் வசிக்கிருள். பிரம்மாவுக்கோ தனிமை. சத்யவிரத க்ஷேத்திரத்தில் ஒரு அசுவமேத யாகம் செய்ய முனைகிறுர். சரஸ்வதி அந்த யாகத்தை அழிக்க விரைகிருள். நதி உருவில் பெருக்கெடுத்து யாகசாலைக்குள் புக எண்ணுகிருள். பிரம்மா தம் தந்தை மகாவிஷ்ணுவிடம் சரண் அடைகிறுர். முன்னமேயே அம்பரீஷ முனிவர் தவத்துக்கு இரங்கி பூலோகத்தில் அவருக்குக் காட்சி தருவதாக ஒத்துக்கொண்டிருக்கிறுர் அவர். ஆகவே, முனிவருக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றவும், பிரமனது வேண்டுகோளைப் பூர்த்தி பண்ணவும் விரைந்து இப் பூமிக்கு இறங்கி, பெருக்கெடுத்து வரும் ஆற்றுக்குக் குறுக்கே சங்கு சக்ரதாரியாய், ஆதிசேஷசயனனுக தெற்கே தலையும் வடக்கே காலுமாகப் பள்ளிகொண்டு விடுகிறுர். பாலாருய்ப் பெருகி வந்த சரஸ்வதியை மேற்கொண்டு போக விடாமல் தடுத்து விடுகிறுர். அம்பரீஷருக்கும் சேவை சாதிக்கிறுர், கல்வியறிவால் ஏற்படும் அகங்காரத்துக்கு அணை போட்டு அறிவை வளரச் செய்யும் பெருமாளாக, இப்பள்ளி கொண்டான் உத்தர ரங்கத்திலே பள்ளி கொள்கிறுர்.

இந்த ஊர் சென்று இந்தப் பெருமாளைத் தரிசிக்கச் சென்னையிலிருந்து பங்களூர் அல்லது கோவை செல்லும் ரயிலில் ஏறலாம். குடியாத்தம் ரயில்வே ஸ்டேஷனில் இறங்கித் தெற்கு நோக்கி இரண்டு மூன்று மைல் வந்து பாலாற்றையும் கடந்தால் அந்த ஆற்றின் தென் கரையிலுள்ள கோயிலுக்கு வந்து சேரலாம். காரிலேயே

செல்லக் கூடியவர்கள் வேலூருக்கு மேற்கே பதினுன்காவது மைலில் ஊருக்குள் திரும்பி வடக்கே பார்த்துச் சென்ருலும் கோயிலுக்குப் போய்ச் சேரலாம். சந்நிதித் தெருவில் உள்ள தேரடியில் இருக்கும் சிறிய திருவடி கோயிலில் அஞ்சலி ஹஸ்தராக இருக்கும் ஆஞ்சநேயரை வணங்கி விட்டு மேலும் மேற்கே நடந்து திருவந்திக் காப்பு மண்டபம் கோபுர வாசல் எல்லாம் கடந்தால் கோயிலை அடையலாம்.

கோபுரம், கோயில், மண்டபம், சந்நிதி எல்லா வற்றையும் பார்த்தால், இந்த வடவரங்கர், தென்ன ரங்கரைப்போல் அவ்வளவு செல்வந்தர் இல்லை என்று தெரியும். இவருடைய வருஷ வருமானம் சர்க்கார் கொடுக்கும் தஸ்திக் பணம் ரூ. 1103-2-3 தான். ஏதோ கொஞ்சம் தோப்பும் பன்னிரண்டு செண்டு நன்செய் நிலமுமே இவருடைய ஸ்தாவர சொத்து. ஆதலால் இங்கு அர்ச்சகர்கள் கெடுபிடி எல்லாம் இருக்காது. அர்ச்சகர்களை ஆள் அனுப்பித்தான் தேடிப் பிடிக்க வேண்டியிருக்கும். அர்ச்சகர் வந்தபின் பள்ளி கொண்டான் சந்நிதிக்குப் போகுமுன் ஒரு சிறு மாடத் தில் மேற்கே தலையும், கிழக்கே காலும் நீட்டிக்கொண்டு ஒரு சிறு ரங்கநாதர் இருப்பார். கஸ்தூரி ரங்கர் என்ற இவரை அங்குள்ளவர்கள் 'சோட்டா ரங்கநாதர்' என்று நமக்கு அறிமுகம் செய்து வைப்பார்கள். விஷயம் என்ன என்று விசாரித்தால், முகமதியர்கள் படை யெடுத்துக் கோவில்களை இடித்துக்கொண்டு வந்த போது, இந்தத் தலத்தில் உள்ளவர்கள் பள்ளி கொண் டானைக் காப்பாற்றக் கர்ப்பக்கிருஹத்துக்குமுன் ஒரு பெரிய சுவர் எழுப்பி, அவருக்குப் பதிலாக இந்தச் சிறிய ரங்கநாதரை உருவாக்கி வெளியே கிடத்தி யிருக் கிருர்கள். கோயிலுக்குள் நுழைந்த மகமதியர் 'இவர் தாஞ உங்கள் சாமி? இது என்ன சோட்டா சாமி?' என்று சொல்லி விட்டும் திரும்பி விட்டார்களாம்.

ஆம், மோட்டா ரங்கநாதரைக் காப்பாற்றிய சோட்டா ரங்கநாதர் தம்மையுமே காப்பாற்றிக் கொண்டிருக்கிருர். ஆதலால் இன்றும் இங்கு இவருக்கே அக்ரஸ்தானம்.

கர்ப்பக்கிருஹத்தில் இருக்கும் பள்ளி கொண்டான் (மோட்டா ரங்கநாதன்தான்) நல்ல ஆஜானுபாகு, கிரீடம், குண்டலம், திருமண்காப்பு, வேட்டி, உத்தரீயம் எல்லாம் சாத்திக்கொண்டு திருவனந்தாழ்வான் என்னும் ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்டிருக்கிருர். ஸ்ரீதேவி அவரது கையைத் தாங்கப் பூதேவி திருவடிகளை வருடிக் கொண்டிருக்கிருள். நாபிக் கமலத்தில் நான்முகன்; எல்லாம் நல்ல சிலை உருவில். அரவணையில் அறிதுயில் கொள்ளும் இந்த அரங்கனைத் தொழுதுவிட்டு வெளியே வந்து கோயிலை ஒரு சுற்றுச் சுற்றலாம். தாயார் சந்நிதியில் விசேஷம் ஒன்றும் இல்லை. ரங்கநாதனுக்கு ஏற்ற ரங்கநாயகி அங்கிருந்து பக்தர்களுக்கு அருள் புரிந்து கொண்டிருக்கிருள்.

இந்தக் கோயிலுக்கு வரும் கலை அன்பர்கள் எல்லாம் கண்டு தொழ வேண்டிய சந்நிதி மூன்றும் கோயிலின் மேலப்பிராகாரத்திலே தான் இருக்கிறது. அவைதாம் ராமன், கண்ணன், ஆண்டாள் முதலிய மூவருக்கும் ஏற்பட்ட தனித்தனிக் கோயில்களாகும். கோயில் பிராகாரத்தில் தென்மேற்கு மூலையில் முன் மண்டபத்தோடு கூடிய ஒரு சிறிய கோயிலில் சீதாலக்ஷ்மண சமேதனாக ராமன் நல்ல சிலை வடிவில் நின்று கொண்டிருக்கிருன். சுமார் நான்கடி உயரமுள்ள இச் சிலாவடிவங்கள் மிகவும் அழகு வாய்ந்தவை. 'அல்லையாண்டு அமைந்த மேனி அழகனுய்' அமைந்த ராமன், லக்ஷ்மணன், சீதை மூவரையுமே சேர்த்துப் பார்க்கலாம். இங்கே ராமாயண பாராயணம் செய்து, கௌசலையாய் ராமனைத்தாலாட்டி, தசரதனுல் ராமன் வனம் புகப் புலம்பி, கரதூஷண யுத்தத்தில் ராமனுக்கு

உதவிபுரியத் தண்டெடுத்து அனவரதமும் ராம கதை யருளும் குலசேகர ஆழ்வாரையும் இந்தச் சந்நிதியிலேயே காணலாம் செப்புச் சிலை உருவில்.

ராமர் சந்நிதியை விட்டுக் கொஞ்சம் வடக்கே நகர்ந்தால் அங்கொரு சிறு கோயில். அங்கே வெண்ணெய் உண்ணும் கண்ணன். 'கண்ணன் என்னும் கருந் தெய்வ'க் காட்சிக்கு ஏங்கி நிற்பவர்கள் எல்லாம் இங்கு கல்லிலும் செம்பிலும் கொஞ்சி விளையாடிக் கொண்டிருக்கும் கண்ணனைக் கண்டு வணங்கலாம். கண்ணன் உதடுகளிலே தவழும் குறுநகை நம்மைப் பரவசப்படுத்தும். வெண்ணெய் உண்ட வாயனுகை ரங்கநாதனைக் கண்டு வேறென்றையும் காணுதவர் அல்லவா திருப்பாணுழ்வார்? அவரையுமே பார்க்கலாம், இந்தச் சந்நிதியிலே. குழந்தைக் கண்ணனைப் பிரிந்து இன்னும் கொஞ்சம் வடக்கே நகர்ந்தால் ஆண்டாள் சந்நிதி. கல்லுருவிலும், செப்பு படிமத்திலும் உருவாகியிருக்கும் ஆண்டாள் வடிவத்தில், அவள் வடிவழகு அத்தனையையும் கண்டுவிட முடியாது. அதற்கு இன்னும் கொஞ்சதூரம் நடக்க வேண்டும். திரும்பவும் பள்ளி கொண்டான் சந்நிதியில் நுழைந்து திருவுண்ணுழிப் பிரகாரத்தையே ஒரு சுற்றுச் சுற்ற வேண்டும். அங்கு செல்லும்போது அர்ச்சகர் 'இங்கு கர்ப்பக்கிருஹம் பிரணவ வடிவத்திலே அமைந்திருக்கிறது. இந்தப் பிரணவ வடிவமான கர்ப்பக்கிருஹம், இந்த உத்தர ரங்கத்திலும், அந்தத் திருவரங்கத்திலும் தவிர வேறு இடங்களில் இல்லை' என்றெல்லாம் சொல்லுவார். அதற்கெல்லாம் செவி சாய்க்காது இருட்டில் கொஞ்சம் உற்று நோக்கினுல், இரண்டு சிலா உருவங்களைப் பார்க்கலாம். ஒன்று ஆண்டாள்; மற்றென்று கண்ணன். திறமையான சிற்பி செதுக்கிய பொற்சிலைகள் அவை. இந்தச்

சிலைகளை காண்பதற்கென்றே ஒரு நடை போகலாம் இந்தக் கோயிலுக்கு. அத்தனை அழகு வாய்ந்தவை.

கோயிலில் உள்ள கல்வெட்டுகளில் இருந்து கி. பி. பத்தாம் நூற்றாண்டில் இருந்த விக்ரம சோழன் காலத்துக்கு முன்னாகவே இக்கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. விக்ரம சோழன் கீழ் சிற்றரசனாக இருந்த குலசேகர சாம்புவராயன் செய்துள்ள தானங்களைப் பற்றியும் பல்லவ மன்னன் நந்திவர்மன் மகன் கம்பவர்மன் செய்துள்ள தானங்களைப் பற்றியும் கல்வெட்டுகள் அங்கே உண்டு. பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலே இருந்த ஊருக்கே நந்திவர்ம சதுர்வேதி மங்கலம் என்ற பெயர் வழங்கியதாகவும் அறிகிறோம். இவையெல்லாம் இக் கோயில் நிரம்பப் புராதனமானது என்பதைக் காட்டும். இந்தக் கோயில் ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப்படவில்லை என்பர். அரங்கத்தில் பள்ளிகொண்டிருக்கும் பெருமாளைப் பற்றிய பாடல்கள் திவ்ய பிரபந்தத்தில் எவ்வளவோ உண்டு. என்றாலும் பள்ளி கொண்டானுக்குப் பல்லாண்டு கூறும் பாடல் ஒன்றே ஒன்றுதான்

உடுத்துக் களைந்த நின்
பீதக ஆடை உடுத்து,
கலத்தது உண்டு
தொடுத்த துழாய் மலர்
சூடிக் களைந்தன சூடும்
இத்தொண்டர்களோம்,
விடுத்த திசைக் கருமம்
திருத்தித் திருவோணத்
திருவிழவில்
படுத்த பைந்நாகணைப்
பள்ளி கொண்டானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

என்று பாடியவர் பெரியாழ்வார். நாமும் பள்ளிகொண்டானுக்குச் சென்று பள்ளிகொண்ட பெருமானுக்குப் பல்லாண்டு பாடிக்கொண்டே திரும்பலாம் தானே!

# 8

# வாழ்வுக்கு ஒரு வழித் துணை

சில வருஷங்களுக்கு முன் நான் கும்பகோணத்துக்கு வடமேற்கே பதினான்கு மைல் தொலைவில் உள்ள திருப்பனந்தாளுக்குச் சென்றிருந்தேன். என்னுடன் இலக்கிய நண்பர் ஒருவரும் வந்திருந்தார். அவருக்குக் கோயில் குளம், மூர்த்தி தலம் என்பதில் எல்லாம் நம்பிக்கை இல்லை. என்றாலும் என்னுடன் வந்தால் தமிழ் நாட்டின் கலை அழகைக் காணக்கூடும் என்ற நம்பிக்கை. இருவரும் அங்குள்ள தாடகேச்சுரம் என்ற கோயிலுக்குச் சென்றோம். அங்குள்ள சடையப்பர் சந்நிதிக்கே வந்தோம். சந்நிதியில் வணங்கி எழுந்ததும் 'இத்தலத்தைப் பற்றி இரண்டு கதை இருக்கிறது தெரியுமா ?' என்றேன். 'என்ன ? சொல்லுங்கள்' என்றார்.

தாடகை என்று ஒரு பெண் (இராமாயணத்தில் வரும் தாடகை அல்ல) நல்ல சிவநேசச் செல்வி. அவள் இந்தத் தலத்தில் இறைவழிபாட்டுக்கு உரிய புஷ்பக் கைங்கர்யம் செய்து வருகிறாள். ஒரு நாள் கட்டிய

மாலையோடு இறைவனை அணுகும்போது மேலாக்கு நழுவியிருக்கிறது. அதைச் சரிசெய்ய மாலையையே கீழே வைக்க வேண்டியிருக்கும். இந்த நிலையில் தவித்துக் கொண்டிருக்கிறாள் அவள். அப்போது இறைவனே அவளது இக்கட்டான நிலையை உணர்ந்து தம் தலையையே சாய்த்து மாலையை ஏற்றிருக்கிறார். அன்று சாய்த்தவர் தலையை நிமிர்க்கவில்லை. இதனால் ஏதாவது உத்பாதம் விளையுமோ என எண்ணி, அந்த நாட்டு அரசன் சாய்ந்த தலையை நிமிர்த்தும் பணியில் ஈடுபட்டிருக்கிறான். யானை சேனையெல்லாம் கொண்டு கயிறு கட்டி இழுத்துப் பார்த்திருக்கிறான். இறைவன் அசையவில்லை. தாடகை என்ற பெண் மகளின் அன்புக்காகத் தலை சாய்த்த தலைவன் மற்றொரு ஆண்மகனின் அன்புக்காகக் காத்திருக்கிறான். அப்போது திருக்கடவூரிலே, கலையர் என்று ஓர் அன்பர். குங்கிலிய தூபம் போட்டுவந்த காரணமாகக் குங்கிலியக் கலையர் என்ற பெயரோடு வாழ்கிறார். அவர் ஒரு நாள் திருப்பனந்தாளுக்கு வருகிறார். தலை வளைத்து நிற்கும் இறைவனைக் காணுகிறார். பின்னர் கயிறு ஒன்றைத் தன் கழுத்தில் கட்டி, அதை இறைவனது லிங்கத் திருவுருவில் மாட்டி இழுக்கிறார். யானைக்கும் சேனைக்கும் அசைந்து கொடாத இறைவன் கலயரது அன்புக்குக் கட்டுப்பட்டு நிமிர்ந்து விடுகிறான். மாலை சாத்தும் தாடகையின் மானங்காப்பான் தாழ்ந்த சடையப்பன் கயிறு இட்டு இழுக்கும் கலையன் அன்பில் நிமிர்ந்திருக்கிறான்' என்றேன்.

அவர் இலேசாகச் சிரித்துவிட்டு, 'என்ன சார்! கதை அளக்கிறீர்கள். பிரதிஷ்டை செய்த போதிருந்த திருக்கோலத்தோடு ஆடாது அசையாது இருக்கும் இந்த லிங்கத் திருவுரு சாய்ந்ததற்கு ஒரு கதை, நிமிர்ந்ததற்கு ஒரு கதை. எல்லாம் உங்கள் கற்பனையோ?'

என்ருர். 'கற்பனையாகவே இருந்தாலும் அது என்னு டைய கற்பனை அல்ல; நம் முன்னோர்கள் கற்பித்த கற்பனையே. கற்பனையே யானாலும், மக்கள் அன்புக்கு இறைவன் எவ்வளவு கட்டுப்பட்டவன் என்பதை விளக்க எழுந்த கதை என்று விரித்துரைக்கவாவது நாம் தெரிந்து கொள்ளலாம் அல்லவா?' என்றேன். பின்னும் சொன்னேன்: 'உம்மைப் போன்றவர்கள், குனிந்ததை யும் நிமிர்ந்ததையும் திருப்பனந்தாள் மூர்த்தியைக் கண்டு நம்ப மாட்டார்கள் என்று தெரிந்தே, இன்னொரு தலத்தில் குனிந்தவர் தலையை நிமிர்த்தாமலேயே இன்னும் நின்று கொண்டிருக்கிருரே!' என்று விளக் கினேன். அப்படித் தலை சாய்ந்த தலைவராம் மார்க்க சகாயர் இருக்கும் தலம் தான் விரிஞ்சிபுரம். வட ஆற்காடு மாவட்டத்திலே வேலூருக்கு மேற்கே எட்டு மைல் தொலைவில் உள்ள ஊர். அந்த ஸ்தலத்துக்கே இன்று செல்கிருேம் நாம்.

இங்கு இறைவன் முடிசாய்ந்ததற்கு ஒரு அழகான கதை. பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் ஒரு போட்டி தங்களில் யார் பெரியவர் என்று. இவர்கள்தம் சிறு மையை உணர்த்த விரும்பிய சிவபெருமான் 'பொங்கழல் உருவனுக' அண்ணுமலையில் நிற்கிருன். இந்த அண்ணுமலையான் திருவுருவின் அடியையோ முடி யையோ யார் முதலில் கண்டறிந்து வந்து சொல்கிருர் களோ அவர்களே பெரியவர் என்று தீர்மானிக்கலாம் என்று திட்டமிட்டுக் கொள்கிருர்கள். வராக உருவில் அதளபாதாளங்களை யெல்லாம் குடைந்து சென்று இறைவனது அடியைக் காணுமலேயே திரும்பி விடுகிருர் விஷ்ணு. அன்ன உருவில் வானுலகில் பறந்து சென்று முடி காணச் சென்ற பிரமனுக்கும் அதே நிலைதான். என்ருலும் பிரமன் தன் தோல்வியை ஒப்புக்கொள்ளாமல், தான் இறைவன் முடியைக் கண்டு

விட்டதாகவும் அதற்கு இறைவன் முடியில் உள்ள தாழம்பூவே சான்று என்றும் கூறுகிருர். பொய் சொல்லிய பிரமனைப் பூவுலகில் மனிதனுகப் பிறக்கும்படி சபிக்கிருர் இறைவன். அந்த விரிஞ்சனே இந்த விரிஞ்சி புரத்தில் சம்பு சருமர் என்ற கோயில் அர்ச்சக ருக்கும் நயனநந்தினி என்பவருக்கும் மகனுய்ப் பிறக் கிருன். சிவசருமன் என்ற பெயரோடு வளர்கிருன். சிவசருமனுக்கு ஐந்து வயது நிறையுமுன்னே சம்புசரு மன் இறைவன் திருவடி சேர்கிருன். கோயில் பூஜை செய்யும் உரிமையைக் கைப்பற்ற தாயாதிகள் விரை கின்றனர், சிவசருமன் சிறுவன் என்ற காரணத்தால். ஆனல் இறைவன் அளப்பரிய கருணை உடையவன் ஆயிற்றே. வழித்துணை நாதனுன அவன் வழி காட்டா மல் கை விடுவானு?



சிம்மக் குளம்

கார்த்திகை மாதம் கடைசிச் சனிக்கிழமை இரவு சிவசருமன் தாயின் கனவில் தோன்றி மறுநாட் காலை யில், சிவசருமனைக் கோயிலுக்கு அனுப்பி வைக்கச்

சொல்கிருன் இறைவன். கட்டளை இட்டபடியே சிவ சருமன் கோயிலுக்குச் செல்கிருன். விருத்த வேதிய வடிவில் சிவபெருமானே வந்து சிவசருமனுக்கு உபநய னம் எல்லாம் செய்து வைக்கிருன். பின்னர் கோயிலுள் நுழைந்து பூஜா கைங்கர்யங்களை யெல்லாம் தவறுகள் செய்யாமலேயே நிறைவேற்றுகிருன். கடைசியில் இறைவனுக்கு அபிஷேகம் செய்ய மங்கள கவசத் தையே தன் கைகளில் எடுக்கிருன். நீண்டு உயர்ந் திருந்த லிங்கத் திருவுருவின் முடி பாலகனுன சிவசரும னுக்கு எட்டவில்லை. 'என்ன சோதனை ? அன்றுதான் உன் திருமுடியைக் காணவில்லை. இன்றும் எனக்கு எட்டவில்லையே' என்று கதறுகிருன் பழைய விரிஞ்ச னுன புதிய சிவசருமன். அவ்வளவில் அன்பினுல் கட்டுண்ட இறைவன் அவன் தனக்கு அபிஷேகம் செய்யத் தன் தலையையே வளைத்துக் கொடுக்கிருன். அவனது அபிஷேகம் ஏற்ற பின்னும் தலையை நிமிர்த்தா மலேயே நின்று விடுகிருன். ஏன்? இன்றுமே அப்ப டித்தான் நின்று கொண்டிருக்கிருன்.

இந்த அற்புத நிகழ்ச்சியை நினைத்துத்தான், இன்றும் கார்த்திகைக் கடைசி ஞாயிறு உற்சவம் இக்கோயி லில் சிறப்பாக நடக்கிறது. பல அற்புதங்களும் நிகழ் கின்றன. இந்த வட்டாரத்தில் உள்ளவர்கள், முக்கிய மாகப் பிள்ளைப்பேறு கிட்டாதவர்களும், பில்லி சூன்யம், தீக்காற்று முதலியவைகளால் துயர் உறுகிறவர் களும் பிரார்த்தனை செய்து கொள்கிருர்கள். அப்படிப் பிரார்த்தித்துக்கொள்கிற பெண்கள் ஒவ்வொரு கார்த் திகை மாதமும் கடைசிச் சனிக்கிழமை இரவு இக்கோயி லுக்கு வந்து சிம்மக் குளத்தில் முழுகி எழுந்து, நனைந்த உடையோடேயே அங்குள்ள மண்டபங்களில் குப்புறப் படுத்துக் கொள்கிருர்கள். தூங்கியும் போய் விடுகிருர் கள். அப்போது விருத்த வேதியராக ஒருவர் வந்து

புஷ்பம், பழம், பாலடை எல்லாம் கொடுப்பதாகக் கனவு கண்டால், அடுத்த ஆண்டுக்குள்ளேயே எண்ணிய எண்ணியாங்கு எய்துகின்றார்கள். தூக்கம் வராமலோ, கனவு காணாமலோ இருப்பவர்களுக்கு



மார்க்க சகாயர்

இறைவன் அருள் இல்லை என்று தெளிகிறார்கள். அதற்காக அடுத்த வருஷமும் வருகிறார்கள். நோன்பு இருக்கிறார்கள். சிம்மக் குளத்தில் முழுகுகிறார்கள் விழுந்து வணங்கி அருள் பெறுகிறார்கள்.

சென்ற வருஷம் கார்த்திகைக் கடை ஞாயிறு அன்று நான் கோயிலுக்குச் சென்றிருந்தேன். அன்று இப்படிப் பிரார்த்தனை செய்த பெண்கள் இரண்டாயிரம் பேருக்குக் குறைவில்லை என்று கண்டேன். 'என்ன? எண்ணிப் பார்த்தீரோ?' என்று கேளாதீர்கள். சிம்மக் குளத்தில் முழுகி எழுவதற்கு உரிய சீட்டு நபர் ஒன்றுக்கு எட்டணா கட்டணம் கட்டித்தான் பெறவேண்டும். இந்தச் சீட்டு விற்பனை உரிமையைக் குத்தகைக்கு விட்டிருக்கிறார்கள். அந்த வருஷத்துக் குத்தகைப் பணம்

ரூபாய் ஆயிரம். விசாரித்ததில் குத்தகைக்காரருக்கு நஷ்டமில்லையாம். இப்போது என் கணக்கும் சரிதானே. இன்னும் சந்தேகம் உள்ளவர்கள் அடுத்த கார்த்திகைக் கடைஞாயிறு விழாவுக்கே சென்று பார்த்துவிடலாமே.

இந்த விரிஞ்சிபுரத்திலே கோயில் கொண்டிருப்பவர் மார்க்க சகாயரும் மரகதவல்லியும். வழித்துணை நாதர், பச்சைப் பசுங்கொடி என்ற நல்ல தமிழ்ப் பெயரைத்தான் மார்க்க சகாயர்-மரகதவல்லி என்று நீட்டி முழக்கிச் சொல்கிறார்கள். இந்தத் தலத்து இறைவன் குடகு நாட்டிலே இருந்து தொண்டை நாட்டுக்கு மிளகு விற்க வந்த சிவநேசன் என்னும் வியாபாரிக்கு வழித்துணையாக வந்து, வழிப்பறி செய்ய வந்த திருடர்களை யெல்லாம் விரட்டி அடித்தான் என்பது புராண வரலாறு. வழித்துணை என்ற பெயர்தான் எவ்வளவு அழகான பெயர். மக்கள் செல்லும் நெறியில் எல்லாம் வழித்துணையாக இறைவன் வருகிறான். செல்லும் வழியிலுள்ள காமம், குரோதம், லோபம் முதலிய திருடர்களை யெல்லாம் வெல்வதற்குத் துணைபுரிகிறான் என்று கற்பித்து இறைவனை வணங்குவதிலேதான் எத்தனை இன்பம். 'பயந்த தனி வழிக்குத் துணை, முருகனது வடிவேலும், செங்கோடனது மயூரமுமே' என்று அருணகிரியார் தெரியாமலா பாடுகிறார்!

இந்த வழித்துணை நாதர் பாலாற்றின் தென் கரையில் உள்ள சிறிய ஊரில் இருக்கிறார். இந்தச் சிறிய ஊரில் தான் மார்க்க சகாயரின் பெரிய கோயில் இருக்கிறது. மூர்த்தி, தலம், தீர்த்தம், கிரி, காடு முதலிய அமைப்புகளோடும் நாளும் ஞாயிறு வழிபட நிற்கும் காரணத்தால் பாஸ்கரத்தலம் எனவும், பூகைலாய மெனவும் ஸ்தல புராணத்தில் கூறப்படுகிறது. சதுரங்க, பஞ்சாக்கர கோண அமைப்புடைய மாடவீதிகள், அஷ்டதிக்கு மண்டபங்கள் எல்லாம் நிறைந்து கோயில் அழகாக

இருக்கிறது. கோயிலில் உள்ள கல்வெட்டுகளால் 1239-ம் ஆண்டில் இரண்டாம் குலோத்துங்கன் பிரதிநிதியாய் இவ்வட்டாரத்தில் ஆண்ட ராஜராஜ சாம்புவ ராயரால் கோயில் கட்டி முடிக்கப் பட்டிருக்கவேண்டும் என்று தெரிகிறது. பின்னர் விஜயநகர சாம்ராஜ்யத்தை உருவாக்கிய கிருஷ்ண தேவராயரால், ராஜகோபுரம் கட்டப்பட்டிருக்கிறது. 1523-ல் இந்த நாயக்க மன்னர்கள் மரபில் வந்த சின்ன பொம்மன் என்ற லிங்கப்ப நாயக்கரால், இக்கோயில் செப்பனிடப் பட்டிருக்கிறது. இக்கோயிலின் மதில் அழகாக அமைந்திருக்கிறது. 'திருவாரூர்த் தேரழகு, திருவிரிஞ்சை மதில் அழகு' என்பது பழமொழி. மதிலில் ஒரு வரிசை நல்ல சிற்ப வடிவங்கள் அமைந்துள்ளன. மலைநாட்டு வணிகராய் சிவசருமன் பொதிமாடுகளுடன் செல்லும் காட்சி, ராமர் வாலியை மறைந்து நின்று அம்பெய்து வீழ்த்தும் நிலை எல்லாம் சிற்பிகளால் உருவாக்கப் பெற்றிருக்கின்றன. ராஜகோபுரத்தைக் கடந்து கோயிலுள் நுழைந்தால் முன்னால் பார்த்த சிம்மக்குளம் வந்து சேருவோம். சிம்ம உருவில் வாயில் அமைத்துக் கட்டப் பட்டிருப்பதால் சிம்மக்குளம், சிம்ம தீர்த்தம் எனப் பெயர் பெற்றிருக்கிறது. இதனை அடுத்துள்ள மண்டபத்தைக்



விரிஞ்சிபுரம் கோபுரம்

கடந்துதான் உள்பிரகாரம் செல்லவேணும். அதையும் கடந்துதான் அர்த்த மண்டபம், கர்ப்பக் கிருஹம் எல்லாம். கோயில் பிராகாரத்திலே இரண்டு பிரசித்தி பெற்ற மண்டபங்கள், தென் பகுதியில் கல்யாண மண்டபம், வட பக்கத்தில் வசந்த மண்டபம். இரண்டு மண்டபங்களிலும் உள்ள தூண்களில் எண்ணிறந்த சிற்ப வடிவங்கள், தசாவதாரக் காட்சிகள். சிவ பெருமானது பல மூர்த்தங்கள். பஞ்சமுக விநாயகர் முதலிய எண்ணற்ற வடிவங்களைக் கண்டு மகிழலாம் இந்த மண்டபங்களிலே. வேலூர் ஜலகண்டேசுவரர் கோயில் கல்யாண மண்டபம் கட்டிய சின்ன பொம்ம நாயக்கன்-பெரிய பொம்ம நாயக்கன் என்பவர்களே இம் மண்டபங்களையும் கட்டி யிருக்கவேண்டும்.

இக்கோயிலுக்கும் பக்தி சிரத்தை உள்ளவர்கள் கடை ஞாயிறு காலையிலேயே சென்று வந்தித்து வணங்கலாம். இல்லை, கூட்டம் என்றாலே எனக்குப் பிடிக்காது என்று சொல்லுபவர்கள் என்றைக்காவது வசதியான ஒருநாளில் சென்று காணலாம். கோயில்,கோபுரம், சிம்மக்குளம், தலை தாழ்த்திய மார்க்கசகாயர் மரகத வல்லி முதலியோரைக் கண்டு வணங்கலாம். செப்புச் சிலை வடிவில் இருக்கும் மரகதவல்லி உண்மையாகவே அழகு கொஞ்சும் பச்சைப் பசுங்கொடி. ஞாயிறு காலை கோயிலுக்குச் சென்று,

முளைத்தவரை முளை இடத்தில்
முழுத்தவரை, மகிழ்ந்தவரை
முருகன் வேலால் துளைத்தவரை, எனது
பழவினையை அலைத்தவரை,
சுடர்க் குன்ருகக் கிளைத்தவரை,
வளைத்தவரை ஒரு சிறுவன் கிளையோடு
கிளரச் சென்னி வளைத்தவரை,
வணிகனுக்கு வழித் துணையாய்
நடந்தவரை வழுத்துவோமே.

என்று பாடி மகிழலாம்.

# 9

# வேலூர் ஜலகண்டேச்வரர்

பாண்டிய மன்னனின் அமைச்சராய் அமைந்த வாதவூரர் மன்னவன் படைக்குக் குதிரைகள் வாங்கத் திருப்பெருந்துறை செல்கிருர். அங்கு குருந்த மரத் தடியில், இறைவன் தன் சீடர்களுடன் எழுந்தருளி யிருப்பதைக் கண்டதும் வந்த காரியத்தை மறந்து அங்கேயே உட்கார்ந்து விடுகிருர். கொண்டு வந்த பணத்தை எல்லாம் திருக்கோயில் கட்டுவதிலே செலவு செய்கிருர். மன்னன் விடுத்த ஏவலாளர் வந்து வாத ஊரரை அழைத்துச் செல்ல, இறைவன் அவருக்காக நரிகளைப் பரிகளாக்கிக் கொணர்கிருன். பின்னர் பரி களையே நரிகளாக்கிப் பெரிய 'கலாட்டா' செய்கிருன். வாதவூரர் இதனுல் எல்லாம் துயர் உற்றபோது அவருக் காக மண்சுமந்து பாண்டியனிடம் பிரம்படி படுகிருன். இத்தனை அனுபவமும் பெற்றபின் வாதவூரர் திரு வாசகம் பாடுகிருர். மணிவாசகர் எனப் புகழ் பெறுகிருர். அவர் வாழ்க்கையில் நடந்த இத்தனை காரியங்களும் அரிய அற்புதங்கள் தானே. வாழ்க்கைக் கடலில் சிக்குண்டு கலங்கிய தன்னை இறைவன் ஆட்கொண்டு

அற்புதங்கள் நிகழ்த்தியதை எல்லாம் நினைக்கிருர் ; பாடுகிருர் :

வணங்கும் இப்பிறப்பு இறப்பு இவை
நினையாது, மங்கையர் தம்மோடும்
பிணைந்து, வாயிதழ்ப் பெரு வெள்ளத்து
அழுந்தி நான், பித்தனுய்த்திரிவேனை
குணங்களும் குறிகளும் இலாக்
குணக்கடல் கோமளத் தொடும்கூடி
அணைந்து வந்து எனை ஆண்டுகொண்டு
அருளிய அற்புதம் அறியேனே.

என்றே வியக்கிருர் மணிவாசகர். இந்தப் பாட்டைப் பாடிக்கொண்டே வேலூர் சென்ற எனக்கு, இன்னும்



ஜலகண்டேச்வரர் கோயில்

என்ன என்னவோ அதிசயங்கள் அங்கே காத்துக் கிடந்தன. நீர் இல்லாத ஆறும், மரங்களே இல்லாத மலையும், கோமகன் இல்லாத கோட்டையும், அதிகாரம் இல்லாத போலீசும் (இன்னும் மற்றவற்றையும் சொன்ருல் வேலூர் மக்கள் கோபித்துக் கொள்வார்களே) என்று அதிசயங்களை அடுக்கிக்கொண்டே போவார்கள்

அங்கு இருப்பவர்கள். இத்தனை அதிசயங்களையும் தூக்கி அடிக்கும் வகையில், அங்குள்ள கோட்டைக் குள்ளே கோயில் உண்டு, ஆனால் மூர்த்தி இல்லை. தமிழ் நாட்டில் இப்படி எத்தனையோ கோயில்கள் இடிந்து பழுதுற்றுக் கிடக்கின்றன, என்றாலும் அந்த இடிந்த கோயில்களுக்கு உள்ளே கூட ஒரு மூர்த்தி நின்றுகொண்டிருக்கும், பூசை புனஸ்காரம் இல்லாமல். ஆனால் மூர்த்தி இல்லாக் கீர்த்தியை உடைய கோயில் இந்த வேலூர் ஜலகண்டேச்வரர் கோயில் ஒன்றுதான்.

ஜலகண்டேச்வரர் ஜாதகம் நிறையக் கண்டங்கள் நிறைந்த ஜாதகம். ஏரிக்கு நடுவிலே ஒரு தீவு. அந்தத் தீவிலே ஒரு புற்று. அந்தப் புற்றிடத்திலே ஒரு சிவலிங்கம். அந்தச் சிவலிங்கத்தைச் சுற்றி ஒரு ஐந்து தலை நாகம். அந்த நாகத்திற்குப் பாலருத்துகிறது ஒரு பசு. இதையெல்லாம் அறிந்த அந்த நாட்டு மன்னர் பொம்மி ரெட்டி புற்றினை அகற்றி, புற்றிடங்கொண்ட பெருமானுக்கு ஒரு கோயில் கட்ட முனைகிறார். கோயில் கட்ட அடிகோலியது, சாலிவாகன சகாப்தம், சுக்கில வருஷம் (கி. பி. 1274) பங்குனி மாதம் பத்தொன்பதாம் தேதி. வடநாட்டுச் சிற்பி பத்ரிகாசி இமாம் கோயில் கட்டும் பணியில் ஈடுபடுகிறான். கட்டி முடிய ஒன்பது வருஷங்கள் ஆகின்றன. ஜலகண்டேச்வரர் (ஆம், கண்டம்வரை ஜலத்துக்குள்ளேயே இருந்த மூர்த்தி அல்லவா?) அகிலாண்டேஸ்வரி பிரதிஷ்டையும் நடக்கிறது சிறப்பாக. ஆனால், கோயில் கட்ட அடிகோலிய நாள் நல்ல நாள் இல்லை என்று கண்டு சொல்லச் சிற்பி மகன் சிற்பியே வரவேண்டி யிருக்கிறது பின்னால். அதனால் மனங்கவன்ற மன்னன் கோயிலைக் காப்பாற்ற கோயிலைச் சுற்றியே ஒரு நல்ல அழகிய மதிலையும் கட்டுகிறான். இதனால் கோயிலைக் காப்பாற்ற முடிந்ததே ஒழிய, மன்னனுக்கு கோயிலில் உள்ள மூர்த்தியை

நிலை நிறுத்த முடியவில்லை. பொம்மி ரெட்டிக்குப் பின்னால் தெங்கணிக் கோட்டை வேங்கட தேவ மகா ராயலு வேலூர் வட்டத்தை ஆளுபவனாக அமைகிறான். அவன் சந்ததியினர் பத்துப்பேர் இந்த ராயவேலூரில் இருந்து அரசாண்டிருக்கிறார்கள்.

பதினேழாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வேலூரைப் பீஜப்பூர் சுல்தான்கள் கைப்பற்றி இருக்கின்றனர். கான்கானும், அவனுடைய மகன் மகம்மது கானும் ஆண்டு வந்த காலத்தில் கோயிலுக்குப் பழுது நேரவில்லை. ஆனால் முகம்மதுகானுக்குப் பின் வந்த அப்துல்லாவிடம், யாரோ மூர்த்தியின் பீடத்தின்கீழ் உயர்ந்த ரத்தினங்கள் இருப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். பிடித்தது சனி ஜலகண்டேச்வரரை. அவர் பீடத்திலிருந்து அகற்றப்பட்டிருக்கிறார்; அகழியில் எறியப்பட்டிருக்கிறார். பீஜப்பூர் சுல்தானின் ஆட்சிக் காலம் அதிக காலம் நீடிக்கவில்லை. மராத்திய மன்னர் ஆதிக்கம் பெற்றபோது 1676-ல் துக்கோஜி ராவ் வேலூர் கோட்டையை முற்றுகையிட்டு வெற்றி பெற்றிருக்கிறார். கோட்டையைக் கைப்பற்றியவர்கள் ஜலகண்டேச்வரரை அகழியில் இருந்து எடுத்துத் திரும்பவும் பிரதிஷ்டை செய்து பூஜையை எல்லாம் ஆரம்பித்திருக்கிறார்கள். ஆனால் ஜலகண்டேச்வரர்தான் கண்டங்களுக்கு உட்படுபவர் ஆயிற்றே? ஆதலால் இரண்டு வருஷம் கழியுமுன்பே சுல்தான்கள் திரும்பவும் படை எடுத்து மராத்திய மன்னன் துக்கோஜியின் குமாரன் சிங்கோஜியை வெற்றி கண்டு கோட்டையைக் கைப்பற்றி இருக்கிறார்கள். அவ்வளவுதான் ஜலகண்டேச்வரரது அபிஷேக ஆராதனைகள் நின்றிருக்கின்றன. இப்படியே அன்ன ஆகாரம் இல்லாமல் இருந்திருக்கிறார் இருபத்து ஒரு வருஷம்.

இப்படி உபவாசம் இருந்த போதும் அவர் சும்மா இருக்கவில்லை. பழையபடி மராத்திய மன்னர்களை அழைத்திருக்கிறார். மராத்திய மன்னர் ஸ்ரீனிவாச ராவ் கோட்டையை முற்றுகை இட்டுக் கோயிலைக் கைப்பற்றி இருக்கிறார். இவரும் இவர் மகன் ராமராவும் ஆண்ட முப்பது வருஷகாலம் ஜலகண்டேச்வரருக்கு யோக ஜாதகம். அதன்பின்தான் தகராறு. 1708-ல் தாவூத் கான் மராத்தியர்களைத் திரும்பவும் முறி அடித்து வேலூரைக்கைப்பற்றி இருக்கிறான். ஆர்க்காட்டு நவாபு களான சதாதுல்லாகான், குலாம் அலிகான், பாக்கர் அலி முதலியவர்களின் ஆட்சிக் காலத்திலும் பூஜை நிற்கவில்லை. என்றாலும் அப்போது இருந்த மகம்மதிய அரசிளங்குமாரன் அழகில் சிறந்த உருத்திரகணிகை ஒருத்தியை விரும்பி அவளைக் கோயில் பிராகாரத்தி லேயே சந்தித்துப் பலாத்காரம் பண்ணியிருக்கிறான். அழகியாகி இருந்த ஆரணங்கு நல்ல வீரமகளாகவும் இருந்திருக்கிறாள். அரச குமாரனது உடைவாளையே உருவி அவன் நெஞ்சில் பாய்ச்சி இருக்கிறாள்; தன்னையுமே மாய்த்துக் கொண்டிருக்கிறாள். அன்று இந்தப் பிராகாரத்தில் படிந்த ரத்தக் கறையை, முழுக்க முழுக்க ஜலத்துக்குள்ளேயே இருந்த ஜலகண்டேச்வர ராலும் கழுவித் துடைக்க முடியவில்லை. அந்த அவ மானம் தாங்க மாட்டாமலோ என்னவோ, அன்று கோயிலை விட்டு ஓடியவர்தான் இன்னும் திரும்பவில்லை. வேலூருக்குப் பக்கத்திலே உள்ள சின்னஞ் சிறிய ஊரான சத்துவாச் சேரியிலே, 'கோயிலுக்கே வரமாட் டேன்' என்று சத்தியாக்கிரஹமே செய்து கொண்டிருக் கிறார் இன்னும்.

இதுவரை சொன்னதில் எவ்வளவு கர்ண பரம்பரை, எவ்வளவு சரித்திர உண்மை என்று அறுதி இட்டு உரைக்க முடியாது. கோயில், கோட்டைக்குள் இருப்

பது நிதரிசனம். கோயிலுக்குள் மூர்த்தி இல்லை என்பதும் கண்கூடு. யார் காலத்தில் யாரால் வெளியேற்றப்பட்டார் என்பதற்குப் போதிய சரித்திரச் சான்றுகள் கிடைக்கவில்லை. சுமார் இருநூறு வருஷங்களாக, ஆங்கிலேயர் ஆட்சி நடந்த காலம் முழுவதும், அதற்கு முன்னும் பின்னும் கோயிலுக்குள் மூர்த்தி இருக்கவில்லை என்பதுமட்டும் நிச்சயிக்கமுடிகிறது. இந்த மூர்த்தியைத் திரும்பவும் கோயிலுக்குள் எழுந்தருளப்பண்ண எவ்வளவோ முயற்சிகள். வேலூரில் உத்தியோகம் ஏற்றிருந்த பொழுது என்னால் இயன்றதை எல்லாம் நானும் செய்தேன். திரு. ராதாகிருஷ்ணன், திரு. ஹுமாயூன் கபீர் முதலியவர்களை எல்லாம் அழைத்தேன். கோயிலைக் காட்டினேன். ஜலகண்டேச்வரருக்கு 'வக்காலத்து' வாங்கிப் பேசினேன். பலன்தான் இல்லை. நாளும் கிழமையும் வரவேண்டாமா? ஜலகண்டேச்வரரே மனம் வைக்க வேண்டாமா!

கண்டத்தில் விடமும், கையினில்
மழுவும், காதினில்
துலங்கும் நாக
குண்டலத்து அழகும், தலையில்
வெண்மதியும், குரைகழல்
சிலம்பும், நன்னுதலில்
புண்டரத்து அழகும், பொருப்பன
மார்பில் புனை தலை
மாலையின் சிறப்பும்
கண்டு அகமகிழ்ந்து களிக்கும் நாள்
உளதோ? கருணைசேர்
ஜலகண் டேச்வரனே!

என்று பாடுகிறார் இன்றைய கவிஞர் ஒருவர். அதுவேதான் வேலூர் வாசிகளின் பிரார்த்தனையும் ஏன், தமிழ் மக்கள் பிரார்த்தனையும் அதுதானே.

வேலூர் ஜலகண்டேச்வரர் கோயில் மிகவும் அழகான கோயில். கோயில், கோயிலைச் சுற்றியிருக்கும் கோட்டை, கோட்டையைச் சுற்றியிருக்கும் அகழி எல்லாம் விஸ்தாரமாக அமைந்தவை. கோயில் வாசலில், ராஜ கோபுரத்துக்கும் வெளியே நிற்கிருர்கள், துவார பாலகர்கள் இருவர். ராஜ கோபுரத்தைக் கடந்து உள்ளே சென்ருல் பெரிய வெளிப் பிராகாரம். அந்தப் பிராகாரத்திலே, தென் பகுதியிலே உலகப் பிரசித்திபெற்ற கல்யாண மண்டபம். மண்டபம் முழுவதும் ஒரே சிற்பச் செல்வம். மண்டபத்தின் முகப்பிலே ஆறு பெரிய கல் தூண்கள். ஒவ்வொரு தூணிலும் குதிரைமீது வரும் வீரர்கள் சிறுத்தை வேட்டையாடும்



கல்யாண மண்டபம்

காட்சி. தூண்களுக்குமேலே தவழ்ந்துதாழும் போதிகை. மண்டபத்திலே அடுக்கடுக்காக நாற்பது தூண்கள். பெரிய தூண்கள் இருபத்திநான்கு. உயர்ந்திருக்கும் உள் மண்டபத்திலே பதினுறு தூண்கள். ஒவ்வொரு தூணிலும் மூன்று தளங்கள், தளம் ஒன்றுக்கு நான்கு.

பட்டைகள் அப்படித் தூண் ஒன்றுக்கு பன்னிரண்டு சிற்பங்கள். கணக்குப் போட்டுத்தான் பாருங்களேன். நானூருக்கு மேற்பட்ட சிற்ப வடிவங்கள் அல்லவா ? மூஞ்சூறு வாகனப் பிள்ளையாரும், மயிலேறும் கோலக் குமரனும் பல நிலைகளில். ஊர்த்துவ தாண்டவர், பிக்ஷாடனர், கஜசம்ஹாரர், திரிபுராந்தகர், தக்ஷிணு மூர்த்தி என்று எண்ணரிய திருக்கோலங்களில் சிவபிரான், விஷ்ணுவின் அவதாரத் திரு உருவங்கள். கண்ணன் லீலைக் காட்சிகள், எண்ணற்ற பெண்கள் எழில் நிறைந்த வண்ணங்களில் எல்லாம் அங்கே உருப் பெற்றிருக்கின்றன. தூண்களை விட்டு விதானத்தை நோக்கினுல் விரிந்த தாமரை மலர்கள், அந்த மலர்களின் இதழ்களைக் கொத்திக் கொண்டிருக்கும் கிளிகள் எல்லாம் கல்லிலே உருவாயிருக்கின்றன.

பத்தொன்பதாம் நூற்ருண்டிலேயே ஆங்கில ரஸி கன் ஒருவனும் இக்கலைப் பொருள்களைக் கண்டு கழி பேருவகை எய்தி இருக்கிருன். இந்த மண்டபத்தையும், மண்டபத்தில் உள்ள சிற்பச் செல்வம் அத்தனையையும் அப்படியே பெயர்த்து எடுத்து, ஆங்கில நாட்டுக்கு அனுப்பி, அங்கே பிரைட்டன் என்னும் பட்டணத்திலே ஒரு கலைக் கூடத்தையே நிர்மாணித்துவிட முனைந் திருக்கிருன். மண்டபத்திலே உள்ள கற்கள், அக் கற் களைத் தாங்கும் தூண்கள் அத்தனைக்கும் நம்பர் போட்டு, பெயர்த்து எடுத்து, கப்பலில் ஏற்றி எடுத்துச் சென்று பிரைட்டன் நகரிலே திரும்பவும் மண்டபத்தை ஒன்றித்து விடுவது என்பது அவனது திட்டம். அதற் கென்று ஒரு பெரிய கப்பலையே கொண்டுவரச் செய் திருக்கிருன் லண்டனில் இருந்து. ஆனுல் ஜலகண் டேச்வரர், எவ்வளவுதான் அந்தர்யாமியாக இருந்தா லும், தனக்கும் தன் துணைவி அகிலாண்டேஸ்வரிக்கும் திருமணம் நடத்த பொம்மி ரெட்டி கட்டிய கல்யாண

மண்டபத்தை இழந்துவிட விரும்பவில்லை. என்ன பண்ணினாரோ, ஜலத்திலேயே ஒரு கண்டம் கப்பலுக்கு நேரும்படி செய்திருக்கிறார். கடலில் மிதந்த கப்பல்



விதானம் - கல்யாண மண்டபம்

மூழ்கி இருக்கிறது. மண்டபம் பெயர்வது தடைப்பட்டிருக்கிறது. தமிழ் மக்கள் பண்ணிய புண்ணியவசமாக எவ்வளவோ ஜாதகக்கோளாறு உடையதுதான் இந்தக் கோயில் என்றாலும், இங்கேயே நிலைத்து நிற்கிறது மண்டபம்.

கல்யாண மண்டபத்தைப் பார்த்த பின் வேறு ஒன்றையுமே பார்க்கத் தோன்றாது நமக்கு. பார்க்க வேண்டியதும் அதிகம் இல்லைதான். என்றாலும் கோயிலின் உட்பிராகாரத்துக்கும் செல்லலாம். ஜலகண்டேச்வரரும் அவரது துணைவி அகிலாண்டேஸ்வரியும் கோயில் கொண்டிருந்த (ஆனால் அந்தச் சுவடே இல்லாமல் காலியாய் வெற்றிடமாய் இருக்கும்) கர்ப்பக்கிருஹத்தை எல்லாம் பார்க்கலாம். கர்ப்பக்கிருஹத்தின் வெளியே உள்ள ஒரு மண்டபத்திலே ஒரு சுரங்கப்

பாதை. அந்தப் பாதை விரிஞ்சிபுரம் வரை செல்கிறது என்று சொல்வார்கள் மக்கள். ஆனல் அப்படிச் சென்று பார்த்தவர்கள் ஒருவரும் இல்லை. அதைப்பற்றி நாமும் அதிக அக்கரை காட்ட வேண்டியதில்லை.

தமிழ்நாட்டில் உள்ள கோட்டைகளில் எல்லாம் மிகவும் அழகுடையது வேலூர்க் கோட்டைதான். செஞ்சிக் கோட்டை அளவிலும், உறுதியிலும் உயர்ந்ததுதான். ஆனல் இக் கோட்டையில் உள்ள அழகு அங்கு இல்லை. கோட்டை சதுர வடிவமானது. கோட்டை மதிலில் இரண்டு அடுக்குகள். கீழ்த்தளத்தில் அர்த்தசந்திர வளைவுகள். கோட்டைச் சுவரின் மேல் தளத்திலே ஒரு கார் செல்லக்கூடிய அளவுக்கு வீதி. கோட்டையைச் சுற்றி அகழி. கோட்டைக்குள்ளே வட ஆர்க்காடு மாவட்டத் தலைமைக் காரியாலயங்கள். அங்கேயே போலீசார் பயிற்சிப் பள்ளி. இவைகளைத் தவிர, கோட்டைக்குள்ளேயே ஒரு மசூதி, ஒரு கிறிஸ்துவக் கோயில் எல்லாம். எம்மதமும் சம்மதம் என்ற சமரச சன்மார்க்கத்தையே அல்லவா பறைசாற்றுகிறது இக் கோட்டை. கோட்டையைப் பார்ப்பதற்காகவே வேலூருக்குப் போகலாம் ஒரு நடை. அங்கு நடந்த சிப்பாய் கலகம்-வேலூர் புரட்சி இயக்கம் இவைகளையும் தெரிந்து கொள்ளலாம் கோட்டைக்குள் சென்றல். கோட்டைமீது வானளாவிப் பறக்கும் நாட்டுக் கொடிக்கு வணக்கம் செலுத்தி விட்டுத் திரும்பலாம்.



## 10

# சேயாற்றில் வென்ருன்

பல்லவ மன்னர்கள் இலக்கியப் பெருமை பெற்றவர்கள். நந்திவர்மன் தொண்டை மண்டலத்தை ஆண்டவன் ஆனதினுல் நந்தியம்பெருமாள் தொண்டைமான் என்ற பெயரும் பெறுகிருன். இவனைப் பாட்டுடைத் தலைவனுகக் கொண்டு ஒரு கலம்பகம் எழுதி யிருக்கிருன் ஒரு புலவன். 'கலம்பகம் பாடிய புலவன் நந்திவர்மன் தம்பியே என்றும், இருவருக்கும் இருந்த பகை காரணமாகக் கலம்பகத்தில் அறம் வைத்துப் பாடினுன் என்றும், கலம்பகப் பாடல்களைக் கேட்டால் உயிர் துறக்க நேரிடும் என்று கவிஞனே எச்சரித்தபோதும், தமிழ்க் கவிதையில் உள்ள ஆர்வத்தால் கலம்பகப் பாடல்களைப் பாடக் கேட்டு, கடைசியில் சிதையில் ஏறி உயிர் நீத்தான் அவன்' என்றும் கர்ண பரம்பரை கூறும்; பிற்காலப் பாடல் சிலவும் வலியுறுத்தும் இதை. கலம்பகப் பாடல்களைப் படித்தால், அப்படியே உயிர் கொடுத்துக் கேட்கக்கூடிய பாடல்களே என்று தோன்றும் (கதையில் உண்மை ஒரு சிறிதும் இல்லாவிட்டாலும் கூட). கலம்பகத்தின் மூலம் அவனது வெற்றிப் பிரதாபங்களை யெல்லாம் அறிகிருேம் நாம்.

பாண்டியர், சோழர், சாளுக்கியர்களை, நென்மலி, மண்ணைக்குடி, கருவூர் என்ற இடங்களில் நடந்த போர்களில் இவனே வெற்றிபெற்றிருந்தும், கலம்பகத்தில் இவன் தெள்ளாற்றில் பகைவர்களை வெற்றி கண்டதையே பிரதானமாகக் கூறியிருக்கிறது. 'தெள்ளாறை நந்தி' 'தெள்ளாற்றில் வென்றான்' என்ற விருதுப் பெயர் நிலைத்து நின்றிருக்கிறது. இவனது கல்வியறிவு, வள்ளன்மை, போரில் வெல்லுந் திறத்தை யெல்லாம் கலம்பகம் பாடிய கவிஞன் மட்டுமல்ல, பாரதம் பாடிய பெருந்தேவனாரும் பாராட்டியிருக்கிறார், ஓர் அழகான பாட்டில்:

> வண்மையால், கல்வியால்
> மாபலத்தால், ஆள்வினையால்
> உண்மையால் பாராள்
> உரிமையால்—திண்மையால்
> தேர்வேந்தர் வான்ஏறத்
> தெள்ளாற்றில் வென்றானோடு
> யார்வேந்தர் ஏற்பார் எதிர்

தெள்ளாற்றில் வென்றான் என்ற பெயர் நந்திவர்மனுக்கு நிலைத்ததுபோல, சேயாற்றில் வென்றான் என்ற பெயரும் வட ஆற்காடு மாவட்டத்தில் ஒரு சிறு ஊருக்கு நிலைத்திருக்கிறது. (பாலாற்றில் வென்றான் என்றும் ஓர் ஊர் உண்டு. அதைப் பாலாற்று வண்ணான் ஆக இன்று மாற்றியிருக்கிறார்கள். பாலாற்றில் குடிக்கவே தண்ணீர் கிடையாதே, வண்ணானுக்கு எங்கே தண்ணீர் கிடைக்கப் போகிறது?) இந்தச் சேயாற்றில் வென்றவன் வேறு யாருமில்லை. சமய குரவர்களில் முதல்வரான ஆளுடைய பிள்ளையாம் ஞானசம்பந்தரே. அந்த வரலாறு என்ன என்று தெரிந்து கொள்ள செய்யாறு என்று இன்று வழங்கும் திருவோத்தூர் என்னும் தலத்துக்குப் போகிறோம்.

இளவயதினராக இருந்த ஞானசம்பந்தர், நாட்டில் பரவி இருந்த புறச் சமயத்தினராம் சமணரோடு வாதிட்டு வெற்றி காணவேண்டியவராகவும் இருந்திருக்கின்றார். மதுரையில் சமணர்களோடு கனல்வாதம், புனல்வாதம் எல்லாம் புரிந்து, அவர்களை வென்று, அங்கிருந்து ஆண்ட கூன்பாண்டியனின் கூனை (உடலில் உள்ள கூனையல்ல; உள்ளத்தில் உள்ள கூனையே) நீக்கி, அவனைச் சுந்தர பாண்டியனாக்கி, அவனது மனைவி மங்கையர்க்கரசி, அமைச்சர் குலச்சிறை முதலியவர்களால் வணங்கித் துதிக்கப்பெற்றவர் அவர் என்பது வரலாறு. இந்தச் சமணர்கள் அவரை இத்துடன் விட்டுவிடவில்லை. பாண்டிய நாடு, சோழ நாடு எல்லாவற்றையும் சுற்றிவிட்டு, தொண்டை நாட்டிலே உள்ள திருவோத்தூர் என்னும் தலத்துக்கு வந்தாலும், அங்கேயும் சமணர்கள் ஆதிக்கம் மிகுந்திருப்பதையே காண்கின்றார். தென் திசையிலிருந்து வந்த ஞானசம்பந்தர் சேயாற்றின் தென்கரையில் இருந்தே, திருவோத்தூர் வேதபுரி நாயகன் கோபுரத்தையும் மதிலையும் தரிசித்து அந்தக் கரையிலுள்ள திருமடத்தில் தங்குகிறார். மதுரையில் ஞானசம்பந்தர் நிகழ்த்தியவைகளைக் கேட்டிருந்த சேயாற்றுச் சமணர்கள் ஒரு வேள்வி செய்து அதிலிருந்து எழுந்த கொடிய பாம்பொன்றை அவர்மீது ஏவுகின்றார்கள். அவரோ பாம்பை சமணர்களது 'வேந்தன் வாழ் இஞ்சி சூழ் திருமனைக்கே ஏகென்று' உத்திரவு இடுகிறார். அதனால் துயருற்ற அரசன் வந்து அடிவணங்க, ஞானசம்பந்தர் :

> தோட்டீரே! துத்தி ஐந்தலை நாகத்தை
> ஆட்டீரே; அடியார்வினை
> ஓட்டீரே? உம்மை ஏத்தும், ஓத்தூர்
> நாட்டீரே! அருள் நல்குமே

என்று இறைவனை வேண்டுகிறார். இறைவனும் மகுடி

ஏந்திப் பாம்பாட்டியாக வந்து, கண்டோர் வியக்கப் பாம்பை ஆடவிட்டு அதைப் பிடித்துக்கொண்டே கோயிலுக்குள் சென்று மறைகிறார். இதனால் சமணர் பகை வளர, அரசன் விரும்பியபடி புனல்வாதத்திற்கே ஒத்துக்கொள்கிறார். சமணர்கள் எழுதியிட்ட ஓலையைச் சேயாற்று வெள்ளம் அடித்துக்கொண்டு போய் விடுகிறது. ஆனால் ஞானசம்பந்தர் பாடிய பதிகத்தில் ஒரு பாட்டை ஏட்டில் எழுதி ஆற்றில் இட, அது புதுநீரைக் கிழித்துக்கொண்டு முன்னேறி ஒரு பழம் பதியை அடைகிறது. இவ்வாறு ஏடு எதிர் சென்று நின்று தங்கின இடமே அன்று முதல் சேயாற்றில் வென்றான் என்ற பெயரால் வழங்கப்படுகிறது. சேயாற்றில் வென்றவன் வேதபுரி நாயகனும் அவன் புகழ் பாடும் நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தனுமே என்றாலும், பெயர் நிலைக்கிறது ஒரு சிறு ஊருக்கு. இப்படியெல்லாம் தோற்றாலும் சமணர்கள் மாத்திரம் தங்கள் வாதத்தை விடுபவர்களாக இல்லை. 'இவ்வூர்க் கோயிலிலும் ஆற்றங்கரையிலும் காயாது நிற்கும் ஆண்பனைகள் நிற்கின்றன. அவைகளைக் காய்க்கும் பெண் பனைகளாக ஆக்க முடியுமா?'' என்று சம்பந்தரிடமே மறுபடியும் 'சவால்' விடுகிறார்கள். அந்தச் சவாலை ஏற்று 'குரும்பை ஆண் பனை ஈன்குலை ஓத்தூர்' என்ற பாடலைப் பாட எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் கோயிலுக்குள் நின்ற ஆண்பனை குலைதள்ளி, பெண் பனையாக மாறுகிறது. இன்றைக்கும் அந்தப் பனைகளின் வாரிசாகக் கோயில் பிரகாரத்திலேயே, குலை ஈனும் ஐந்து பனைகள் நின்றுகொண்டிருக்கின்றன.

இந்த விதமாகச் சமணர்களை யெல்லாம் வெற்றி கண்ட இடமாகவும், ஆண்பனை பெண்பனையான அற்புதம் நிகழ்த்திய தலமாகவும் இருப்பதே சம்பந்தர் தேவாரம் பெற்ற திருவோத்தூர் என்று அன்று வழங்கின



நர்த்தன விநாயகர்

இன்றைய செய்யாறு. (பாலாற்றுக்கு ஒரு சேய் ஆருக விளங்குவதே அழுத்தம் திருத்தமாகச் செய்யாறு என்றுமக்களால் அழைக்கப்படுகிறது.) இங்கு கோயில் கொண்டிருப்பவர்தான் வேதபுரி நாயகன். அவர் துணைவியின் திருநாமமோ இளமுலை நாயகி. வேதங்களை யெல்லாம் உலகுக்கு வழங்கிய பெருமகனுன இறைவனை வேதபுரியான் என்று இத்தலத்தில் மட்டும் அழைப்பானேன்? வேதங்களை ஓதியுணர்ந்து பிறருக்கு உரைக்கும் முனிவர்களே வேதம் ஓதுதலை மறந்துவிடுகிருர்கள். அவர்கள் எல்லோருமாக வேண்ட இறைவனே வேதியர் உருவில் வந்து தேவர் முனிவர்களுக்கெல்லாம் வேதத்தை விரித்து ஓதுகிருர். வேதம் ஓதுவித்த ஊர் ஓத்தூர் எனப் பெயர் பெறுகிறது. இதை இறைவனே சொல்லுவதாகக் காஞ்சிப் புராணம் கூறும்.

தத்து நீர் அலைபுரட்டும் சேயாற்றின்
தடங் கரைக் கண், இமையோர் கட்கும்
மெய்த்தவர்க்கும், ஓதுவித்தோம் ஆதலினுல்
மேவு திருவோத்தூர் என்றும்
அத்தலத்தில் எமைத் தொழுவோர்
அருமறை நூல் முழுதுணர்ந்து வீடுசேர்வர்

என்பது பாட்டு. இனி அந்த மறைகளே விரும்பியபடி வேத ஒலிகளை எல்லாம் சிவபெருமான் தமது டமருகத்தில் அடக்கி, அந்த டமருகத்தை ஒலித்துக் கொண்டு வீர நடனம் ஆடிய தலமும் இதுவே என்று தல்வரலாறு கூறும். கோயிலில் உள்ள நடராஜரது திரு உருவில், வீர நடனத்தின் புதிய சாயை ஒன்றும் இல்லைதான். என்ருலும் அங்கு வீர நடனம் ஆடும் பெரிய பிள்ளை உண்டு. கோயில் கோபுர வாயிலைக் கடந்து, அதற்கடுத்த வாயிலையும் கடந்து, வெளி மண்டபத்தையும் கடந்து, உட்கோயிலுக்குச் செல்லும் வழியில் ஒரு பிள்ளையாரை, வெளியே நிறுத்தி இருக்கிருர்கள்.



சேயாற்றுக் கோயில்

அவருக்கு மார்புவரை ஒரு துணியையும் சுற்றி வைத்திருக்கிறார்கள். கலை உள்ளம் படைத்த அன்பர்கள் அர்ச்சகரை அழைத்துப் பிள்ளையாருக்கு அணிந்திருக்கும் அந்த வஸ்திரத்தை அகற்றச் செய்தால் அவர் ஒரு நர்த்தன விநாயகர் என்றும் அந்தத் திருக்கோலம் மிகவும் அழகான வடிவம் என்றும் காண்பர். இந்த நர்த்தன கணபதியையே 'வென்றாடு திருத்தாதை வியந்து கைத் துடிகொட்ட நின்றாடும் மழகளிறு' என்று அன்றே அழைத்திருக்கிறார்கள் பக்தர்கள். வீர நடனம் ஆடிய தந்தை துடிகொட்ட வீர நடனமே ஆடுகிறார் விநாயகர். கலை உலகில் ஓர் அரிய சிருஷ்டி அது. நான்கடி உயரத்தில் திருவாசியும் சேர்த்து ஒரே கல்லில் செய்யப்பட்டுள்ள திருவுருவம் அது.

இனி கோவிலுள் சென்று வேதபுரி நாதனையும் இளமுலை நாயகியையுமே தொழுது திரும்பலாம். வேதபுரியானைப் பற்றித்தான் வேண்டியமட்டும்தெரிந்து கொண்டோமே. அம்மையைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டாமா? தக்கன் மகளாகிய தாக்ஷாயணியை இறைவன் மணந்து கொள்கிறான். மாமனாகிய தக்கனுக்கு, மருமகனாகிய இறைவனை விடத் தான் உயர்ந்தவன் என்ற செருக்கு. அதனால்

இருவருக்கும் பிணக்கு. தக்கன் இயற்றும் வேள்வியில், மருமகனுக்கு அக்ரஸ்தானம் இல்லை என்பது மட்டும் அல்ல, அழைப்பே இல்லை. இறைவனுக்கோ ஒரே கோபம். மாமனுக்கும் மருமகனுக்கும் இடையே வளர்ந்துள்ள கசப்பைத் தீர்த்து வைக்க மகளே புறப்படுகிருள், தக்கன் வேள்வி நடத்தும் இடத்துக்கு. அங்கு அவளுமே அவமதிக்கப்படுகிருள் தந்தையால். அதனுல் தன்னுடலையே தீக்கிரையாக்குகிருள் தாக்ஷாயணி. பின்னர் இறைவன் அருளால் இமவான் மகளாகப் பிறந்து வளர்ந்து பேதைப்பருவம் எய்துகிருள். பரமனை அடையக் கருதித் தவச் சாலை புகுந்து தவக் கோலம் கொள்கிருள். தவத்திற்கு இரங்கிய இறைவன் "இளமுலையே! நீ எனது வார்த்தையைக் கேட்காமல் தக்கன் வேள்விக்குச் சென்ருய். கொண்ட புருஷனின் சொல்லைத் தட்டிய பாவம் நீங்கினுல்தான் உன்னை மணப்பேன்" என்கிருன். அம்மையும் "நானே பேதைச் சிறுமி, பாவம் தீரும் வழியை அருளவேண்டும்" என்று வேண்டுகிருள். அவனும் "திருவோத்தூர் என்னும் தலத்துக்குச் சென்று என்னை நோக்கித் தவம் செய்" என்கிருன். அப்படியே செய்து இளமுலைநாயகி இறைவனை மணந்து கொள்கிருள். அம்மையின் திரு உரு அழகானது ஒன்று. பேதைப் பருவத்திலே தவம் புரிந்து, பெதும்பைப் பருவத்திலே இறைவனை மணந்து கொண்டவள் அவள். மங்கைப் பருவத்தில் மணுளனை மணந்து கொண்ட நங்கையாக மற்றைய கோயில்களில் காட்சி தருபவளே இந்தத் தலத்தில் இளவயதில் இறைவனை மணந்த பேதையாக நிற்கிருள்.

சம்பந்தர் பாடிய பதிகம் ஒன்றைத் தவிர இப்பதியைப் பாடிய பெருமக்கள் பலர். 'நிலவு புகழ் திருவோத்தூர்' என்று பட்டினத்தடிகள் பாடினுல், 'சீதமலர் மென்சோலை சூழ் திருவோத்தூர்' என்று சேக்கிழார்

பாடுகிருர். தல புராணம் ஒன்றும் பாடப்பட்டிருக்கிறது விரிவாக. காஞ்சிக்குத் தெற்கே பதினெட்டு மைல் தொலேவிலேயே இருப்பதால் அன்பர்கள் சென்று 'இளமுலேயாம் ஆத்தாள்தனேப் பணிந்து, அன்பால் துதித்து, அருள் படிந்து கூத்தாடிய தாள் உளத்து இருத்தி மீளலாம்.'



# 11

## கச்சி ஏகம்பன்

திருநாவலூரிலே பிறந்து, திருவெண்ணெய் நல்லூரிலே இறைவனுல் ஆட்கொள்ளப்பட்டு, திருவாரூரிலே பரவையை மணந்து சம்பிரமமாக வாழ்ந்தவர் சுந்தரர். இவரது வாழ்க்கை மிகவும் ரஸமாக அமைந்த தொன்று. இவர் வீட்டுச் சாப்பாட்டுக்குக் குண்டையூரில் நெல் பெற்ருல் அதைத் திருவாரூர் கொண்டு சேர்க்க இறைவனையே கேட்பார். முதுகுன்றத்தில் பணம் கிடைத்தால் அதை அங்குள்ள மணிமுத்தாற்றில் போட்டுவிட்டுத் திருவாரூர் கமலாலயத்தில் எடுத்துக் கொடுக்க வேண்டுவார். அவிநாசி சென்ருல் எத்தனையோ வருஷங்களுக்கு முன்பு அங்கு ஒரு பிள்ளையை முதலை உண்ட செய்தி அறிந்து, 'கரைக் கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே' என்று இறைவனுக்கே கட்டளை இடுவார். அத்தனை உரிமை அவருக்கு இறைவனிடத்தில். அத்தனையையும் செய்வார் இறைவன் அட்டியில்லாமல் இந்தத் தம்பிரான் தோழருக்கு. இதற்கெல்லாம் பரிசாக இறைவன் இவரிடம் பெறுவது ஒவ்வொரு தடவையும் பத்துப் பத்துப்பாட்டே.

இந்த சுந்தரர் திருஒற்றியூர் வருகிருர். அங்குள்ள கன்னிப்பெண் சங்கிலியைக் கண்டு காதலிக்கிருர். அவளை மணம் முடித்து வைக்க அங்குள்ள மாணிக்கத் தியாகரை வேண்டுகிருர். அவரும் இணங்குகிருர். சங்கிலிக்குப் பரவை ஞாபகம் வருகிறது. இவர் ஒரு வழி சொல்லிப் 'பெரு வழி' போகிறவராயிற்றே, ஆதலால் தன்னை 'எக்காலமும் பிரியேன்' என்று இறைவன் சன்னிதியிலே சத்தியம் செய்து தரச் சொல்லுகிருள். கொஞ்சமும் தயங்காமல் சுந்தரர் சத்தியம் செய்கிருர்; மணம் முடிகிறது, கொஞ்ச நாட்கள் கழித்ததும் திருவாரூர் தியாகர் ஞாபகமும் அத்துடன் பரவையின் ஞாபகமுமே சேர்ந்து வருகின்றது. சத்தியத்தையெல்லாம் காற்றில் பறக்க விட்டு விட்டுப் புறப்பட்டு விடுகிருர் திருவொற்றியூரை விட்டு சத்திய பங்கம் நேர்ந்ததன் காரணமாக இருகண்களையுமே இழக்கிருர். என்ருலும் திருவாரூர் செல்வதை விடவில்லை இந்த வன்தொண்டர். வெண்பாக்கம் சென்று இறைவனிடமே கேட்டு ஊன்றுகோல் ஒன்று பெறுகிருர். கச்சிக்கு வந்து ஏகம்பனை வணங்கி இடக்கண்ணில் ஒளி பெறுகிருர். இவ்வாறு ஒரு கண் ஒளி பெற்ற பின் உளம் கசிந்து பாடுகிருர்.

ஆலந்தான் உகந்து அமுது செய்தானை,
 ஆதியை அமரர் தொழுதேத்தும்
சீலந்தான் பெரிதும் உடையானை
 சிந்திப்பார் அவர் சிந்தையுளானை
ஏலவார் குழல் உமை நங்கை
 என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனை கம்பன் எம்மானை
 காணக் கண் அடியேன் பெற்றவாறே!

ஆகவே, நல்ல ஞானக் கண் பெற விரும்புபவர்கள், கண் பெற்ற பயனைப் பெறவேண்டியவர்கள் எல்லாம்

சென்று காணவேண்டிய தலம் கச்சியும் அங்கு கோயில் கொண்டிருக்கும் ஏகம்பனுமே.

மக்களுக்கு முக்தி தரும் நகரங்கள் ஏழு என்பர் பெரியவர்கள். காஞ்சி, அயோத்தி, மதுரை, மாயை, காசி, அவந்திகை, துவாரகை என்றும் கணக்கிடுவர். இவை ஏழில் காஞ்சியை ஒதுக்கி விட்டால் மூன்று சிவ ஸ்தலங்கள், மற்றைய மூன்றும் விஷ்ணு ஸ்தலங்கள். காஞ்சி நகரம் ஒன்றுதான் சைவ வைணவ சமரசம் கொண்டதாய் இருவருக்கும் பொதுவானதாக இருக்கிறது. அதனுல்தான் முத்தி தரும் நகரங்களுள் முதல் ஸ்தானம் வகிக்கிறது காஞ்சி என்னும் கச்சி.



கைலாசநாதர் கோவில்

கச்சிப்பேடு என்று பழைய கல்வெட்டுகளில் வழங்கப் படுவதே காஞ்சி. காஞ்சீபுரம் என்றும் இன்று வழங்கப் படுகிறது. 'கேட்ட வரம் அளிக்கும் கீர்த்தியுள்ள தெய் வங்காள் கூட்டோடே எங்கே குடி போனீர்?' என்று கேட்கிருர் ஒரு கவிஞர். அவருக்குப் பதில் சொல்ல லாம் நாம். அத்தனை தெய்வங்களும் சேர்ந்து ஒன்ருகக்

குடி வந்திருக்கும் தலமே காஞ்சி. அங்குள்ள மக்களைக் கூட ஜன சங்கியையக் கணக்கு எடுத்து விடலாம். ஆனால் அங்குள்ள கோயில்களையும் மூர்த்திகளையும் கணக்கெடுப்பதென்பது என்னவோ சிரமசாத்தியமான காரியந்தான். நமக்குத் தெரியும், அண்ணன் தம்பிமார் சொத்துக்களைப் பாகப் பிரிவினை செய்து கொள்வார் களென்று. அத்தான் மைத்துனர்களுக்குள் ஏது பாகப் பிரிவினை? அந்தப் பாகப் பிரிவினையே நடந்திருக்கிறது இங்கே. காஞ்சி ஐந்து மைலுக்கு மேலே நீண்டிருக்கும் பெரிய ஊர். இதை இரண்டு கூருக்கி, சிவனும் விஷ்ணுவுமே பங்கு போட்டுக் கொண்டிருக்கிருர்கள். மேல் பகுதி சிவ காஞ்சி. கீழ்ப்பகுதி விஷ்ணு காஞ்சி. பங்கு வைத்தலில் கூட நேர்மை இல்லை. சிவன் பெரிய தொரு பங்கைத் தனக்கு எடுத்துக்கொள்கிருன். அவன், அவன் துணைவி காமாக்ஷி, அவன் மகன் குமரன் இவர் கள் இருக்கும் பகுதியே பெரிய காஞ்சி. அத்திவரதரும் அவரைச் சேர்ந்தவர்களும் சிறிய காஞ்சியிலே இருக் கிருர்கள். சத்திய விரதர், மணிகண்டீசர் ஐராவதீசுவரர் கச்சபேசுவரர், தான்தோன்றி ஈசுவரர், புண்ய கோட்டீசர், பாணுதரீசர் என்ற பெயர்களில் முப்பதுக்கு மேற்பட்ட கோயில்களில் இருக்கிருன் இறைவன். அதே போல் பச்சை வண்ணர், பவள வண்ணர், சொன்ன வண்ணம் செய்தவர், ஆதிகேசவர், அழகியசிங்கர், உலகளந்தவர், ஜகதீசர், பாண்டவப் பெருமாள் என்ற பெயர்களில் விஷ்ணுவும் கிட்டத் தட்ட இருபதுக்கு மேற்பட்ட கோயில்களில் கொலுவிருக்கிருன். பெரிய காஞ்சிப் பகுதியில் விஷ்ணுவுக்கும், சிறிய காஞ்சிப் பகுதியில் சிவனுக்கும் சில சில இடங்களை விட்டுக் கொடுத்து நிரம்பவும் சௌஜன்யமாகவே வாழ்கிருர்கள் அத்தானும் மைத்துனனும். எத்தனை பேர் எத்தனை பெயர்களில் எத்தனை கோயில்களில் இருந்தாலும் தலை

மைப் பதவி இருவருக்குத் தான். விஷ்ணு காஞ்சியின் தலைவர் அத்திகிரி வரதர். சிவ காஞ்சியின் தலைவர் ஏகம்பன். இன்று கச்சி ஏகம்பனைப் பார்ப்பதோடு திருப்தி அடையலாம். தலைவரைக் கண்டு வணங்கி விட்டால் மற்றவர்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் அல்லவா ?

காஞ்சியில் இருக்கும் தெய்வங்களுக்குள் முதன்மை யானவர் கச்சி ஏகம்பனே என்றாலும், கலை வளத்தாலும் சரித்திரப் பிரசித்தியாலும் ஏகம்பனுக்கு முன் நிற்பவர் கைலாச நாதரே. இந்தக் கைலாசநாதரது கோயில் பல்லவ மன்னன் ராஜ சிம்மனால் கட்டப்பட்டது. அதனால் கல் வெட்டுக்களில் ராஜசிம்மேச்சுரம் என்று காணப்படும். ஊருக்கு மேற்கே ஓர் ஒதுக்குப்புறமான பல்லவ மேடு என்னும் இடத்திலே, அற்புதமான சிற்பவடிவங்கள் பலவற்றை உள்ளடக்கிக்கொண்டு நிற்கிறது கோயில். கைலைக்கு நிகரான தலம் ஆனதினால் கைலாசநாதர் அங்கே குடி வந்திருக்கிறார், பதினாறு பட்டை போட்ட லிங்கத் திரு உருவில். இவரைத் தற்சமயம் வணங்கி விட்டு, விரைவாகவே செல்லலாம் ஏகாம்பரர் கோயி லுக்கு. சென்னையிலிருந்து பங்களூர் செல்பவர்கள் கண்ணில், சென்னையிலிருந்து முப்பத்தி எட்டாவது மைல்கல் பக்கம் 'Temple view' என்று எழுதப்பட்டுத் சாலையில் நிறுத்தப்பட்டிருக்கும் ஒரு பலகை தென் படும். அதுவரையில் குனிந்தே சென்றிருந்தாலும், அங்கு நிமிர்ந்து பார்த்தால் ஒரு பெரிய கோபுரம் வானுற வளர்ந்து நிற்பதைக் காணலாம். அந்தக் கோபுரத்தைக் குறிக்கோளாக வைத்துக்கொண்டு காஞ்சிக்கு வரலாம். கச்சி ஏகம்பன் கோயில் ராஜ கோபுர வாயிலின் வழியாக நுழையலாம். இக்கோபுர வாயில் தென் திசையில் இருந்தாலும் கோயிலில் உள்ள மூர்த்தி கிழக்கு நோக்கியவராகத்தான் இருக்கிறார்.



ஏகாம்பரன்

உலகீன்ற அம்மை உமை, உலகம் உய்யக் கைலையிலிருந்து இறங்கி வந்து கம்பை நதிக் கரையிலே மணலால் லிங்கம் ஒன்றை அமைத்துக்கொண்டு பூஜை செய்கிருள். அந்தச் சமயத்தில் கம்பை நதி பெருக்கெடுத்து வர, அம்மை நடுக்கமுற்ருலும் நம்பிக்கையை இழக்காமல் லிங்கத் திரு உருவையே கட்டிப் பிடித்துக் கொள்கிருள். அம்மையின் வளை அணிந்த கைகளால் இறுகத் தழுவியதால், அவளது வளைத் தழும்பும் முலைத் தழும்பும் பெற்ற பெருமான், தழுவக் குழைந்த தலைவனுக அம்மைக்கு அருள் பாலித்தார் என்பது வரலாறு. இத் தலத்தில் பிருதிவி உருவில் இருக்கும் மூலத் திரு உருவை விடப் பிரசித்தி பெற்றவர் ஏகாம்பரநாதர். இவர் கர்ப்பக் கிருஹத்துக்குப் பின்னுள்ள மாமரத்தடியில் தம் துணைவி ஏலவார் குழலியுடன் கொலு விருக்கிருர். நான்கு வேதங்களும் சேர்ந்தே இந்த மாமரமாக உருவாகி யிருக்கிறது என்பது புராண வரலாறு. மாமரத்தின் நான்கு கிளைகளில் பழுத்து உதிரும் கனிகளுக்கு நான்கு வித மான சுவை என்பர் உண்டு மகிழ்ந்தவர்கள். இந்தக் கனிகளை உண்பவர்களுக்குப் புத்திரப் பேறு சித்திக்கும் என்பது நம்பிக்கை.

கம்பமாக லிங்கத் திரு உருவில் இருப்பவன் கம்பன் என்று அழைக்கப்படுவதில் வியப்பில்லை. இல்லை, கம்பை நதிக்கரையில் நிற்பவன் ஏகம்பன் என்று சொல்வதிலும் தவறில்லை. இது போக, ஏகம்பனுக்கும், ஏகாம்பரனுக்குமே விளக்கம் தருவார்கள் அறிஞர்கள். கம்பம் என்றால் நடுக்கம். நடுக்குற்ற உமையால் தழுவப் பெற்றதால் ஏகம்பன் ஆனான் என்றும், ஆம்ரம் என்றால் மாமரம், மாமரத்தடியில் வீற்றிருப்பவர் ஏகாம்பரர் ஆனார் என்றும் விளக்கங்கள் வளரும். இவற்றையெல்லாம் ஆராய்ச்சியாளர்களுக்கே விட்டுவிடலாம். இந்தக் கோயிலில் இந்த ஏகம்பனுக்குப் போட்டியாக எழுந்துள்ளவர் மூவர். அவர்கள் மூவரும் முறையே வெள்ளக் கம்பன், கள்ளக் கம்பன், நல்ல கம்பன் என்ற பெயரில் லிங்கத் திருஉருவில் அமைந்திருக்கிறார்கள். இவர்களை முப்பது ஏக்கர் பரப்பிலே உள்ள இந்தக் கோயிலில் தேடிச் சென்று வணங்கி விடைபெறுவது சிரமமே.

ஆதலால் 'மாவடி வைகும் செவ்வேள்' மலரடி வணங்கிவிட்டு, தனித்ததொரு கோயிலிலே இருக்கும் ஏலவார் குழலியையும் வணங்கலாம். (ஒரு விசேஷம்: காஞ்சியில் இறைவன் எண்ணற்ற திருப்பெயர்களில் எண்ணற்ற கோயில்களில் இருந்தாலும், அங்கெல்லாம் அம்மனுக்குத் தனித்த சந்நிதி கிடையாது. காமக் கோட்டத்தில் கொலுவிருக்கும் காமாட்சியின் சந்நிதி ஒன்றே அம்மன் சந்நிதியாகும்.) இன்னும் மேலே வடக்குப் பிராகாரத்தில் நடந்தால் நம்மை வெளியே போக விடமாட்டார், நிலாத் திங்கள் துண்டப் பெருமாள்.

நீரூரும் செஞ்சடையாய்! நெற்றிக்கண்ணாய்!
நிலாத் திங்கள் துண்டத்தாய்!
நின்னைத் தேடி

ஓரூரும் ஒழியாமே ஒற்றித் தெங்கும்
உலகமெலாம் திரிதந்து,
நின்னைக் காண்பான்
. தேரூரும் நெடுவீதி பற்றி நின்றேன்

என்று அப்பர் பாடலைப் படித்த நான் இத்தனை நாளும் நிலாத் திங்கள் துண்டத்தான் சிவபெருமானே என்று நினைத்திருந்தேன். ஆனால் இந்தப் பெருமான் நல்ல பட்டை நாமம் சாத்திக்கொண்டு அழகான சிலை வடிவில் பெருமாளாக நிற்கிறார். மக்களில் ஒரு சிலர் ஏதோ சைவம், வைணவம் என்ற பேதம் உடையவர்களாக வாழ்கிறபோது நிலாத் திங்கள் துண்டத்தான் ஆன சிவனே நிலாத் திங்கள் துண்டத்தான் ஆன விஷ்ணுவாக இந்த ஏகம்பன் கோயில் உள்ளே நிற்பது வியப்பிலும் வியப்புத்தானே !

ஏகம்பன் கோயில் கொள்ளும் இந்தக் காஞ்சி மிக்க சரித்திரப் பிரசித்தி பெற்றதொரு நகரம். கிறிஸ்து பிறப்பதற்கு முன்னமேயே சோழ நாட்டை ஆண்ட கரிகால் பெருவளத்தான் என்னும் திருமாவளவன், சாத்தன் அருளால் காஞ்சியில் செண்டு (சவுக்கு) பெற்றான் என்றும் அந்தச் செண்டு கொண்டே இமயத்தை அடித்தான் என்றும் சிலப்பதிகாரம் கூறும். பெரும்பாணாற்றுப் படையில் உருத்திரங் கண்ணனாராலும், க்ஷேத்திர வெண்பாவில் ஐயடிகள் காடவர்கோனாலும் பின்னர் மூவர் முதலிகளாலும் ளாலும் பாடப்பெற்ற பெருமையுடையது காஞ்சி. மகேந்திர வர்மன், நரசிம்ம வர்மன், பரமேசுவர வர்மன், ராஜ சிம்மன் முதலிய பல்லவ மன்னர்கள் இருந்து ஆண்ட, கலை வளர்த்த தலமாகவும் இருந்திருக்கிறது. இவற்றையெல்லாம்விட, சீன யாத்திரீகன் கியூன் சாங், இந்த நகரத்துக்கு கி. பி. 640-ல் வந்து பௌத்த சமய உண்மைகளைப் பரப்பினான் என்றும் இந் நகரத்தின் பெருமைகளை விரிவாக எழுதி வைத்தான்

என்றும் அறிகிறோம். அதோடு இங்கு ஓர் அரிய சர்வ கலாசாலையே அந்தக் காலத்தில் இருந்தது என்றும், இங்கிருந்தே வட நாட்டு நாலந்தா பல்கலைக் கழகத்துக்குத் தர்மபாலர் என்ற பேராசிரியர் சென்றார் என்றும் சரித்திரம் கூறுகிறது. இதெல்லாம் தெரிந்துதானோ என்னவோ, 'கல்வி கரையிலாக் கச்சி' என்றார் அப்பர். இந்தப் 'பாட்டினில் அடங்காக் காஞ்சி'யின் பெருமையைக் காஞ்சி புராணத்திலே விரிவாகக் காணலாம். இந்தப் பரந்த வையகமே கழனி, அந்த வையத்தின் தேயங்களே நன்செய்கள், அந்தச் செய்யிலே வளரும் கரும்பே தொண்டை வளநாடு. அக்கரும்பின் சாறால் ஆகிய கட்டியே கச்சி. அச் சர்க்கரைக் கட்டியில் உள்ள இனிய சுவையே கச்சி ஏகம்பன் கோயில் என்று கூறும் ஒரு பழம் பாட்டு. இனி அச் சர்க்கரைக் கட்டியைச் சுவைப்பது உங்கள் பேறு.



# 12

## காஞ்சி காமாட்சி

இறை வழிபாடு தமிழ் மக்கள் உள்ளத்திலே எப்படித் தோன்றிற்று, எப்படி வளர்ந்தது என்று தெரிந்து கொள்ள வேண்டியது அவசியந்தானே? கல் தோன்றி மண் தோன்ருக் காலத்தே முன்தோன்றி மூத்தவர்கள் தமிழ் மக்கள். அந்தப் பழங் குடி மக்கள் உண்ணத் தெரிந்திருக்கிருர்கள், உறங்கத் தெரிந்திருக்கிருர்கள். உடுக்கத் தெரிந்திருக்கிருர்கள். இதனுல் அவர்கள் வாழ்வில் ஓர் அமைதி நிலவியிருக்கிறது. ஆனுல் இந்த அமைதியைக் குலேத்திருக்கிறது இயற்கையில் எழுந்த இடியும் மின்னலும், ஆற்றில் புரண்ட வெள்ளமும் காற்றில் தோன்றிய கடுமையும், அவர்கள் வாழ்க்கைப் படகே ஆட்டம் கொடுத்திருக்கிறது. சுழற் காற்றையும், சூருவளியையும், குமுறும் நிலத்தையும் கண்டு பயந்திருக்கிருர்கள். இந்தப் பயத்திலே பிறந்திருக்கிறது இறை உணர்ச்சி. இந்த உலகிலே காணும் நிலம், நீர், அனல், காற்று, ஆகாயம் என்ற பஞ்சபூதங்களின் பயங்கர நிலேயைக் கண்டு அஞ்சி, அஞ்சியே இறைவனே நினேந்திருக்கிருர்கள். முதலில் அஞ்சி வழிபட்ட ஐம்பூதத்தின் சாந்த நிலேயைக் கண்ட பின்தான் அன்பு பிறந்

திருக்கிறது, அவர்கள் உள்ளத்தில். உலகின் நன்மைக் கெல்லாம் காரணமாக இருக்கும் ஆதவன். அவன் ஒளி யிலே பங்கு பெற்று, அவன் வெம்மையைக் குறைத்து, தண்மையையே அளிக்கும் சந்திரன், இரண்டுக்கும் அடுத்தபடியாக ஆக்கவும் அளிக்கவும் உதவும் அனல், இவற்றையே கொடி நிலை கந்தழி வள்ளி என்றெல்லாம் பெயரிட்டு வணங்கியிருக்கிறார்கள். இப்படி உருவான இறை உணர்ச்சியிலேயும் ஒரு குறை என்றுமே இருந்து வந்திருக்கிறது. உண்ணத் தெரிந்ததோடு, உடுக்கத் தெரிந்ததோடு வாழ்வு பூரணமாகவில்லை என்பதை உணரத் தொடங்கி யிருக்கிறார்கள். அப்போது அவர்கள் நீண்டுயர்ந்த மலையைக் கண்டு, அந்தச் செடிகளில் மலரும் மலர்களைக் கண்டு, அந்த மலர் களில் எழும் மணத்தினை முகர்ந்து, இன்பம் பெற்றிருக் கிறார்கள். அப்படியே அகன்று பரந்த கட லிலே அந்தக் கடல் அலைகளின் ஒலியிலே, அந்த ஒலி எழுப்பும் இன்னிசையிலே உள் ளம் பறி கொடுத்திருக் கிறார்கள். அஞ்சி வழி பட்ட உளத்திலே அன்பு கலந்த இன்பம் பிறந்திருக்கிறது. இந்த இன்பத்தை உருவாக்க அழகுணர்ச்சி தோன் றியிருக்கிறது. அப் படித்தான் மலை மூல மாக, அலை மூலமாக, கலை மூலமாக இறை



காமாக்ஷி கோயில் கோபுரம்

வழிபாடு ஆரம்பித்து வளர்ந்திருக்கிறது. அந்த மலையையும், அலையையும், கலையையும் உருவகப் படுத்தியே மலைமகள், அலைமகள், கலைமகள் என்று கற்பனை பண்ணி இருக்கிறார்கள்; நின்று தொழுதிருக்கிறார்கள்; விழுந்து வணங்கி யிருக்கிறார்கள். இடையிடையே பழைய பயமும் விட்டபாடாக இல்லை. அந்தப் பயத்தையெல்லாம் எண்ணியபோது கலைமகள், அலைமகள், மலைமகள் மூன்று பேரையும் சேர்த்தே நினைத்திருக்கிறார்கள். அந்த மூன்று உருவமும் சேர்ந்த அன்னையைத்தான் பழையோள், பராசக்தி என்று போற்றி யிருக்கிறார்கள். ஆதியில் தோன்றிய அன்னை பராசக்தி, பின்னர் தோன்றிய தேவர் மூவரினும் ஆற்றல் மிகுந்தவள் என்று நம்பியிருக்கிறார்கள். இந்தப் பராசக்தியே காஞ்சி காமாக்ஷியாகத் தமிழர்கள் உள்ளத்தில் உருவாகி இருக்கிறாள் எத்தனையோ வருஷங்களுக்கு முன்பாகவே.

காஞ்சி காமாக்ஷி, மதுரை மீனாக்ஷி, காசி விசாலாக்ஷி மூவரும் அவர் தம் அருள் நோக்காலேயே மக்கள் வேண்டுவன எல்லாம் தரவல்லவர்கள். மதுரை மீனாக்ஷி பாண்டியன் மகளாகப் பிறந்து, மானிடப் பெண்ணாக வளர்ந்து அரசியாக அரியணை ஏறியவள். ஆகவே அவளுக்கு இரண்டே கைகள். செண்டேந்திய திருக்கரம் ஒன்று; ஒயிலாகத் தொங்கவிடப்பட்ட கரம் மற்றொன்று. ஆனால் அன்னை காமாக்ஷிக்கோ கரங்கள் நான்கு, அவள் தன் தெய்வத் தன்மையை விளக்க. சாதாரணமாகக் கோயிலில் உள்ள அம்பிகைகளுக்கு நான்கு கரங்கள் இருந்தால், அவற்றில் ஒன்று வரத முத்திரையோடும் ஒன்று அபய முத்திரையோடும் அமைந்திருக்கும். ஆம். அபயம் அருளுவதோடு வாரி வழங்கும் வரதம் உடையவள் அல்லவா அவள். ஆனால் காஞ்சி காமாக்ஷியோ கரங்கள் நான்கிருந்தும், அதில் வரதமும் காணோம், அபயமும் காணோம்.

அவளோ பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், சதாசிவன் முதலிய பஞ்ச பிரமாக்களேயே தனக்கு ஆசனமாகக் கொண்டு, அவ்வாசனத்தில் பத்மாசனமிட்டு உட்கார்ந் திருக்கிருள் என்பர். நான்கு கைகளிலும் பாசம், அங் குசம், புஷ்ப பாணம், கரும்பு வில் முதலியவற்றையே தாங்கி இருக்கிருள். ஆம். அவள் அருள்புரிவதெல் லாம் மீனுக்ஷியைப்போலக் கண்களின் மூலமாகத்தான். மூன்று கண்களுடன் காமேசுவரி, லலிதை, ராஜே சுவரி, திரிபுரை, ஸ்ரீ சக்ரநாயகி என்னும் பல திருப் பெயர்கள் பெற்று விளங்குகிருள். காஞ்சியில் இவள் அவதரிப்பதற்குக் காரணமாக இருந்தவர்கள் பந்தகா சுரன், பண்டாசுரன் என்பவர்களே. அவர்கள் செய் யும் இடுக்கண்களைத் தாங்க இயலாது தேவர்கள் தேவியிடம் முறை இடுகிருர்கள். தேவிகாஞ்சியில் கிளி வடிவுடன் செண்பக மரத்தில் வாசம் செய்ய வரு கிருள். அப்படி வந்த வளே, அங்குள்ள ஒரு பிலாகாசத்தில் தோன்றி துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபா லனம் செய்கிருள். அன்னை காமாக்ஷி பிலாகாசத்திலிருந்து சுயம் புவாகவே தோன்றியவள் என்று கூறுகிறது தல வர லாறு.



விஷ்ணு இருந்த திருக்கோலம்

இந்த அம்பிகை மூன்று வடிவத்தில் இருக்கிருள். கர்ப்பக் கிருஹத்தில் மூலத்

திருவாக இருப்பவளே அன்னை காமாக்ஷி. அவளையே அங்கேயே தவக்கோலத்திலும் காண்கிறோம். அன்னை பார்வதிக்கும் ஒருகாலத்தில் முனிவர்களது சாபம் ஏற்பட்டிருக்கிறது. சாப விமோசனம் பெற அவள் காசியில் பன்னிரண்டு வருஷங்கள் தவம் செய்கிறாள். அங்குள்ளவர்களின் பசியை எல்லாம் அகற்றி அன்ன பூரணி என்று பெயர் பெறுகிறாள். அப்படியும் சாப விமோசனம் பெற முடியாமல், காசியிலும் சிறந்த காஞ்சிக்கு வந்து, அங்கு ஏகாம்பரமாக இருக்கும் மாமரத்தடியில் தவம் புரிகிறாள் : அறம் வளர்க்கிறாள்.

எண்ணரும் பெருவரங்கள் முன் பெற்று
அங்கு எம்பிராட்டி தம்பிரான் மகிழ்ந்தருள,
மண்ணில்மேல் வழிபாடு செய்தருளி
மனையறம் பெருக்கும் கருணையினால்,
நண்ணும் மன்னுயிர் யாவையும் பல்கு நாடு
காதலின் நீடிய வாழ்க்கை புண்ணியத்
திருக் காமக் கோட்டத்துப் பொலிய
முப்பதொடு இரண்டு அறம் பெருக்கும்

அவளது பான்மை பாராட்டப் படுகிறது. இந்த அறம் வளர்த்தாள் மாமரத்தடியில் மணலினால் லிங்கம் அமைத்து, பூஜை செய்து வரும்பொழுதுதான் இறைவன் அவளது தவத்தைக் கண்டு மகிழ்ந்து அந்த மாவடியில் காட்சி தந்து ஆட்கொள்கிறார் என்று புராணங்கள் கூறும். இவளை நினைந்தே ‘ அருட் தவத்தாள் ஆயிழையாள் உமையாள் பாகம் அமர்ந்தவள் காண்’ என்று இறைவனைப் பாடி மகிழ்கிறார் அப்பர். கர்ப்பக் கிருஹத்தை அடுத்த அந்தராளத்திலே அவளே ஸ்ரீ சக்கரமாகவும் விளங்குகிறாள். சாதாரணமாக, சக்கர ஸ்தாபனம் செய்து அதன் பேரிலேயே மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்வதே வழக்கம். இங்கு மாத்திரம் சக்கரபீடம் மூலவிக்கிரஹத்துக்கு முன்னாலே தனியே

இருக்கிறது. வட்ட வடிவமாக அம்பிகையின் எதிரே ஒரு தொட்டிபோன்றிருக்கும் இடமே அச்சக்கர பீடம். அஷ்டலக்ஷ்மியையும் அந்தப் பீடத்திலே உருவாக்கி யிருக்கிருர்கள். இந்தப் பீடத்தையே ஆதிசங்கரர் பூஜித்துப் பேறுகள் பெற்ருர் என்றும், அதனுலேயே காஞ்சி காமகோடி பீடாதிபதி என்று ஆச்சார்ய சுவாமிகள் அழைக்கப்படுகின்றனர் என்றும் சொல்கிருர்கள். மூலத் திரு உருவை விட, அம்பிகை தோன்றிய பிலாகாசமும், ஸ்ரீ சக்கரமாக அமைந்த இந்தப் பீடமும் நிறைந்த சாந்நித்யம் உடையது என்பது மக்கள் நம்பிக்கை.

இந்தக் காமாக்ஷியைச் சுற்றித்தான் எத்தனை எத்தனை அம்பிகைகள். அரூபலக்ஷ்மி எனப்படும் அஞ்சன காமாக்ஷி இடப்புறத்தில் வடக்கு நோக்கித் தவம்புரிகிருள். மகா லக்ஷ்மிக்குத்தான் மிகவும் அழகுடையவள் என்று கர்வம். அதனுல் ஒருநாள் தன் நாயகன் மகாவிஷ்ணுவின் அழகையே பரிகசிக்கிருள். அதனுல் அவர் சாபமிடுகிருர். அந்தச் சாபம் நீங்கக் காமக் கோட்டத்தை அடைந்து தேவியை நோக்கித் தவம் புரிகிருள். காமாக்ஷியின் குங்கும நிர்மால்ய பிரசாத ஸ்பரிசத்தால் தன் சுயரூபம் பெறுகிருள் என்பது கதை. ஆம்! வலப்பக்கத்தில் இப்படிச் செய்த தவத்தால் பூரண அழகை மீண்டும் பெற்ற சௌந்தர்ய லக்ஷ்மியும் அவள் சௌந்தர்யம் பெற்றதைக் கண்டு அவளைத் திரும்பவும் தன்னுடனேயே அழைத்துச் செல்ல ஆவலோடு ஓடிவந்திருக்கும் கள்ளப் பெருமானுமே இருக்கிருர்கள் நல்ல சிலை உருவிலே. (கணவனது அழகை எள்ளி நகையாடும் நங்கையர்களுக்கு எல்லாம் இந்த அரூப லக்ஷ்மியின் கதை ஓர் எச்சரிக்கையே).

இன்னும் வராஹி, அர்த்தநாரி, அன்னபூரணி, ராஜாசியாமளா என்னும் அஷ்ட புஜங்களோடு கூடிய

சரஸ்வதி எல்லோருமே இந்தக் காமாக்ஷியின் கோயி லுக்கு வந்து சேர்ந்துவிடுகிருர்கள். அன்னே பராசக்தி யின் அம்சம் அத்தனையையும் ஒருங்கே காண இந்தக் கோயில் ஒன்றே போதும். மூலமூர்த்தியாம் காமாக்ஷி யைப்பற்றியும், அவளைச் சுற்றி உள்ளவர்களைப்பற்றியும் வேண்டியமட்டும் தெரிந்துகொண்டோமே. இனி உற்சவ மூர்த்தியாக விளங்கும் காமாக்ஷியைப் பற்றியும் ஒருவார்த்தை. இன்று உற்சவ மூர்த்தியாக இருப்பவள் சமீப காலத்தில் உருவானவளே. புராதனமான உற்சவ மூர்த்தி தனித் தங்கத்தால் ஆனவள். ஆகவே பங்காரு காமாக்ஷி என்று பெயர்பெற்றிருந்தாள். அந்த சொர்ண காமாக்ஷியை மைசூரிலிருந்து ஆண்ட ஹைதர் அலி கைப்பற்றிச் செல்ல முயன்றிருக்கிருன். இதைத் தடுக்கத் தஞ்சையிலிருந்த நாயக்க மன்னர்கள் இந்தப் பங்காரு காமாக்ஷியைத் தஞ்சைக்கே பத்திரமாக எடுத்துச் சென்றிருக்கிருர்கள். அங்கு இன்னும் கோயில் கொண் டிருக்கிருள், இந்த அழகான தங்கக் காமாக்ஷி புனுகுச் சட்டத்துக்குள் புதைந்துகொண்டு. இந்தக் காமாக்ஷி யின் பிரதிநிதியாக, காமகோடி பீடம் சங்கராச்சாரிய சுவாமிகள் 1941-ம் வருஷம் பங்காரு காமாக்ஷியின் பாதங்களைமட்டும் உருவாக்கிப் பிரதிஷ்டை செய்திருக் கிருர்கள். ஆம். 'பாதங்கள் இவை என்னில் படிவங்கள்' எப்படியோ?' என்று கற்பனே பண்ணத் தெரிந்தவன் தானே் தமிழன்.

இதுவரை சொன்ன மூர்த்தங்களைத் தவிர, இக் கோயிலில் ருத்ரமூர்த்தியான துர்வாஸர் இருக்கிருர். உத்ஸவமூர்த்தியின் எதிரில் உள்ள மௌன மண்ட பத்தில் தொண்டை மண்டலத்தை ஆண்ட துண்டீர ராஜர் கூப்பிய கையுடன் நின்று கொண்டிருக்கிருர். காசி காலபைரவர், மஹிஷ மர்த்தனி, அகஸ்தியர், ஹயக்கிரீவர் முதலிய விக்கிரகங்களும் இக் கோயிலில்

உண்டு. கோயிலுக்கு வடமேற்கே உலகாணி தீர்த்தம் என்னும் பஞ்ச கங்கைக் குளம் இருக்கிறது. அக் குளக் கரையிலே மூன்று நிலைகள் உள்ள மாடம், அந்த மாடங்களில் நின்ருன், இருந்தான், கிடந்தான் கோலங்களில் விஷ்ணு சேவை சாதிக்கிருர். இச்சிற்ப வடிவங்கள் எல்லாம் சிமண்டால் சமீப காலத்தில் உருவானவை. பராசக்தியாம் காமாக்ஷி கோயிலிலே இவர்களுக்கு இடம் கொடுப்பானேன் என்று கேட்கலாம் நீங்கள். காமாக்ஷி அம்மை அறம் வளர்க்கப் புறப்பட்டதை நாம் அறிவோம். அதற்கென்று வந்த பண்டங்களை அப்புறப்படுத்தியும், புசித்தும் இடையூறு செய்து கொண்டிருந்தது ஒரு பூதம். அப்பூதத்தின் வலியடக்க அம்மை மாதவனையே கேட்டுக் கொள்கிருள். அவரும் பூதத்தைப் பிடித்தடக்கி அதன்மீது ஏறி நிற்கிருர். அதனுல் அடங்கவில்லை பூதம் என்று கண்டு அதன் மீது உட்கார்ந்து பார்க்கிருர். அதனுலும் அடங்காதது கண்டு பூதத்தின் மீதே நன்ருகக் காலை நீட்டிப் படுத்துக் கொள்கிருர். ஒருவழியாய் பூதம் திருமாலின் பலம் தாங்காது நசுங்குண்டு நலிகிறது. இப்படி ஒரு கதை. இக்கதையின் ஞாபகார்த்தமாக இப்பஞ்ச கங்கைக் குளக்கரையில் உருவாக்கி யிருக்கிருர்கள். இவர்களை முறையே ஊரகம் (உலகளந்த பெருமாள்) பாடகம் (பாண்டவப் பெருமாள்) வெ:கா (சொன்ன வண்ணம் செய்த பெருமாள்) கோயில்களிலே காணலாம் காஞ்சியிலே.

இக் கோயில் ஆதியில் பௌத்தர்களுடைய தாரா தேவியின் கோயில் என்றும், பௌத்தர்கள் தமிழ் நாட்டை விட்டு ஓடிய பின் இது காமக் கோட்டமாக மாற்றப்பட்டது என்றும் கூறுவர். கோயிலுக்குள் மொழு மொழு என்றும் ஏழடி உயரத்தில் புத்தர் சிலை ஒன்று இருப்பதைக்காட்டி இதற்கு ஆதாரம் தேடுவர்.



ஜெய ஸ்தம்பம்

இச்சிலையே சாத்தான் என்றும் சொல்லுவர். இது தவிர இக்கோயி லில் ஆராய்ச்சிக்கு உரிய ஸ்தம்பம் ஒன் றும் உண்டு. காமாக்ஷி யம்மையின் சந்நிதிக் குள் நுழையும் வழி யில் மேல் தளத்தில் ஒரு ஸ்தம்பம். ஜெய ஸ்தம்பம் என்று கோயில் நிர்வாகிகள் கூறுவர். ஸ்தம்பத்தின் மேல் தளத்திலே சாராநாத் சிங்கங்கள் போல், நான்கு பூத கணங்களை உருவாக்கி இருக்கின்றனர். சரித்திர ஆராய்ச்சியாளர் சமண சமயத் தூண் என்றும், கி. பி. 15-ம் நூற்றுண்டிலே நிறுவப்பட்டிருக்க வேண் டும் என்றும் கூறுவர். காஞ்சியில் ஓடும் வேகவதிக்கு அக்கரையிலே திருப்பருத்திக் குன்றத்திலே ஜைனர்கள் கோயில் இருப்பது இதற்குச் சான்று என்பர். ஆனல் தூண், தூணில் உள்ள கமலம், தட்டு எல்லாவற்றையும் நோக்கினல் பல்லவர் காலத்துத் தூணுக இருக்க லாமோ என்றும் தோன்றும். இப்படி சைவம், வைணவம், பௌத்தம், ஜைனம் எல்லாம் உரிமை கொண்டாடும் கோயில் இது. இந்தக் கோயிலுக்குள் சென்றுலே திக்கு திசை தெரியாதபடி உட்கோயில் களும் சந்நிதிகளும் அமைந்திருக்கும். சமய மார்க்கத் தோடு திசை மயக்கமும் உடைய கோயிலாக இருப் பதனல் தானே என்னவோ, 'திசை மயக்கம் ஒன்று

என்றும் உளது ; அஃது இன்றும் அங்குளதால்' என்று சேக்கிழார் ஆராய்ச்சியாளர்களுக்குப் பிடிகொடாமல் பேசுகிருர். காஞ்சி காமாக்ஷியைக் கண்டு தொழுது திரும்பும் பக்தர்கள் உள்ளத்தில் எவ்வித மயக்கமும் ஏற்படாது என்றே தோன்றுகிறது.



# 13

# அத்திகிரி அருளாளன்

திருமழிசை ஆழ்வார் திருமழிசையை விட்டுக் காஞ்சீ புரத்துக்கு வருகிருர். அங்கே கணிகண்ணன் என்ற புலவன் இவருக்குச் சிஷ்யனுகவும் நண்பனுகவும் அமை கிருன். இவரது புகழையும் பெருமையையும் கேட்ட பல்லவ அரசன் கணிகண்ணனை அழைத்து, அவரது ஆச்சாரியாரை அரண்மனைக்கு அழைத்துவந்து தன் மேல் ஒரு பாட்டு பாடச் செய்ய வேண்டும் என்கிருன். நாக்கொண்டு மானிடம் பாடேன் என்ற வைராக் கியம் உடையவர் ஆயிற்றே, அவரை எப்படிக் கூப்பிட்டு வருவது என்று கணிகண்ணன் சொல் கிருன். அப்போது நீராவது என் மீது ஒரு பாட்டுப் பாடுமே என்கிருன் அரசன். குருவுக்கு மிஞ்சிய சிஷ்ய னில்லையே நான். என்ருலும் அது இயலாதே என்று கையை விரித்து விடுகிருன் கணிகண்ணன். உடனே கோபமுற்று அரசன் உம்மை நாடு கடத்துவேன் என்கிருன். கணிகண்ணனும் சளைக்கவில்லை. நீ யென்ன என்னை நாடு கடத்துவது? நானே போகிறேன் என்று சொல்லித் தன் ஆச்சாரியரான திருமழிசை ஆழ்வாரிடமும் தகவல் கொடுத்துப் புறப்பட்டு விடு கிருன் காஞ்சியை விட்டு. சிஷ்யனுக்குப் பின்னேயே

ஆழ்வாரும் புறப்படுகிறார். புறப்படுவதற்கு முன் கச்சி மணிவண்ணப் பெருமாளுக்கு ஒரு கட்டளை பிறப்பித்து விட்டே புறப்படுகிறார். கட்டளை இதுதான்.

கணிகண்ணன் போகின்றான்
காமருபூங் கச்சி
மணிவண்ணா! நீ கிடக்க
வேண்டா—துணிவுடைய
செந்நாப்புலவனும் செல்கின்றேன்
நீயும் உன்றன்
பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்

சிஷ்யன் பின்னாலே குரு, குருவின் பின்னாலே பெருமாள், பெருமாள் பின்னாலே ஊரில் உள்ள மக்கள் எல்லோருமே கிளம்பி விடுகிறார்கள் காஞ்சியை விட்டு. பல்லவ மன்னன் தான் அறியாது செய்த பிழைக்காக இரங்கி ஓடிச்சென்று கணிகண்ணன் காலில் விழுந்து அவனைத் திரும்பும்படி அழைக்கிறான். அவனும் 'பிகு' பண்ணாமல் ஊர் திரும்புகிறான். மழிசையாரும் திரும்புகிறார், பெருமாளுக்கு மாற்று உத்தரவு போட்டுவிட்டு.

கணிகண்ணன் போக்கொழிந்தான்
காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீகிடக்க
வேண்டும்—துணிவுடைய
செந்நாப்புலவனும் செலவுஒழிந்தேன்
நீயும் உன்றன்
பைந்நாகப்பாய் விரித்துக்கொள்

என்பதே மாற்று உத்தரவு. உத்தரவுக்குக் கீழ்ப்படிகிறார் பெருமாள். இந்தப் பெருமாள் அன்று முதல் சொன்னவண்ணம் செய்த பெருமாள் என்று பெயர் பெறுகிறார். இந்த யதோத்காரியே கோமளவல்லியுடன் திருவெஃகாவல் நீட்டி நிமிர்ந்து படுத்திருக்கிறார்.

இந்தப் 'பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங் கொண்டலின்' இலக்கியப் பிரசித்தியோடு போட்டி

போட்டுக்கொண்டு, காஞ்சியில் மற்ருெரு இடத்தில் கொலு விருப்பவனே வைகுந்தப் பெருமாள். சிற்பக்கலைக்கு சிவன் அளித்த பரிசு கைலாசநாதர் கோயில் என்ருல் விஷ்ணு அளிக்கும் பரிசு இந்தப் பரமேசுவர விண்ணகரம், இதில் விசேஷம் என்ன வென்ருல் கைலாசநாதர் கோயிலைக் கட்டிய ராஜசிம்ம பல்லவன் மகனுன பரமேவசுர வர்மனே வைகுண்டப் பெருமாளுக்கு இந்தப் பரமேசுவர விண்ணகரத்தைக் கட்டியிருக்கிருன். அத்தனை சமரச மனோபாவம் தந்தைக்கும் மகனுக்கும். வைகுண்ட நாதன் பரம பதத்தில் வீற்றிருக்கும் திருக்கோலம், பாலாழியில் அறிதுயில் கொள்ளும் நிலை எல்லாவற் றையும் காண வேண்டுமானுல் இந்தக் கோயிலுக்குள் நுழைய வேணும். இது தவிர பல்லவ மன்னர் சரித்திர பரம்பரையைப் பற்றி ஆராய்ச்சி பண்ண விரும்புபவரும், இக்கோயிலுள் நுழைந்து உள் பிராகாரத்தை ஒரு சுற்றுச் சுற்றினுல், கல்லிலே உருவாகி யிருக்கும் சரிதையையே தெரிந்து கொள்ளலாம் எளிதாக.

இன்று நாம் காண இருப்பது, இந்த இலக்கியப் பிரசித்தி பெற்ற யதோத்காரியையும் அல்ல, சரித்திரப் பிரசித்தி பெற்ற வைகுண்டப் பெருமாளையும் அல்ல. இருவருக்கும் மேலான அருளாளனுக வரப்பிரசித்தி யுடைய வரதரைக் காணத்தான் இவ்வளவு தூரம் நடந்து வந்திருக்கிருேம். காஞ்சியில் உள்ள விஷ்ணு கோயில் களிலெல்லாம் பெரிய கோயில் இந்த வரதராஜப் பெருமாள் கோயில்தான். ஆம்! அவன் அத்திகிரி என்னும் மலை மேலேயல்லவா ஏறிக்கொண்டு நிற்கிருன். படைப்புத் தொழில் புரியும் பிரமனுக்கு மறதி ஏற்படுகிறது. ஞாபக சக்தி குறைகிறது. (சரிதான்! அப்படி அவர் ஞாபக சக்தி இழந்திருந்த காலத்தில் செய்த படைப்புகளே, கால் இல்லாமலும், கை இல்லாமலும், தலை இல்லாமலும் ஏன், மூளை இல்லாமலும் பிறக்கும் பிறவிகள் போலும்.)

பிரமனே இதைப் போக்கிக் கொள்ள ஒரு யாகம் செய்கிறான். யாக குண்டத்திலிருந்து எழுந்த புண்ணிய கோடி விமானத்தில் தேவராஜனான வரதன் தோன்றி பிரமனுக்குள்ள மறதியைப் போக்குகிறான். அன்று பிரமனுக்குக் காட்சி கொடுத்த கோலத்திலேயே தங்கி விடுகிறார் இந்தத் தலத்திலே. திசை யானைகள் பூஜித்த தலம் ஆனதினால் அத்திகிரி என்று பெயர் பெற்றது என்பர் ஒரு சாரார். இல்லை, ஐராவதம் என்ற தேவேந்திரனது யானையின் மீது ஏறி நின்று தரிசனம் கொடுத்ததால் அத்தியூர் என்று வழங்கப்படுகிறது என்பர் மற்றொரு சாரார். யானை போன்ற உயர்ந்த கட்டு மலையிலே பெருமாள் எழுந்தருளியிருப்பது என்னவோ உண்மை. மலைமேல் நிற்கும் இம்மாதவனைப் பூதத்தாழ்வார்

அத்தியூரான் புள்ளை ஊர்வான்
அணிமணியின்
துத்திசேர் நாகத்தின் மேல்
துயில்வான்—முத்தீ
மறையாவான் மாகடல் நஞ்சு
உண்டான் தனக்கும்
இறையாவான் எங்கள் பிரான்

என்று பாடி மகிழ்கிறார்.

இந்த அத்தியூரான் கோயில் 1200 அடி நீளமும், 800 அடி அகலமும் உடைய பெரிய மதில் சூழ்ந்த கோயிலாக இருக்கிறது. இவனைக் காண மேலக்கோபுரம் வழியாகத்தான் நுழைய வேண்டும். பரந்த மைதானத்தைக் கடந்தால், நல்ல உயரமான தூண்களும் அழகான கோபுரமும் உடைய நாலு கால் மண்டபத்தைக் காண்போம். இதன் பின் கோபுரத்தோடு கூடிய மகா மரியாதை வாயிலையும் கடந்தால் திரு மஞ்சன மண்டபத்துக்கு வந்து சேருவோம். இனி

வட பக்கம் திரும்பிப் பன்னிரண்டு படிக்கட்டுகளில் ஏறினல் ஒரு மகா மண்டபத்தை அடைவோம். அந்த மகா மண்டபத்தையும் அதற்கு மேற்கேயுள்ள முக மண்டபத்தையும் கடந்தால் பெருந்தேவித் தாயார் சந்நிதி வந்து சேருவோம். பெருந்தேவி உண்மையிலேயே



பல்லவர் தூண்கள்

பெரிய இடத்துத் தேவி என்பதை அவள் உடுத்தி யிருக்கும் ஆடையும், அணிந்திருக்கும் நகைகளுமே சொல்லும். நிரம்பச் சொல்வானேன்? ஒரே வைர மயம். உச்சி முதல் உள்ளங்கால் வரை அப்படியே வைத்து அழுத்தியிருக்கிருர்கள். கற்சிலையாகவும், செப்புச் சிலையாகவும் இருக்கிருள் அவள் என்பர். என்ருலும் அவளது திருமுக மண்டலத்தைத் தவிர, மற்றவை எல்லாம் நவரத்தின மயமாகவே தோன்றும். இவளை வணங்கி அருள் பெற்றபின் திரும்பவும் படிகள் இறங்க வேண்டும். கருடாழ்வார் சந்நிதிப் படி கடக்க வேண்டும். கருடாழ்வாரை எதிர்நோக்கி யோகாச னத்தில் இருப்பவர் குகா நரசிம்மர். இவர் ஒரு சிறு குகைக்குள்ளேயே இருக்கிருர். இவரைத் தான் 'மன்று

மதில் கச்சி வேளுக்கை ஆளரி' என்று திருமங்கை மன்னர் பாடியிருக்கிறார். இவரே இக் கோயிலில் முதல் முதல் பிரதிஷ்டை செய்யப்பட்டவர் என்பது புராண வரலாறு.



வரதர் கோயில்

இந்தக் குகை நரசிம்மரை வலம் வந்து கீழப்பிரகாரத்துக்கு வந்து சில படிகள் ஏறினால் ஒரு சிறு மண்டபம் வரும். அதன் பின்னும் இருபத்திநான்கு படிகள் ஏறவேணும். இந்தப் படிகளை ஏறிக் கடந்த பின்தான் அத்திகிரி வந்து சேர்வோம். அதன் பின்னும் ஆறு படிகள் ஏறிக் கடந்தால் அத்திகிரி அருளாளனைக் கண்டு தரிசிப்போம். ஆஜானுபாகுவாக நீண்டுயர்ந்து தங்கக் கிரீடமும், தங்கக் கவசமும் தரித்துக் கம்பீரமாக நிற்கிறார் அவர். இந்த அழகு வாய்ந்த வரதர் அருள் கொழிக்கும் திருமுக விலாசம் உடையவர். இவ்வரைக் கண்டு தானே, 'ஐயுறவும், ஆரிருளும், அல்வழியும் அடைந்தவர்க்கு மெய்யருள் செய்திடும் திருமால் வேழமலை மேயவனே' என்று மெய்யுருகி நின்றிருக்கிறார் வேதாந்த தேசிகர். இவரது உசத்வமூர்த்தம் மிக்க அழகு வாய்ந்தது. அவரது முகத்தில் நிறைய வடுக்கள்

இருக்கின்றன. அவையெல்லாம் போரில் ஏற்பட்ட காயங்கள் என்பார்கள். மூர்த்தி சற்றுப்பின் சாய்ந்து மிடுக்காகவே இருக்கிறார். இவரைப் பல கோலங்களில் அலங்காரம் பண்ணிப் பார்க்க விரும்புவர்கள் உத்சவ காலங்களிலே இங்கு செல்ல வேணும். முகம்மதியப் படையெடுப்பின் காரணமாக, இவ்வரதர் 1690-ல் ஆலயத்தினின்றும் எடுத்துச் செல்லப்பட்டு உடையார் பாளையத்தில் பத்திரப்படுத்தி வைக்கப்பட்டிருந்தார் என்றும், மறுபடியும் 1710-ல் தோடர்மால் என்பவர்



வைகுண்டப் பெருமாள் கோயில்

மூலம் திரும்பவும் கோயிலுக்குக் கொண்டு வரப்பட்டார் என்றும் அறிகிறோம். இதை ஞாபகப்படுத்தும் விழா ஒன்று இன்றும் நடந்து கொண்டிருக்கிறது.

அத்திகிரி அருளாளனை வணங்கியபின், கச்சி வழித்தான் மண்டபம் வழியாக வந்து, மலையை விட்டு இறங்கி வெளியே வரலாம். கோயிலை விட்டு வெளியே வருமுன், திரு முற்றத்தில் உள்ள நாலு கால் மண்டபத்துக்கு வடக்கே இருக்கும் அனந்த புஷ்கரணியையும் அதனை அடுத்து நூற்றுக்கால் மண்டபத்தையும் பார்த்து

விடலாம். குதிரையையும் யாளியையும், அவற்றின் மீது ஏறிச் சவாரி செய்யும் வீரர்களையும் உடைய கற்றூண் கள் நிறைந்தது இம் மண்டபம். மன்மதன், ரதி முதலிய சிற்ப வடிவங்களையும் கல்சங்கிலி முதலிய திறன்மிகு வேலைகளையும் அங்கு கண்டு களிக்கலாம். இவை வேலூர் விரிஞ்சிபுரம் முதலிய தலங்களில் உள்ள நாயக்கர் காலத்துச் சிற்ப வடிவங்களோடு ஒப்பிடத் தகுந்தவை அல்ல. காலத்தில் பிற்பட்டதோடு கலை அழகிலும் பிற்பட்டனவாகத்தான் தெரிகின்றன. நூற்றுக் கால் மண்டபத்துக்கு வடக்கே அனந்த புஷ்கரணி. அனந்தனான ஆதிசேஷன் இருந்து தவம்செய்த இடம். இந்த அனந்த சரஸின் நடுவிலே ஒரு நீராழி மண்டபம். அந்த மண்டபத்தின் அடித்தளத்தில் உள்ள ஒரு மாடத்தில் அத்திவரதர் இருக்கிறார். அத்திவரதர் என்றால் அத்திமரத்திலே உருவானவர்தான். அவர் அந்தத் தண்ணீருக்குள்ளேயே முழுகிச் சயனத் திருக்கோலத்தி லேயே இருக்கிறார். நாற்பது வருஷங்களுக்கு ஒரு முறையே குளத்தில் உள்ள நீரையெல்லாம் இறைத்து அவரை வெளியே கொணர்கிறார்கள். ஒரு மண்டல காலம் பூசை புனஸ்காரம் எல்லாம் நடக்கும். அதன் பின் திரும்பவும் யதாஸ்தானத்துக்கே, ஆம்! தண்ணீ ருக்குள்ளேயே முழுகி விடுவார். ஆழ்ந்த தூக்கத்தி லும் அமிழ்ந்து விடுவார். (சரிதான், இவர் கும்ப கர்ணனையுமே தூக்கி அடிக்கும் நித்ரத்வப் பெருமை உடையவர் போலும்!) இந்த அத்திவரதரே ஆதிவரதர் என்பது கர்ண பரம்பரை. இவற்றை யெல்லாம் பார்த்த பின்னும் அவகாசம் இருந்தால், இக் கோயிலிலேயே பெரிய கோபுரமாக விளங்கும் கீழைக் கோபுரத்தையும் பார்க்கலாம். நந்தவனம் முதலியவைகளையும் கண்டு களிக்கலாம்.

வரதர் கோயிலைவிட, அவருக்கு நடக்கும் உத்ச வங்கள் பிரசித்தமானவை. வரதரது பிரம்மோத்சவம்

பங்குனி சித்திரை மாதங்களில் நடக்கும். பிரம்மோற் சவத்தை விடப் பிரசித்தியுடையது வைகாசி பூர்ணி மையில் நடக்கும் கருடசேவை. அதிகாலையிலேயே வரதராஜர் கருடன்மீது ஆரோகணித்துக் கோயிலை விட்டுப் புறப்படுவார். இந்தக் கருடசேவையைக் காணப் பல்லாயிரக்கணக்கான மக்கள் காத்துக் கிடப் பார்கள் வீதிகளில். 'அஞ்சேல்' என்று அருள் புரியும் அத்திகிரி அருளாளன் சங்கு சக்ர தாரியாகக் கருடன்மீது கம்பீரமாக எழுந்தருளும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். 'கஞ்சி வரதப்பா!' என்ருல் 'எங்கு வருதப்பா ;' என்று கேட்கும் ஏழை ஏதலர்கள் மலிந்த நாட்டிலே கஞ்சி வரதன் எல்லோருக்கும் அருள் புரியும் அருளாளனுக இருக்கிருன் என்ற நம்பிக்கையே மக்கள் உள்ளத்தில் என்றும் நிலைத்திருக்க வேண்டும்.

இந்த அத்திவரதர் அருளுக்குப் பாத்திரமான பக்தர்கள் எத்தனையோ பேர். காஞ்சியிலே மனைவி யுடன் தங்கியிருந்து குடும்பம் நடத்திப் பின்னர் துறவு மேற்கொண்டவர் ராமானுஜர். காஞ்சியில் இருந்தபோது அருளாளன் அபிஷேகத்துக்கு இரண்டு மைலுக்கு அப்பால் உள்ள சாலைக் கிணற்றில் இருந்து திருமஞ்சன தீர்த்தத்தைச் சுமந்து கொண்டிருந்தவர் அவர். ராமானுஜருக்குப் பின் வைணவக் கோட்டையைக் கட்டிப் பாதுகாத்த பேரறிவாளர் வேதாந்த தேசிகர். அவருமே அத்திகிரியானிடம் அளவிலாப் பக்தி கொண்டவர். 'காசி முதலாய நன்னகர் எல்லாம் கார்மேனி அருளாளன் கச்சிக்கு ஒவ்வா!' என்ற அழுத் தமான கொள்கை உடையவர். ராமானுஜரது ஆசிரியர் என்று சொல்லத்தக்க பெருமை உடைய திருக்கச்சி நம்பியும் வரதராஜனின் நல்லருளுக்கு ஆளானவர், இவரைப் பற்றி ஒரு சுவையான கதை.

வரதனுக்குக் கைங்கர்யம் செய்து நேருக்கு நேர் பேசும் வாய்ப்பும் பெற்றிருக்கிறவர் அவர். அதனுல் தான் எல்லோரினும் சிறந்தவர் என்ற கர்வம் அவருக்கு. இவருடைய அடிப்பொடியைத் தலையில் அணிந்து கொள்கிருன் தாழ்த்தப்பட்ட ஒருவன். இவனேப் பற்றி வரதனிடம் கேட்டபோது, அவனுக்கு முத்தி நிச்சயம் என்கிருர் அவர். அவனே மோக்ஷ உலகத்திலும் நம்பியின் அடிப்பொடி சூடுவதையே பாக்கியமாகக் கருதுகின்ருன். ஆதலால் திரும்பவும் வரதனிடம், தனக்கும் மோக்ஷம் சித்திப்பது உறுதி தானே என்று கேட்கிருர் நம்பி. அது சந்தேகத்துக்கு உரியது என்று கையை விரித்து விடுகிருர் வரதர். பகவத் பக்தியைக் காட்டிலும் பாகவத அபிமானமே சிறந்தது என்பதை வரதராஜரே திருக்கச்சி நம்பிக்குக் கற்பித்தார் என்று பெறப்படுகிறது இதனுல்.

இராமானுஜர், வேதாந்த தேசிகர், திருக்கச்சி நம்பிகளேப் போலவே, கூரத்தாழ்வானும் இங்கேயே தங்கி, வைணவ மதப் பிரச்சாரம் செய்த பக்தன். இன்னும் எண்ணிறந்த பக்தர்கள் ஆபரணங்களே வரதருக்கு அளித்து மகிழ்ந்திருக்கிருர்கள். வெங்கடாத்திரி சுவாமிகள் அளித்துள்ள கொண்டை அழகுடையது. அதை விடப் பிரபலமானது கிளேவ் அளித்துள்ள மகாப் பதக்கம். இந்த வரதனே,

நீலமே! காரின் முகிலே!
 நெடுங் கடலின்
கோலமே! அத்திகிரிக்
 கோமானே!—மூலமென
மாத்தாமரை மடுவில்
 மால்யானே ஓலமிட
காத்தாய்! கடைபோகக் கா

என்று நாமும் கூப்பிடலாம், பெருந்தேவனுரோடு சேர்ந்து கூப்பிட்டால் அவனும் கருடன் மேல் ஏறிக் கொண்டு பறந்தே வருவான்.

14

# ஊறல் அமர்ந்த உமாபதி

காவிரி நதியிலே மைசூரை அடுத்த கண்ணம் பாடியில் கட்டப் பட்டுள்ள அணை கிருஷ்ணராஜ சாகரம். இந்த அணைக்கட்டை விட, அங்கு இன்றைய இஞ்சினீ யர்கள் சமைத்திருக்கும் பிருந்தாவனம் என்னும் வண்ணப் பூங்கா அழகானது. இரவு நேரத்தில் அங்குள்ள தண்ணீரை வான் நோக்கி எழும் வண்ணத் தாரை களாக்கிப் பல வர்ண ஜாலங்களையே செய்திருக்கிறார்கள். இது தான் பூலோக சுவர்க்கமோ என்னும்படி அத்தனை இன்பம் காண்பவர்களுக்கு. கண்ணனும் ராதையும் பளிங்குத் திருவுருவில் நிற்கிறார்கள் ஒரு புறத்தே; வழிந்தோடும் தண்ணீருக்குள் எல்லாம் வண்ண வண்ண விளக்குகள்; விசிறி எழுந்து பரவும் குழாய் நீரில் எல்லாம் வானவில்லின் அதிசயங்கள். இத்தனை கோலாகலத்தையும் தூக்கி அடிக்கும் காட்சி ஒன்று உண்டு அங்கே. அதுதான் காவிரித்தாயின் திருவுருவம்; அணைக்கட்டிலிருந்து பிருந்தா வனத்துக்கு இறங்கும் வழியிலே அமைத்திருக்கிறார்கள். காகம் கவிழ்த்த கரகத்தை ஏந்தியவளாய் நிற்கிறாள் அவள், ஒரு மாடத்திலே. அந்தக் கரகத்திலிருந்து அளவான தண்

ணீர் இடைவிடாமல் வழிந்து கொண்டே இருக்கிறது. காவிரி அன்னை ஏந்தி நிற்கும் குடம் வற்ருத பாத்திரமாக இருப்பது அழகாக இருப்பதோடு, அரிய கற்பனையாக வும் இருக்கிறது. இவ்வளவு பெரிய அணைக்கட்டில் தண்ணீரைத் தேக்கியதில் வியப்பில்லை. ஆனல், அந்த அணைக்கட்டின் சுவரிலே ஒரு மாடம் அமைத்து அதில் காவிரித் தாயை நிறுத்தி, அவள் கையில் ஒரு கரகத்தையும் கொடுத்து, அந்தக் கரகத்திலிருந்து அளவான தண்ணீர் இடைவிடாது விழ வகை செய்த கலைஞனின் கற்பனையை எண்ணி எண்ணி வியக் கிருேம்.

இப்படி இருபதாம் நூற்ருண்டிலே, கலைஞன் ஒரு காவிரித் தாயை உருவாக்கினல், இதற்கு எத்தனையோ வருஷங்களுக்கு முன்னுலேயே, ஒரு கங்காதரரை உருவாக்கி இருக்கிருன் ஒரு சிற்பி தக்கோலத்திலே. பாலாற்றின் கரையிலோ எங்கு பார்த்தாலும் நல்ல நீரூற்றுகள். பால் ஆறு இன்று வற்றிக் கிடப்பதைப் பார்த்து ஒரு நண்பர் சொன்னர், 'இது பாழ் ஆறு, தெரி யாமல் பால் ஆறு என்று சொல்லி விட்டார்கள்' என்று. ஆனல் உண்மையில் இது நல்ல பால் ஆறுதான். பசுவின் மடியிலே உள்ள பாலை, கன்றுக்குட்டி முட்டிக் குடித்தால்தானே பால் சுரக்கும். அதுபோல், தன் மடியையும், கரையையும் அகழ்ந்து தோண்டுவாருக் கெல்லாம், வற்ருது பால் போலத் தண்ணீர் சொரியும் இயல்புடையது பாலாறு. இந்தப் பாலாற்றின் இருபுறமும், பத்துப் பதினைந்து மைல்வரை, மணற் பாங்கான இடத்தில் எல்லாம் பதினைந்து இருபது அடி ஆழத்தில் நல்ல தண்ணீர் கிடைக்கும், கிணறுகள் தோண்டினல். காஞ்சிக்கு வடக்கே ஏழெட்டு மைல் தூரத்தில் உள்ள புள்வேளூரிலே (பள்ளூர் என்று இன்று அழைக்கப்படுகிறது) ஏழுகிணறு என்ற பெயரோடு ஒரு

கிணறு. அவ்வை புள்வேளூர் பூதனிட்ட வரகரசிச் சோற்றை உண்ட மகிழ்ச்சியில் பாடியபோது இதில் நீர் சுரந்தது என்பது கதை. இக்கிணற்றில் தண்ணீர் என்றும் நிறைந்திருப்பது இன்றும் கண்கூடு. இந்த ஊருக்கு வட கிழக்கே ஆறு ஏழு மைல் தூரத்தில் இருப்பது தக்கோலம். இந்த ஊரிலே ஓர் அதிசயம். ஊருக்கு வடகீழ் மூலையில் ஒரு சிறிய கோயில். அங்கு கோயில் கொண்டிருப்பவர் கங்காதரர். அந்தக் கங்கா தரரைச் சுற்றி பிராகாரம் எல்லாம் ஒரே தண்ணீர். இந்தத் தண்ணீர் வருவது மேல் பிரகாரத்தில் உள்ள ஒரு சிறு நந்தியின் வாய் வழியாக. இந்த வட்டாரத்தின் நீர்நிலை (Water Table) உயர்ந்திருப்பது கண்டு எந்த இடத்தில் நந்தியை அமைத்தால், தண்ணீர் இடை விடாது அதன் வாயினின்றும் வழியும் என்று கண்டிருக் கிறான் கலைஞன். நந்தியை அமைத்ததோடு, கோயி லையும், அதற்குப் பிராகாரங்களையும் அமைத்து, அந்தக் கோயிலுக்குள் கங்காதரரையுமே பிரதிஷ்டை செய் திருக்கிறான். தண்ணீர் வழியும் இடம் கண்டு நந்தியை, நந்தி தீர்த்தத்தை யெல்லாம் அமைத்தவன், கிருஷ்ண ராஜ சாகரத்தில் காவிரித் தாயை வழிந்தோடும் கரகம் ஏந்திய கையளாய் நிறுத்திய கலைஞனுக்கே ஒரு வழி காட்டி. இப்படி எப்போதும் நீர் ஊறிக்கொண்டே, வழிந்து கொண்டே இருக்கும் தலத்தை அன்று திரு ஊறல் என்றே அழைத்திருக்கிறார்கள் மக்கள். அந்த ஊறல் அமர்ந்த உமாபதியையே, ஞானசம்பந்தர் பாடி மகிழ்ந்திருக்கிறார். இந்த ஊரே இன்று தக்கோலம் என்று வழங்குகிறது. இந்தத் தக்கோலத்துக்கு இன்று சென்றாலும் கங்காதரரைக் கண்டு வணங்கலாம்; நந்தியையும் பார்த்து மகிழலாம். ஆனால் நந்திவாயிலி ருந்து தண்ணீர் விழுவதைத்தான் காணமுடியாது. அந்த வட்டாரத்திலே உள்ள நன்செய் புன்செய் நிலங் களில் எல்லாம் எண்ணிறந்த பம்பு செட்டுகள்

அமைத்து, மின்சாரத்தின் உதவியால், கிடைக்கும் தண்ணீரையெல்லாம் இறைத்து, பயிர் செய்கிறார்கள் மக்கள். ஆதலால் வற்றாத தண்ணீரும் வற்றியது அங்கே. கங்காதரரும் அபிஷேகமில்லாமலேயே நின்றுகொண்டிருக்கிறார் அங்கே. ஆம்! வயிற்றுச் சாமிக்குப் போய் மிச்சந்தானே மற்றச் சாமிகளுக்கு. இங்கோ வயிற்றுச் சாமிக்கே போதிய அளவு கிடைப்பதில்லையே.



பிரம்மா

இந்தத் திரு ஊறல் என்ற தலத்திலே பிரதானமான கோயில் கங்காதரர் கோயில் அல்ல. கங்காதரர் கோயிலுக்குத் தெற்கே மேற்கு நோக்கிய பிரதான வாயிலுடன் இருப்பதே உமாபதி ஈசுவரர் கோயில். இங்கு உமாபதி உமையம்மையுடன் கோயில் கொண்டிருப்பதில் வியப்பில்லையே. இவர்கள் இங்கே எப்படி உருவானார்கள்? ஆம்! அன்று பிரமனும் விஷ்ணுவும் இறைவனது திருமுடி காணாமல் ஏமாற்றம் அடைந்து

விட்டனர் திருவண்ணுமலையிலே. பின்னர் தந்தையும், மகனுமாகச் சேர்ந்து சமாதான உடன்படிக்கை செய்து கொண்டு பிரார்த்தித்துக் கொள்கிருர்கள், இறைவன் திருஉருவைக் காண. இதே சமயத்தில் பிருகஸ்பதியின் தம்பியான சம்வர்த்தனரும் இறைவன் திருக்கோலத்தைக் காணத் தவம் கிடக்கிருர் இந்தத் திருவூறலிலே. இந்த மூவர் விருப்பத்தையும் பூர்த்தி பண்ணும் பெரு நோக்குடன், உமாபதி தமது துணைவி உமையையும் அழைத்துக் கொண்டே வந்துவிடுகிருர் இந்தத் தலத்துக்கு. மூவரும் பெறுதற்கரிய பேறு பெறுகின்றனர் அங்கே. இந்தத் தலத்துக்கு சம்பந்தர் வருகிருர்; இறைவனை வாயாரப் புகழ்ந்து பாடுகிருர். அவருக்குப் பழைய கதைதான் தெரியும். அதன்பின் நடந்த புதிய விருத்தாந்தம் எல்லாம் தெரியாது. ஆதலால்

> நீரின் மிசைத் துயின்ருேன், நிறைநான்
> முகனும் அறியாது அன்று,
> தேரும் வகை நிமிர்ந்தான், அவன்
> சேரும் இடம் விரைவில்
> பாரின் மிசை அடியார் பலர்வந்து
> இறைஞ்சி மகிழ்ந்து, ஆகம்
> ஊரும் அரவு அசைத்தான்
> திரு ஊறலை உள்குதுமே.

என்றுதான் பாடுகிருர்.

இந்தத் தலத்தைக் காணச் சென்னையிலிருந்து நேரேயே போகலாம். சென்னை பங்களூர் பாதையில் ஸ்ரீபெரும்புதூருக்கு வடக்கே ஐந்தாறு மைல் தொலைவிலே, செம்பரம்பாக்கம் ஏரியைக் கடந்ததும், ஒரு பாதை திரும்பும் மேற்கே நோக்கி. அந்தப் பாதையில் கண்ணை மூடிக்கொண்டு காரை ஓட்டினுல் நேரே தக்கோலமே சென்று சேரலாம். இல்லை, ரயில் பயணமே வசதி என்ருல், அரக்கோணம் போய், அங்கிருந்து

செங்கல்பட்டு செல்லும் ரயில் ஏறி, நான்கைந்து மைல் சென்றதுமே, தக்கோலம் என்ற ஸ்டேஷன் வரும். அந்த ஸ்டேஷனுக்கும் தக்கோலத்துக்கும் நான்கு மைல், ஸ்டேஷனில் வண்டி கிடைப்பதெல்லாம் அருமை. காலிலே வலு இருந்தால் நடந்தே செல்ல லாம் கிழக்கு நோக்கி. ஊருக்குக் கீழ்த்திசையில் விருத்த க்ஷீரநதி என்னும் கல்லாறு ஓடுகிறது. அந்தக் கல்லாற்றின் கரையிலேயே இருக்கிறது கோயில்கள் இரண்டும். வட பக்கம் இருப்பது கங்காதரர் கோயில். கோயில், மண்டபத்தின் விதானம் எல்லாம் தாழ்ந்தே இருக்கும். நிமிர்ந்த நன்னடை நேர் கொண்ட பார்வை எல்லாம் அங்கே பலிக்காது. ஆதலால் கங்காதரரை நன்ருகத் தலை தாழ்த்தியே வலம் வரவேணும். கொஞ் சம் பயமாய்க்கூட இருக்கும், எந்த நேரத்தில் மண் டபம் இடிந்து நம் தலைமேல் விழுமோ என்று. ஆதலால் விரைவிலேயே தொழுது திரும்பிவிட வேண்டும். திரும்பித் தென்பக்கம் வந்தால் மேற்கே நோக்கிய தலை வாயிலும், கிழக்கு நோக்கிய சந்நிதியும் உடையவராய் உமாபதி ஈசுவரர் இருப்பார். கர்ப்பக்கிருஹத்தின் வாயிலில் நிற்கும் துவார பாலகரே மிக்க 'ஸ்டைலாக' நிற்பார். இறைவனை வணங்கி விட்டுக் கர்ப்பக்கிரு ஹத்தை ஒரு சுற்றுச் சுற்றினல், நான்கு அழகான கோஷ்ட விக்கிரஹங்களைப் பார்க்கலாம்.

நல்ல அழகான வடிவங்களாக மாத்திரம் அல்ல, புதிய கோணங்களிலே அமைந்த கோலங்கள் அவை. சாதாரணமாக, தக்ஷிணமூர்த்தி கால்மேல் கால் போட்டு யோகநிலையில் இருப்பதைத்தான் மற்றக் கோயில்களில் பார்த்திருப்போம். இங்குள்ள தக்ஷிண மூர்த்தியோ ஒரு காலைத் தொங்கவிட்டு மற்ருெரு காலை பீடத்தில் ஏற்றிவைத்து, தலைசாய்த்த கோலத்தில் இருக் கிருர். உத்கடி ஆசனத்தில் அவர் தலை சாய்த்து, கையை



துர்க்கை

உயர்த்தி இருக்கும் நிலையைப் பார்த்தால், ஆசிரியத் தொழிலுக்கு ஏற்றவரே என்று தோன்றும். சிஷ்யர்களைப்பார்த்து, 'அட பயல்களா! நான் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டியதைப் புரிந்து கொண்டீர்களா?' என்று கேட்பது போலவே இருக்கும். கையில் பிரம்பு இல்லாத குறைதான். மற்றப்படி பழைய ஆசிரியருக்கு உரிய அத்தனை பாணியும் அப்படியே இருக்கிறது அவரிடம், பிரும்மாவும் அப்படியே. தஞ்சை ஜில்லாவிலே, கண்டியூரிலேதான் பிரும்மா இருந்த கோலத்தில் இருப்பதைப் பார்த்திருக்கிறோம். அவரைவிட அழகான கோலத்தில் இருக்கிறார் இங்கிருப்பவர். இவரது நான்கு முகங்களில் மூன்று முகமே நமக்குத் தெரியும். மற்றொன்று பின் பக்கத்தில் இருப்பதாகப் பாவனை. தென்முகக் கடவுளும் நான்முகக் கடவுளும் உட்கார்ந்திருக்க, துர்க்கை மட்டும் எழுந்து நிற்கிறாள். மகிஷமர்த்தனம் பண்ணிய கோர தோற்றத்தைக் காணோம். மிகவும் சாந்தமான நிலை. ஏதோ நடனத்துக்கே புறப்படுவது போல வலக்காலை வேணுகோபாலன் பாணியில் ஊன்றி, இடக்கையை இடுப்பில் லாகவமாக இருத்தி ஒயிலாக நிற்கிறாள் அவள். இவர்கள் எல்லோருமே உருவாகி இருக்கிறார்கள் கற்சிலைகளாக.



உமை - தக்கோலம்

நல்ல சோழர் காலத்து சிலா விக்கிரங்கள் இவை. இவர் களைக் காணவே ஒரு நடை போகலாம் தக்கோலத் துக்கு. அப்படிப் போனுல், அங்கே செப்புச்சிலை வடி விலும், உமை உருவாகி இருப்பதைப் பார்க்கலாம். கொள்ளை அழகு இவளது வடிவம். மங்கைப் பருவம் தழைத்து நிற்கும் அந்தத் தங்க வடிவினைக் கண்டால், உள்ளம் தழைத்துக் குழையும். தாழ்ந்த இடக்கரத்தை யும், அற்புத முத்திரை தாங்கிய வலக்கரத்தையும், புன்னகை தவழும் அதரங்களையும் உருவாக்கிய சிற்பிக்கு எத்தனை தரம் வேண்டுமானுலும் தலைவணங் கலாம். தக்கோலம் என்ற பெயர் இவ்வூருக்கு எப்படி வந்தது என்று சொல்வார் இல்லை. இத்தகைய தக்க கோலங்களை உள்ளடக்கிக் கொண்டிருப்பதனுல்தானே என்னவோ, இந்த ஊருக்கே தக்கோலம் என்று பெயர் வந்திருக்கிறது. கலை அன்பர்கள் சென்று காணவேண் டிய சிற்பச் செல்வங்கள் அவை.

இனி, இச்சிலைகளைக் காண்பதிலேயே மெய்மறந்து விடாமல் வெளியே வரவேணும். தென்பக்கம் வடக்கு நோக்கி நிற்கும் கிரிராஜ கன்னிகாம்பாவையும் (இமவான் மகளாம் உமையைத்தான் இத்தனை படாடோபமாக நமக்கு அறிமுகம் செய்து வைப்பார்கள் அர்ச்சகர்கள்) வந்தித்து வணங்கலாம். கோயில் பிராகாரத்துக்குள்ளே மயில் வாகனக் கடவுளுக்கும் ஒரு கோயில் மண்டபத் துடன் சமீப காலத்தில் கட்டியிருக்கிறுர்கள். ஆதலால் அவரையுமே வணங்கி வழிபட்டுவிட்டு வெளியில் வரலாம்.

திரு ஊறல் என்னும் இத் தக்கோலம் சரித்திரப் பிரசித்தி பெற்ற ஊர் என்பதைச் சோழர் சரித்திரம் படித்தவர்கள் அறிவார்கள். தொண்டை மண்ட லத்தைச் சேர்ந்த மணலில் கோட்டத்திலே, திருநாம நல்லூரிலே இருந்து அரசாண்டவன் முதல் பராந்தக

சோழன். அவன் மகனே ராஜாதித்யன். ராஷ்டிரகூட மன்னனான மூன்றாம் கிருஷ்ணன் இந்த ராஜாதித்யனோடு போர் தொடுக்கிறான். ராஷ்டிரகூடரும், சோழரும் கி. பி. 949-ல் போரில் கைகலந்த இடம் இத் தக் கோலமே. போர்க்களத்திலே யானை மீதிருந்தே உயிர் துறக்கிறான் ராஜாதித்யன். அதனால் யானைமேல் துஞ்சிய தேவன் என்ற பெயர் பெறுகிறான். போரில் வெற்றிபெற்ற கிருஷ்ணன், "கச்சியும் தஞ்சையும் கொண்ட கன்னட தேவன்" என்று விருதுப் பெயர் சூட்டிக் கொள்கிறான். ராஜாதித்யனுக்குப் பின்வந்த சோழர் இந்தக் கன்னட தேவரை யெல்லாம் விரட்டி அடித்துத் திரும்பவும் சோழப் பேரரசை நிலை நாட்டு கிறார் என்பது வரலாறு. தக்கோலப் போர் சரித்திரப் பிரசித்தி பெற்றது. சண்டை நடந்த சமவெளியை ஊராரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம், அதில் அக்கறை உள்ளவர்கள். அதில் அக்கறை இல்லாத வர்கள், கோயிலில் உள்ள சிற்ப வடிவங்களைப் பார்த்து, உமை, உமாபதியைத் தரிசித்து விட்டுத் திரும்பி விடலாம் விரைவிலேயே.



15

# ஆலங்காட்டு அடிகள்

சென்னை பூக்கடை பஜாரில் ஒரு கடை. கண்ணாடிச் சாமான்களின் விற்பனை அங்கே. ஆதலால் பெரிய நிலைக்கண்ணாடிகள், சிறிய கண்ணாடிகள், பீங்கானில் வண்ண வண்ணக் கோப்பைகள், பாத்திரங்கள், எலக்டிரிக் லைட்டுகளில் எத்தனையோ ஷேடுகள், குளோப்புகள், சர லாந்தல்களே அக்கடையில் நிறைந் திருக்கின்றன. இவை யெல்லாம் நூறு அடி நீளமும் நாற்பது அடி அகலமும் உள்ள கடையில் அடுக்கியும், தொங்கவிடப் பட்டும் இருக்கின்றன. இந்தக் கடைக்குள் நுழைகிறேன் நான், ஏதோ கண்ணாடி ஒன்று வாங்க. எனக்கோ ஒரே பயம், கையை வீசி நடந்தால் எங்கே கைபட்டுக் கண்ணாடிகள் எல்லாம் விழுந்து உடைந்து விடுமோ என்று. ஆதலால் மிக்க கவனமாக, அடக்க மாக அடிமேல் அடி எடுத்து வைத்தே நடக்கிறேன். இந்தச் சமயத்தில் ஒரு சிலம்ப வீச்சுக்காரன் அங்கு வருகிறான். அவனுடன் அவன் சகாக்களும் மற்றவர் களும் வருகிறார்கள். அவன் கையிலே இரண்டு கம்புகள். கடைக்காரர் அனுமதி இல்லாமலேயே, சிலம்பக் கம்பு களைச் சுழற்றிச் சிலம்ப வித்தைகள் காட்ட ஆரம்பித்து

விடுகிருன் கண்ணுடிக் கடைக்குள்ளே. நெடுக்கும் குறுக்குமாக ஓடி, மேலும் கீழுமாகக் கம்பைச் சுழற்று கிறபோது, கடைக்காரருக்கு ஒரே கவலே. இது என்ன? தப்பித் தவறிக் கம்பு ஒரு கண்ணுடிச் சாமான் மீது பட்டால் போதுமே, அடுக்கி வைத்திருக்கும் சாமான்கள் அத்தனேயும் பொலபொலவென்று விழுந்து உடைந்து தவிடுபொடியாகி விடுமே என்று. ஆனுல் அப்படி ஒன்றும் நடக்கவில்லே. ஒரு சிறு கண்ணுடிச் சாமானுக்கும் சேதம் ஏற்படவில்லே. இந்தச் சிலம்ப வீச்சிஞல். வீச்சு நின்றது. எல்லோருக்கும் ஒரே அதிசயம். சிலம்பம் ஆடியவனின் லாவகத்தைக் கண்டு மூக்கிலே கைவைத்து நின்று விட்டார்கள் கடையிலும் தெருவிலும் கூடி நின்ற அத்தனே பேரும். இப்படி நடக்குமா? என்றுதானே நீங்கள் எண்ணுகிறீர்கள். ஆம்! அப்படி ஒன்றுமே நடக்க வில்லேதான். இப்படி நடந்தால் எப்படி இருக்கும் என்று கொஞ்சம் கற்பனே பண்ணிப் பாருங்களேன்.

இத்தகைய கற்பனேச் சிலம்பக்காரனுக்கும் மேலான ஒரு சிலம்பக்காரனுக அல்லவா இருக்கிருன் இறைவன். கோடானுகோடி அண்டங்களேப் படைத்திருக்கிருன்; அவைகளே உலகம், பாதாளம், வான்முகடு என்று நாலா பக்கமும் பரவி நிற்கவும், அவைகளெல்லாம் ஒரு நியதியில் சுழன்று கொண்டு சுற்றிக்கொண்டு வரும் படியும் அமைத்திருக்கிருன். இவைகளுக்கு ஊடே, அவற்றின் ஊனுய் உயிராய், உணர்வாய் இயங்கு கிருன். அற்புதமாய் நடனமே ஆடுகிருன் அவன். சரிதான், இப்படி ஆடும் நடனத்தில் ஒருகால் தாளம் தவறிச் சிறிது பெயர்ந்து விட்டால் என்ன ஆகும்? பாதாளமே பெயர்ந்து விடாதா? ஏன் தலேயில் உள்ள கிரீடம் தவறிக் கொஞ்சம் பெயர்ந்தால், வான் முகடே பெயர்ந்து விடாதா? இல்லே, வீசி ஆடும் கைகள்தாம்

ஆட்டத்தின் வேகத்தில் அங்கே இங்கே பட்டுவிட்டால் வான் திசைகளே பெயர்ந்து விடாதா? இப்படி யெல்லாம் நேராமல் ஆடுகின்றனே, ஆடிக்கொண்டே இருக்கிறனே கற்பகோடி காலங்களாக இறைவன். இது இவனுக்கு எப்படிச் சாத்தியமாயிற்று? என்று எண்ணுகிறேம். இதே வியப்பு காரைக்கால் அம்மை யாருக்கும் அன்று ஏற்பட்டிருக்கிறது. நாம் வியந்து மூக்கில் விரலை வைத்து நின்றுல் அம்மையோ தன் வியப்புக்கு விடைபெற இறைவனிடமே கேள்வி கேட்டிருகிருள். அதையும் ஒரு நல்ல பாட்டிலேயே கேட்கிருள்.

அடிபேரில் பாதாளம்
பேரும், அடிகள்
முடிபேரில் மாமுகடு
பேரும் - தொடிகள்
மறிந்தாடும் கைபேரில்
வான்திசைகள் பேரும்
அறிந்து ஆடும் ஆறு என்
அரங்கு ?

'இப்படி, பாதாளம், மாமுகடு, வான்திசைகள் எதுவும் பெயராமே, நீ அரங்கத்தில் அறிந்து ஆடக் கற்றிருக்கி ருயே, அது எப்படிச் சாத்தியமாகிறது?' என்றே கேட்கிருர் அம்மையார். இப்படி இறைவன் ஆடும் அற்புத நடனத்தையும், அந்த ஆட்டத்தைக் கண்டு அதிசயித்து நிற்கும் காரைக்கால் அம்மையாரையும் காணவேண்டும் என்ருல், நேரே நாம் திருவாலங் காட்டுக்குச் செல்ல வேண்டும். அங்குள்ள தேவர் சிங்கப் பெருமாளாம் ஆலங்காட்டு அடிகள் கோயி லுக்குள் நுழைய வேணும். அப்படி நுழைந்தால் அங்குள்ள ரத்ன சபையிலே ஊர்த்துவ நடனம் ஆடிக் கொண்டிருக்கும் இறைவனையும், அங்கே பேயுருவில்



ஊர்த்துவ தாண்டவம்

அமைந்திருக்கும் காரைக்கால் அம்மை யையுமே காணலாம்.

தாளொன்ருல் பாதாளம் ஊடுருவி, மற்றைத் தாளொன்ருல் அண்டங் கடந்து உருவி நிற்கும் அந்த ஊர்த்துவ தாண்டவம் இறைவன் ஆடுவதற்கு நேர்ந்த காரணம் தெரிய வேண்டாமா? இந்த ஆலங்காடு பெயருக் கேற்ப நல்ல காடாகவே இருந்திருக்கிறது. காட்டிடையே கோயில்கொண்டிருக்கிருள் காளி. அவளது ஆதிக்கம் அங்கு குறைவின்றி நடந்திருக்கிறது. உலகம் முழுவதையுமே முடிவு செய்தல் கூடும் என்று அகங்கரிக்கிருள் அவள். இத்தோடு அவள் ஆடவும் வல்லவள். அதனுல் இறுமாப்பு வேறே. இந்த நிலையில் தேவர்கள் இவள்தன் கர்வத்தை அடக்க இறைவனை வேண்டுகின்றனர். இறைவனுமே ஆலங்காட்டுக்கு வருகிருன். ஆடல் போட்டிக்கு அன்னை காளியையே அழைக்கிருன். அவளும் இசைகிருள். போட்டி நடனம் நடக்கிறது (இன்றைய வெள்ளித் திரையிலே இந்த நடனப் போட்டிகள் தாம் சர்வ சாதாரணமாயிற்றே. ஆனுல் ஒரேயொரு வித்தியாசம். அன்று நடப்பதற்கும்

இன்று நடப்பதற்கும். இன்று போட்டி இடுபவர்கள் இருவரும் அநேகமாய்ப் பெண்களாகவே இருப்பர். அன்று போட்டியில் ஈடுபட்டவர்களில் ஒருவர் ஆண், மற்றவர் பெண் என்பதையும் கொஞ்சம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.) இறைவன் ஆடும் ஒவ் வொரு நடனத்தையும் காளியும் சளைக்காது ஆடுகிருள். ஆட்டம் நடந்துகொண்டே இருக்கிறது. போட்டியும் மும்முரமாகிக்கொண்டே வருகிறது. வெற்றி கிட்டக் காணும் இறைவனுக்கு. இந்த நிலையில் இறைவன் வலது காதிலே உள்ள குழை நழுவி விழுகிறது கீழே. இதற்காக நடனத்தை நிறுத்தாமல், அப்படியே அந்தக் குழையைத் தனது கால் விரலால் எடுத்து அக்காலை அப்படியே அநாயாசமாக உயர்த்தி லாகவமாகக் குழையை வலது காதிலே பொருத்தி விடுகிருர். ஒரு காலை ஊன்றி ஒரு காலை வான் நோக்கி உயர்த்துவது பெண்ணுல் ஆகிற காரியமா என்ன? முடியாது வெட்கித் தலைகுனிகிருள் காளி. தோல்வியை ஒப்புக் கொள்கிருள். இறைவன் வெற்றிக் கொடி நாட்டுகிருர். (அன்பர்கள் கேட்கலாம், பாலே நடனத்தில் பெண்கள் இதையெல்லாம் செய்கிருர்களே என்று. அவர்கள் உணர்வு நாணம் எல்லாம் உடைய பெண்களா? என்று கேட்கிறேன் நான்) இந்தக் கதையையே

கொடிய வெஞ்சினக் காளி 'குவலய முழுதும்
முடிவு செய்வன்' என்று எழுந்த நாள்
முளரியோன் முதலோர் அடைய அஞ்சலும்
அவள் செருக்கு அழிவுற, அழியாக்
கடவுள் ஆடலால் வென்றதோர்
வடவரை கண்டான்

என்று கந்தபுராணம் கூறும். இப்படிக் காளியை வெல்ல ஆடிய ஆட்டமே ஊர்த்துவ தாண்டவம். அந்தத் தாண் டவம் ஆடியவரே ஆலங்காட்டு அடிகள். அவரது திருக்

கோலம் பஞ்ச சபைகளில் ஒன்ருன ரத்தின சபையிலே செப்புச்சிலை உருவில் இருக்கிறது. எத்தனைதான் சொன்னலும் அங்குள்ள அர்ச்சகர்கள் நிர்வாகிகள் வஸ்திரத்தைக் களைந்து ஊர்த்துவ மூர்த்தத்தைக் காட்ட மாட்டார்கள். பத்து முழத்து சோமனை இறைவன் திரு உருவில் வரிந்து வரிந்து கட்டி வைத்தே காட்டுவார் கள். ஆதலால் அன்பர்கள் இந்த ஊர்த்துவ தாண்டவக்கோலங் காணத் தென் காசி காசி விசுவநாதர் ஆலயத் துக்கே போகவேணும். அங்குள்ள மகாமண்டபத்தில் ஒன்றுக்கு இரண்டாக அமைந்திருக்கும் ஊர்த்துவ தாண்டவரையே பார்க்கலாம் எளிதாக. அதில் ஒன் றையே பார்க்கிறீர்கள் இக்கட்டுரையிலே.

திருவாலங்காட்டுக்குச் செல்வதானல் ரயிலில் செல்வதுதான் நல்லது. சென்னைக்கு மேற்கே முப்பத்தி ஏழு மைலில் திருவாலங்காடு ரயில்வே ஸ்டேஷன். அங்கு இறங்கி வண்டி பிடித்துக்கொண்டு வடக்கே மூன்று மைல் சென்ருல் கோயில் வாயிலில் கொண்டு போய்விடும். கோயில் நிரம்பப் பெரியதுமல்ல ; சிறியது மல்ல. உள் கோபுர வாயிலிலே வலப்பக்கம் இருப்பவர் சித்தி விநாயகர். விநாயகர் கட்டைப் பிரம்மச்சாரி என்றுதானே அறிவோம். இல்லை, அவருக்குச் சித்தி புத்தி என்று இரண்டு மனைவியர் என்றும் கூறுவர். ஞானமாம் புத்தியை மனைவியாகப் பெற்ருல், பெறற் கரிய சித்திகள் எல்லாம் தானே வந்து அடையாதா? அந்த சித்தியையே (ஆம்! பெண்ணுருவில் இருக்கும் சித்தியைத்தான்) தன் மடிமீது வைத்துக்கொண்டிருக் கும் கோலத்தில் இங்கு விநாயகரைப் பார்க்கிருேம். சித்தி விநாயகரை வணங்கி அவர் அருள் பெற்றுக் கோயிலுள் நுழைந்தால் முதல் முதல் நாம் காண்பது ஊர்த்துவ தாண்டவரையே. தெற்கு நோக்கிய ரத்ன சபையிலே செப்புச்சிலை உருவிலே நிற்கிருர் அவர்.

ரத்னசபை என்ருல் ஏதோ முழுக்க முழுக்க நவரத்தினங்கள் இழைத்த மண்டபம் என்று நினைத்து விடாதீர்கள். கல்லாலாகிய ரத்தினம்தான். அங்குள்ள மஞ்சத்தில் மற்ற நவரத்தினங்களும் இருக்கலாம். அவையெல்லாம் பளிச்சென்று நம் கண்ணுக்குத் தெரியவில்லை. இந்த ரத்தின சபையைக் கடந்து சென்ருல் உட்பிராகார வாயிலிலே, வடக்கு நோக்கிய ஒரு சிறு கோயிலிலே காளி இருக்கிருள். ஐயோ, பாவம்! போட்டியில் தோற்ற அவமானம் தாங்கமாட்டாமல் ஏதோ ஒதுக்குப்புறமாக இடந்தேடி ஒழித்துக் கொண்டிருக்கிருள் அவள். இனி கோயில் உள்ளே கர்ப்பக் கிருஹத்தில் இருப்பவர் தேவர் சிங்கப் பெருமான். அவரது துணைவிதான் வண்டார் குழலி. தேவர் சிங்கப் பெருமானை வலம் வந்தால் அகோர வீர பத்திரர் கம்பீரமாக நின்று கொண்டிருப்பதையும் பார்க்கலாம்.

இத்தனை திரு உருவங்களைப் பார்த்தாலும் நமக்குத் திருப்தி ஏற்படாது. ஆலங்காடு என்ற உடனேயே காரைக்கால் அம்மையாரும், அவர் பாடிய மூத்த திருப்பதிகம், இரட்டை மணி மாலை, அற்புதத் திருவந்தாதி பாடல்கள் எல்லாம் ஞாபகத்துக்கு வருமே. புனிதவதியான காரைக்கால் அம்மை தன் கணவனை விட்டுப்



காரைக்கால் அம்மை

பிரிந்து, இந்த ஊனுடை வனப்பை யெல்லாம் உதறித் தள்ளி, பேய் உரு எய்தி, கைலாச கிரியிலே இருந்து தலையாலேயே நடந்து வந்து நடராஜனது திருவடிக்கீழ் என்றும் சிவானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக் கிருள் என்று வேறே படித்திருக்கிறோம். அதோடு இறவாத இன்ப அன்பு வேண்டிய அவர் பின்னும் "பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்பு உண்டேல், உன்னை என்றும் மறவாமை வேண்டும்; இன்னும் வேண்டும் நான் மகிழ்ந்து பாடி அறவா நீ ஆடும்போது உன் அடியின் கீழ் இருக்க" என்றெல்லாம் வேண்டிக் கொண்டவர் ஆயிற்றே. அவரைக் காணவில்லையே என்று உள்ளம் ஏங்கும். இத்தனை விஷயங்களைத் தெரிந்த நாம் 'எங்கே அந்தக் காரைக்கால் அம்மை?' என்று கேட்டால் கோயில் நிர்வாகிகள், 'ஓ அவரையா கேட் கிறீர்கள்?' என்று சொல்லி, ரத்தின சபைக்குத் தெற்கே இருப்புக் கிராதிகளுக்குள் அடைத்து வைத்திருக்கும் மண்டபத்துக்கு அழைத்துப் போவார்கள் நம்மை. அங்கு சென்றால் மற்றச் செப்புச் சிலைகளோடு செப்புச் சிலையாய்க் காரைக்கால் அம்மையையும் பேயுருவத்தி லேயே காண்போம். கொங்கை திரங்கி, நரம்பு எழுந்து குண்டுக் கண்களும், வெண்பற்களும் குழி வயிறும் உடைய பேயுருத்தான் என்றாலும் அந்த அம்மையின் புனிதமான உள்ளமும் அன்பும் நம்மை அடிமை கொள்ளும்.

இனி, கோயிலை விட்டு வெளியே வரலாம். தேவாரம் பாடிய மூவரும் கூறும் பழையனூர், ஆலங் காடு இந்த ஆலங்காடுதானே என்று கேட்டால், இந்தக் கோயிலுக்கு வெளியே ஊருக்கு வட மேற்கே யுள்ள நீலி கோயிலைக் காட்டுவர் மக்கள். இந்தப் பழையனூர் நீலி வரலாறு இலக்கியப் பிரசித்தி உடைய தாயிற்றே. அதைத் தெரிந்து கொள்ளாமல் திரும்ப

முடியுமா நம்மால் ? கதை இதுதான். காஞ்சியில் சுதரி சனச் செட்டி என்ற ஒரு வணிகன். அவனுக்கு மனைவியர் இருவர். இளையாள் மோகத்தால் மூத்தாள் நீலியை வஞ்சனையால் கொல்கிறான் அவன். அவளோ இந்த ஆலங்காட்டில் பேயாய் அலைகிறாள். வணிகன் ஒரு நாள் இந்த ஆலங்காட்டு வழியே தனியே வருகிறான். பேயாக இருந்த நீலி பெண் வடிவில் வணிகனைத் தொடர்கிறாள். அவள் வஞ்ச மொழிகளுக்குச் செவி கொடாது செல்கிறான் வணிகன். பின்னும் தொடர்வது அறிந்து பழையனூர் அம்பலத்து வேளாளரிடம் முறையிடுகிறான். பேயாம் நீலியும், அவள் தன் கணவனுடன் வாழ வகை செய்ய வேண்டுகிறாள். பேயின் இடையில் இருந்த குழந்தையும் வணிகனைத் தந்தை உறவுடன் அணைகிறது. இதனால் ஏமாந்த வேளாளர் எழுபதின் மரும் வணிகனை அப்பெண் பேயுடன் ஓர் இரவு தங்கள் ஊரில் தங்கச் சொல்கின்றனர். வணிகன் அதற்கு மறுக்க, அவர்கள் அவனுக்கு ஏதாவது தீங்கு நேர்ந்தால் அவர்கள் எல்லோரும் தீ மூழ்குவதாகச் சத்தியம் செய்கின்றனர். பேயுடன் தங்கிய வணிகனின் உயிர் குடித்துப் பேய் மறைந்து விடுகிறது. சொன்ன சொல்லைக் காப்பாற்றி வேளாளர் எழுபதின்மரும் தீக்குளிக்கின்றனர்.

மாறுகொள் பழையனூர் நீலி செய்த வஞ்சனையால்
வணிகர் உயிர் இழப்பத் தாங்கள்
கூறியசொல் பிழையாது துணிந்துசெந்தீக்
குழியில் எழுபது பேரும் முழுகிய

கதையைத் தொண்டை மண்டல சதகமும், உமாபதி சிவாச்சாரியார் சேக்கிழார் புராணமும் வியந்து கூறுகிறது. சத்தியத்துக்கு உயிர் கொடுத்தவர் வேளாளர் என்றாலும், கோயில் எடுப்பித்திருப்பது பழையனூர் நீலிக்கே. ஆம்! 'வஞ்சப் படுத்தொருத்தி வாழ் நாள்

கொள்ளும் வகை கேட்டு நாம் அஞ்சுவது' பழையனூர் நீலியைக் கண்டுதானே; அப்படி அஞ்சும்போதெல்லாம் 'அள்ளளம்பழனை மேய ஆலங்காட்டு அடிகளை' நினைத்தால் அவர் வினைகளை யெல்லாம் கரி சறுத்திடுவர் என்பர் அப்பர். ஆம்! அவருடன் சேர்ந்து ஆலங்காட்டு அடிகளை நினைந்து நாமும் நம் வினைகளைக் களையலாம் அல்லவா?



# 16

# நின்ற ஊர் பூசல் அன்பன்

செயற்கரிய செய்த திருத்தொண்டர் அறுபத்து மூவர் வரலாற்றைச் சேக்கிழார் பெரிய புராணமாகவே பாடியிருக்கிருர். அந்த அறுபத்து மூவரில் ஒருவர் பூசலார் நாயஞர். அவர் வாழ்ந்த ஊர் திருநின்ற ஊர். காஞ்சீபுரத்துக்கு வடகிழக்கே இருபது மைல் தொலே வில் இருக்கிறது. காஞ்சியில் இருந்து அரசு செய்தவர் களில் பேரும் புகழும் பெற்றவன் ராஜசிம்ஹன் என்னும் பல்லவ மன்னன். அவனுக்கு ஓர் ஆசை. தன்னுடைய ஆட்சிக் காலத்திலேயே கைலாசநாதருக்கு ஒரு கோயில் கட்டி முடிக்க வேண்டும் என்று அளவற்ற செல்வம் படைத்த அவன் நிணக்கிருன். அவன் ராஜ்யத்தில் வாழும் மக்கள் எல்லாம் துணே புரிகிருர்கள். கோயில் உருவாவதற்குக் கேட்பானேன்? இப்படிக் கைலாச நாதருக்கு ராஜசிம்மன் கோயில் கட்ட முணந்திருப் பதை அறிகிருர் பூசலார். இவருக்கும் ஆசை பிறக்கிறது தாமும் ஒரு கோயில் கட்ட வேண்டுமென்று. இவரோ பரம ஏழை; தொண்டு கிழம், அன்ருட வாழ்க்கையே மிகவும் சிரமம். இவர் எப்படிக் கோயில் கட்டுவது? அவருக்கு ஒன்று தோன்றியது, ஏன் தம்முடைய உள்

ளத்துக்குள்ளேயே ஒரு கோயில் கட்டக்கூடாதென்று. எண்ணிய எண்ணத்தை நிறைவேற்ற முயல்கிருர் இந்தப் பூசலாரும். ராஜசிம்ஹன் கோயில் கட்டக் கால்கோள் செய்வதால் இவரும் தன் மனத்துள் கட்டும் கோயிலுக்குக் கால்கோள் நடத்துகிருர். மன்னன் ஏவலால் பொன்னும் பொருளும் வந்து குவிகின்றன! சிற்பிகள் வேலையைத் துவக்குகின்றனர். மதில் எழுகிறது; மகாமண்டபம் உருவாகிறது; அர்த்த மண்டபம் கட்டப்படுகிறது; கர்ப்பக் கிருஹம் நிர்மாணம் ஆகிறது. அதன் பேரில் விமானம் எழுகிறது. இரண்டு வருஷகாலமாகக் கோயில் கட்டும் வேலை ஜரூராக நடக்கிறது, கச்சியிலே. பூசலாரும் சளைக்கவில்லை. இவரது கோயிலிலும், மதில், மண்டபம், கர்ப்பக் கிருஹம், விமானம் எல்லாம் உருவாகின்றன, யாதொரு செலவும் இல்லாமலேயே. ராஜசிம்ஹன் கோயில் கட்டி முடிந்ததும் கைலாச நாதரைப் பிரதிஷ்டை செய்ய நாள் குறிக்கிருன். அதே நாள் அதே முகூர்த்தத்தையே பூசலார் தாம் கட்டிய கோயிலிலும் இறைவன் பிரதிஷ்டைக்குக் குறித்துக் கொள்கிருர். பிரதிஷ்டை நடக்க இருப்பதற்கு முந்திய நாள் இரவு, மன்னன் ஏற்பாடுகளை யெல்லாம் கவனித்துவிட்டுத் தன் அரண்மனை திரும்புகிருன். அரிய காரியம் ஒன்றைச் சிறப்பாகச் செய்து முடித்த மனநிறைவோடு அமளி சேர்கிருன். இரவு நடுச்சாமம். அரசனது கனவில் கைலாச நாதர் தோன்றுகிருர். மன்னனைப் பார்த்து, 'ராஜசிம்ஹா! நாளை உதயத்தில்தானே பிரதிஷ்டை? அந்தப் பிரதிஷ்டைக்கு நான் வரமுடியாதுபோல் இருக்கிறதே. இன்னொரு கோயில், ஆம், நீ கட்டிய கோயிலைவிடப் பெரியதொரு கோயிலில், அதே நேரத்தில் பிரதிஷ்டை என்று ஏற்பட்டிருக்கிறதே. நான் அங்கு செல்ல வேணுமே, அதலால் உன் கோயில் பிரதிஷ்டையை

இன்னொரு நாளைக்கு மாற்றி வைத்துக் கொள்ளேன்' என்று சொல்கிறார். இதைக் கேட்டு ராஜசிம்ஹன் விலவிலத்துப் போகிறான். 'ஸ்வாமி! அப்படி என்னுடைய கோயிலைவிடப் பெரியதொரு கோயிலை, எங்கே யார் கட்டியிருக்கிறார்கள்?' என்று மிக்க ஆதங்கத்தோடு கேட்கிறான். கனவில் வந்த கைலாசநாதரும், 'அதுவா, பக்கத்தில்தான். திருநின்ற ஊரிலே பூசலார் என்ற அன்பன் கட்டியிருக்கிறான்' என்று சொல்லி மறைந்து விடுகிறார். அவ்வளவு தான்; மன்னன் எழுகிறான் மந்திரி பிரதானிகளை யெல்லாம் அழைக்கிறான். கேள்விமேல் கேள்வி கேட்கிறான். எல்லோருமே பூசலார் கட்டிய கோயிலைப் பற்றி அறிய முடியவில்லை. ஆதலால் உடனே புறப்படுகிறான் ராஜசிம்ஹன் திருநின்ற ஊரைநோக்கி. மந்திரி, மக்கள் எல்லோருமே அரசனைத் தொடர்ந்து செல்கிறார்கள். பலபல என்று விடிகிறபோது திருநின்ற ஊரில் வந்து சேர்கிறார்கள். அங்கே கோயில், பிரதிஷ்டை என்ற ஆர்ப்பாட்டம் ஒன்றையும் காணோம். ஊர் மக்களிடம் விசாரித்தால், 'பூசலாரா? அந்தக் கிழமா கோயில் கட்டியிருக்கிறது?' என்று ஏளனமாகவே பேசுகிறார்கள். திரும்பவும்கேட்டால் 'அவரா, அவர் ஊருக்கு மேற்கே உள்ள குளக்கரையில்



பூசலார்

உட்கார்ந்திருப்பார்' என்கிறார்கள். விரைந்து சென்றால் அங்கே ஒரு மரத்தடியில் பூசலார் பதும ஆசனத்தில் யோகநிலையில் அமர்ந்திருக்கிறார். அவரை அணுகி, 'பெரியவரே! பெரியவரே! நீர் கட்டியிருக்கும் கோயில் எங்கே?' என்று கேட்கிறான் ராஜசிம்ஹன். அவரோ 'என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள். நான் கட்டிய கோயிலில் இப்போதுதான் பிரதிஷ்டை நடந்து கொண்டிருக்கிறது' என்கிறார். விவரம் கேட்டால், அவர் தம் உள்ளத்திலே கோயில் கட்டிய கதையையும் அதில் பிரதிஷ்டை நடந்த விதத்தையும் விரிவாகவே கூறுகிறார். அரசன் பூசலார் அடியில் வீழ்ந்து—'அன்பரே! இறைவன் நான் பொன்னாலும் மண்ணாலும் கட்டிய கலைக்கோயிலை விட, உம்முடைய மனக் கோயிலே பெரிது என்று உவந்து உம் கோயில் பிரதிஷ்டைக்கே வந்திருக்கிறார்' என்று கூறுகிறான். பூசலாரும் இறைவனது பேரன்பை வியக்கிறார்; நினைந்து நினைந்து இறைவனைத் தொழுகிறார். இவரையே

நீண்ட செஞ்சடையினார்க்கு
நினைப்பினால் கோயிலாக்கி
பூண்ட அன்பு இடை அறாத
பூசலார் பொற்றாள் போற்றி

என்று சேக்கிழாரும் மகிழ்ந்து பாடுகிறார். 'மாசிலாப் பூசலார் மனத்தினால் முயன்ற கோயில்' கச்சியில் ராஜ சிம்ஹன் அமைத்த கற்றளியிலும் சிறந்தது என்று இறைவன் கருதுகிறான் என்பது கதை.

சில வருஷங்களுக்கு முன்பு, மேல் நாட்டு அறிஞர் பலர் கூடிச் சமய உண்மைகளை எல்லாம் அலசி ஆராய்ந்து கொண்டிருந்தனர் ஒரு கூட்டத்தில். அந்தக் கூட்டத்துக்குச் சென்ற நானும் அவர்கள் பேசுவதை எல்லாம் கேட்டுக்கொண்டிருந்தேன் வாயே திறவாமல்.

அங்கிருந்த மேல் நாட்டு அன்பர் ஒருவர் என்னையும் ஏதாவது சொல்ல வேண்டும் என்று கேட்டார். அந்தச் சமயத்தில் எனக்கு நினைவுவந்த இந்த 'நின்றவூர்ப் பூசல் அன்பன் நினைவினுல் அமைத்த கோயிலை'ப் பற்றிய கதையைக் கொஞ்சம் கண் மூக்கு எல்லாம் வைத்துச் சொன்னேன். இதைக் கேட்ட ஓர் அறிஞர் என்னைக் கேட்டார். 'நண்பரே! இவ்வளவும் உண்மையாய் நடந்ததா என்று?' நான் சொன்னேன்: சேக்கிழார் பொய்யே சொல்ல அறியாதவர் ஆயிற்றே. அவர் நடந்ததை யெல்லாம் நடந்தபடியே சொல்லும் புலவர் அல்லவா? அதோடு காஞ்சி கைலாசநாதர் கோயில் வேறே இருக்கிறதே. மேலும் திண்ணனூர் என்று இன்று வழங்கும் திருநின்ற ஊரில் இருக்கும் கோயிலில் இருப்பவர் இருதய கமலநாத ஈசுவரர் என்று பெயர் பெற்றவர் ஆயிற்றே. ஆதலால், இவ்வளவு நேரம் சொன்னது அத்தனையும் அப்படியே நடந்திருக்க வேண்டும் என்றே நம்புகிறேன் நான்' என்றேன். அப்போது அறிஞர் சொன்னுர்: 'அன்பரே! இப்படி யெல்லாம் நடந்து அதையே உங்கள் சேக்கிழார் சொல்லியிருந்தால் அவர் ஒரு சரித்திர ஆசிரியர் என்ற பாராட்டுக்கு மட்டுமே உரியவர். இப்படி ஒன்றுமே நடவாதிருந்து, அத்தனை விஷயத்தையும் கற்பனை பண்ணி, கதை சொல்லியிருந்தால் இந்த அரிய கற்பனைக்கு மேலே ஒரு கற்பனை உலக இலக்கியத்திலே கிடையாதே. உள்ளத்தில் இறைவன் இருக்கிருன் என்பதை எல்லாச் சமயவாதிகளும்தான் சொல்கிருர்கள், அந்த உண்மையில் அழுத்தமான நம்பிக்கை இல்லாமலேயே. அப்படி இருக்க இந்த உண்மையை விளக்க, இப்படி ஒரு கற்பனைக் கதையையே உங்கள் சேக்கிழார் உருவாக்கி இருந்தால், உலகமே அவருக்குத் தலை வணங்கி நிற்க வேண்டுமே' என்ருர்.

உண்மைதானே. 'இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க' என்று பாடிய மாணிக்கவாச கரையும் 'மனத்தகத்தான்' என்று பாடிய அப்பரையும் விஞ்சியிருக்கிறுர் இந்தப் பூசலார், மனத்திலேயே கோயில் ஒன்றைக் கட்டி.

இந்தப் பூசலார் நெடிது நாள் நினைந்து செய்த இந்த மனக்கோயிலின் ஞாபகார்த்தமாகப் பின்வந்த வர்கள் ஒரு கோயில் கட்டி யிருக்கிறுர்கள் அந்தத் திருநின்ற ஊரிலே. சென்னை—அரக்கோணம் இருப் புப் பாதையில், திண்ணனூர் என்று ஒரு ரயில்வே ஸ்டேஷன். அங்கு சென்று தெற்கு நோக்கி ஒரு மைல் நடந்தால் (ஆம் நடக்கத்தான் வேண்டும் - வண்டி



பக்தவத்சலர் கோயில்

எல்லாம் ஸ்டேஷனில் எளிதில் கிடைக்காது) பெரிய கோபுரத்தோடு கூடிய கோயில் ஒன்றில் இருக்கும் பக்தவத்சலர் வழி மறிப்பார். நமக்குத்தான் சைவ வைணவ பேதமே கிடையாதே. ஆதலால் வழிமறிக் கும் பக்தவத்சலரையே தரிசிக்கலாம் முதலில்.

இவரையே நின்றவூர் நித்திலம் என்று மங்கை மன்னன் பாடிப் பரவி மகிழ்ந்திருக்கிறார். இந்த பக்தவத்ச லனையே பத்தராவிப் பெருமாள் என்று அழகாக அழைப்பார்கள். இத்துடன் அங்கு கோயில் கொண் டிருக்கும் தாயாரை ஸ்ரீமத்ஸவித்ரீ நாயகி என்று வட மொழியில், நீட்டி முழக்கிக் கூறினால் நிரம்பவும் அரு மையாக என்னைப் பெற்ற தாயார் என்றே அழைப் பார்கள் நல்ல தமிழில் அன்பர்கள். இந்த பக்தவத் ஸலன் கோயிலில் ஸ்ரீனிவாச விமானம் உண்டு. வருண புஷ்கரணி உண்டு. விருத்தக்ஷீர நதிக்கரையிலே உள்ள இந்தப் பெருமாள் வருணனுக்கே பிரத்தியக்ஷ மானவர் என்பது புராண வரலாறு. பெருமாளையும் தாயாரையும் வணங்கிவிட்டுப் பின்னும் கிழக்கே வந் தால் ஒரு சிறிய கோயிலைப் பார்ப்போம். கோயில் வாயிலில் கோபுரம் இருக்காது. உள் நுழைந்ததும், தகரக் கொட்டகை ஒன்றே நமக்குத் தென்படும். இந்தச் சின்னஞ் சிறிய கோயிலில் இருப்பவரே இருத யாலய ஈசுவரர். அவரது துணைவியே மரகதாம்பிகை. இந்த அம்பிகை பின்னமுற்றிருப்பதால் பூசை இல்லை. புதிய சிலா உருவம் தயாராக இருந்தும் இன்னும் பிர திஷ்டை ஆகவில்லை. கோயிலில் கர்ப்பக் கிருஹத்துக் குள்ளேயே பூசலாரும் சிலை உருவில் இருக்கிறார். மனத்துள் வைத்துப் பூஜித்தவரைக் கர்ப்பக் கிரு ஹத்துள் வைத்துப் பூஜிக்கிறார் இருதயாலயர். இந்தக் கோயிலில் செப்புச் சிலை வடிவிலும் பூசலார் இருக் கிறார். அவரையே பார்க்கிறீர்கள் படத்தில். நீங்க ளும் நானும் அவரது இருதயத்தில் இருந்த இருதயால ரைக் காணத் துடிப்போமல்லவா? ஆதலால் அவர் லிங்கத் திருவுருவில், பூசலார் மார்பிலே நெஞ்சுக்கு வெளியே இருக்கிறார். அரிய கற்பனை கற்பனையாகவே இருந்திருக்கலாமே, இப்படிக் கேலிக்கூத்தாக ஓர் உரு

வம் அமைந்திருக்க வேண்டாமே என்றும் தோன்றும். இக்கோயிலில் நால்வர், சோமாஸ்கந்தர், பிக்ஷாடனர் எல்லாம் இருக்கிறார்கள். இவர்களையெல்லாம் விஞ்சிய வராய் பக்தவத்சலராம் மகா விஷ்ணுவே மோஹினி உருவிலும் இருக்கிறார். ஒன்றரை அடி உயரத்திலே உருவானவர்தான், என்றாலும் நல்ல அழகான திரு உரு. மோஹினியின் முன்னழகைவிடப் பின்னழகு (ஆம் பின்னல் அழகுதான்) பிரமாதம். இக்கோயில் அன்று பூசலார் உள்ளத்தில் ஒளிந்திருந்தது போல் இன்றுமே நின்ற ஊரிலே ஓர் ஒதுக்குப்புறத்திலேயே இருக்கிறது. இருந்தாலும் இக் கோயிலைத் தேடிப் பிடித்துத் திருப்பணி செய்திருக்கிறார் ஒரு அம்மை. அவர்தான் தேவகோட்டை சீதை ஆச்சி என்பவர்- கோவை மில் அதிபர் திரு சோமசுந்தரம் செட்டியாரின் தாயார். அவர் பூசலார் பக்திக்குத் தலை வணங்குவது போல் இந்த சீதை ஆச்சியின் பக்தி சிரத்தைக்குமே தலை வணங்கலாம்.

இந்தத் திருநின்றவூர், பூசலார் பக்தவத்சலர் என்ற இருவரால் மட்டுமே பிரசித்தி அடைந்தது என்றில்லை. இந்த ஊரிலே இருந்த ஒரு ரஸிகர், கொடை வள்ளல் காளத்திவாணர் என்பவராலும் இலக்கியப் பிரசித்தி பெற்றிருக்கிறது. இந்த நின்றைக் காளத்திவாணர் புலவர்களை ஆதரிக்கும் வள்ளல். ஆதலால் வறுமை யால் வாடும் புலவர்கள் எல்லாம் இவரைத்தேடி வருவ துண்டு. அப்படி வருகிறான் ஒரு கவிஞன். நீண்ட நாளாக வறுமையுடன் போராடிய அவன் நின்றையூர் நோக்கி வருகிற வழியில் இருட்டி விடுகிறது. நின்றை யூருக்கு அயலிலே உள்ள ஒரு சிறு கிராமத்தில் சத்தி ரத்தில் தங்குகிறான். அங்குள்ளவர்களும், காளத்தி வாணரின் கொடையையும் ரஸிகத் தன்மையையும் பாராட்டிப் பேசுவதை யெல்லாம் கேட்கிறான். ஒரு

நம்பிக்கை பிறக்கிறது உள்ளத்தில். மறுநாட் காலை காளத்தி வாணரைக் கண்டுவிட்டால் தன் வறுமை தன்னை விட்டுத் தொலை தூரத்தில் ஓடிவிடுமே. ஐயோ பாவம்! அது இன்றைக்கு ஒரு நாளாவது நம்மிடம் இருந்துவிட்டுப் போகட்டுமே என்று பரிவுடன் நினைக்கிருன் தன்னைத் தொடர்ந்து வந்த வறுமையை. இந்த பரிவு ஒரு பாட்டாகவே வெளிவருகிறது அந்தச் சத்திரத்தில் அன்றிரவு.

நீளத் திரிந்து உழன்ருய்
நீங்கா நிழல்போல
நாளைக்கு இருப்பாயோ ?
நல்குரவே !—காளத்தி
நின்றைக்கே சென்றக்கால்
நீ எங்கே? நான் எங்கே ?
இன்றைக்கே சற்றே இரு.

என்பது பாட்டு. ஆம். நின்றைக்கே செல்லலாம். நாமும் நினைப்பினுல் கோயில் செய்த பூசலாரை நினைத்துக் கொண்டே. அங்குள்ள பக்தவத்சலரை, என்னைப் பெற்ற தாயாரை, இருதயாலயரை, மரகதவல்லியை வணங்கலாம். அதுவரையில் நாம் செய்த பழவினைகளும் நம்மோடு இருந்து விட்டுப் போகட்டுமே என்று அவைகளிடம் கொஞ்சம் அனுதாபமும் காட்டலாம்தானே.



17

# முல்லை வாயில் நாதன்

பண்டைத் தமிழ் நாட்டு வள்ளல்களில் பிரபல மானவன் வேள்பாரி. பல வளங்கள் உடையதும், முந்நூறு ஊர்களைக் கொண்டதுமான பறம்பு மலையி லிருந்து ஆட்சி செலுத்திய சிற்றரசன் அவன். வேளிர் குலத் தலைவனான இப்பாரி வரையாது கொடுக்கும் வள்ளல். பாடி வந்த புலவர்களெல்லாம் முந்நூறு ஊரையும் பரிசிலாகவே பெற்றுச் சென்று விடுகின்றனர். மிஞ்சியது குன்று ஒன்றுதான். இப்பாரியின் புகழைக் கேட்ட தமிழ் நாட்டு மூவேந்தர் இவனிடம் தீராப் பகைமை கொள்கின்றனர். வள்ளல் பாரி நல்ல வீரனும்கூட. ஆதலால் அவனைப் போரில் வெல்வது என்னவோ இயலாத காரியமாக இருக்கிறது அவர் களுக்கு. இந்தப் பாரியை வெல்ல அவர்கள் கண்ட ஒரே வழி, பாடும்பாணர்களாக வேஷ மிட்டு வந்து பரிசி லாகக் குன்றைப் பெறுவதுதான். குன்றைக் கைக்கண்ட தோடு, வஞ்சனையால் பாரியையுமே கொன்று விடுகின் றனர் இம்மூவேந்தரும் சேர்ந்து. இத்தகைய பாரியின் கொடைத் திறனை விளக்க ஒரு சிறு கதை உண்டு. ஒரு நாள் வேள் பாரி தேரிலே ஏறிக் கொண்டு காட்டுக்குச்

செல்கிருன். திரும்பும்பொழுது வழியில் முல்லேக் கொடி ஒன்றைப் பார்க்கிருன். அக்கொடி பற்றிப் படர் வதற்குக் கொழுகொம்பு ஒன்றில்லாமல் துவண்டு விழுவதைக் காண்கின்ருன். இதைக் கண்ட பாரியின் உள்ளத்தில் ஒரு கருணே பிறக்கிறது. துவளும் முல்லேக் கொடிக்குத் தான் ஊர்ந்து வந்த தேரையே கொழு கொம்பாக நிறுத்திவிட்டு நடந்தே திரும்புகிருன் தன் அரண்மனேக்கு. முல்லேக் கொடிக்கே இத்தனே கருணே காட்டியவன் என்ருல், அவன் கொடைத் திறனேப் பற்றி விவரிப்பானேன்! இந்தப் பாரியின் உயிர்த் தோழர் புலவர் பெருமகனுன கபிலர். அவர் பாடுகிருர், இவன் முல்லேக்குத் தேர் அளித்த செயலேக் குறித்து.

பூத்தலே அருஅப் புனே கொடிமுல்லே
நாத்தழும்பு இருப்ப பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர்
கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்புடை பாரி

என்று கபிலரால் பாரியும், பாரியால் முல்லேக் கொடியும் பிரசித்தி பெற்று விடுகின்றனர்.

இதைவிடப் பெரிய சமயப் பிரசித்தியே பெறுகிறது மற்ருெரு முல்லேக்கொடி. அந்தக் கொடி காரணமாக ஒரு கோயிலே உருவாகிறது; கோயிலேச் சுற்றி ஒரு கிராமமும் எழுகிறது. அப்படி எழுந்த கோயில் தான் மாசிலாமணி ஈசுவரர் கோயில். அக்கோயில் இருக்கும் தலந்தான் திருமுல்லேவாயில். இத்தலத்தின் வரலாற்றை அறிய வேண்டாமா? சோழ மன்னனுன கிள்ளி வளவனுக்கும் நாக கன்னிகையான பீலிவளேக் கும் பிறந்தவனே தொண்டையர் குலத் தோன்றலான ஆதொண்டைச் சக்கரவர்த்தி. சோழமன்னன் தன் நாட்டை இரு கூருக்கி, தென்பகுதியைச் சோழனுக்கும், வடபகுதியை ஆதொண்டைக்கும் பகிர்ந்து கொடுக்


திருமுல்லைவாயில் கோபுரம்

கிருன். இந்தத் தொண்டைமான் சக்கரவர்த்தி காடு வெட்டி நிலம் திருத்தி, அங்கிருந்த குறும்பர் குறும்படக்கி, தொண்டை மண்டலத்தையே உருவாக்குகிருன். காஞ்சியிலிருந்து புழல் கோட்டத்துக் குறும்பர் தலைவனை அடக்கப் புறப்படுகிருன். படைகள் பின் நடந்து வர, இவன் யானைமீது ஆரோகணித்து முன்னே செல்கிருன். வழியிலே ஒரு முல்லைவனம். அங்கே ஒரு கொடி மன்னன் ஏறிச் செல்லும் யானையின் கால்களைச் சுற்றிக்கொள்கிறது. அதனுல் யானை நடக்க இயலாதது கண்டு யானை மீதிருந்த சக்கரவர்த்தி உடைவாளால் அக்கொடியை வெட்டி எறிகிருன். இப்படி இவன் வீசிய வாள்வெட்டு முல்லைக் கொடியின் கீழ் இருந்த சிவலிங்கத்தின் மீது படுகிறது. லிங்கத் திருவுருவின் தலையிலிருந்து ரத்தம் சிந்துகிறது. மன்னன் இதனைக் கண்டு, யானையினின்றும் இறங்கித் தான் செய்த அபசாரத்துக்கு வருந்துகிருன். உடனே இறைவனும் தொண்டைமானை ஆட்கொள்ளக் கருதி, அவனுக்குத் தரிசனம் தருகிருன். அவன் மேற்கொண்ட படையெடுப்பில் தக்க துணையாக இருக்க நந்தி தேவரையே உடன் அனுப்பிவைக்கிருன். மன்னனும், குறும்பரை வென்ற பின் தன்னை ஆட்கொண்ட இறை

வனுக்கு, ஒரு கோயில் கட்டுகிருன். தான் வெற்றி கொண்ட புழற்கோட்டத்திலிருந்து இரண்டு எருக்கந் தூண்கள் கொண்டு வந்து நிறுத்தி விதானம் அமைக் கிருன். இப்படித் தான்தோன்றி ஈசராக அமைந்தவரே மாசில்லாமணிநாதர். அவர் கோயில் கொண்டிருக்கும் இடமே வட திருமுல்லைவாயில். இந்தத் திருமுல்லை வாயில் நாதனை ஆளுடை நம்பியாம் சுந்தரர் விளக்க மாகவே பாடுகிருர்.

சொல்லரும் புகழார் தொண்டைமான் களிற்றை,
சூழ் கொடி முல்லையால் கட்டிட்டு
எல்லையில் இன்பம் அவன்பெற வெளிப்பட்டு
அருளிய இறைவனே என்று
நல்லவர் பரவும் திருமுல்லை வாயில்
நாதனே நரை விடை ஏறி!
பல்கலைப் பொருளே! படுதுயர் களையாய்
பாசுபதா! பரஞ்சுடரே!

இப்படிச் சுந்தரர் திட்டவட்டமாகக் கூறியிருந்தும் இக்கதைக்கு வேறு இரண்டு 'பாடங்களும்' ஏற்பட் டிருக்கின்றன. சுந்தரர் பாடிய ஊர் வட திருமுல்லை வாயில். அவர் சொல்லும் கதையில் தொண்டைமான் களிற்றை முல்லைக்கொடி சுற்றிக்கொள்கிறது. இதே கதையை, இதே வடதிருமுல்லை வாயில் தலத்துக்கே ஏகாம்பரநாதர் உலா பாடிய இரட்டையர்களும் ஏற்று கிருர்கள் ஒரு சிறு மாறுதலுடன். யானைக்குப் பதிலாக இவர்கள் குறிப்பது தேரை.

'மல்லல் தொடைத் தொண்டைமான்
கடவும் தேரை ஒரு முல்லைக்கொடி தடுத்தமூதூர்!

என்பது அவர்கள் சொல்லும் பாடம். இன்னும் முல்லை வாயில் என்ற பெயரிலேயே சோழநாட்டிலே, சம்பந்தர் பிறந்த சீகாழிக்குக் கிழக்கே ஒன்பது மைல் தூரத்தில்

கடற்கரையில் ஓர் ஊர் இருக்கிறது. அதைத் தென் திருமுல்லை வாயில் என்கிருர்கள்.

சம்பந்தரோ,

> வரை வந்த, சந்தொடு அகில் உந்தி வந்து
> மிளிர்கின்ற பொன்னி வடபால்
> திரை வந்து வந்து செறி தேறல்
> ஆடு திரு முல்லை வாயில் இதுவே.

என்று அறுதியிட்டுக் கூறுகிருர். இங்குள்ள இறைவன் முல்லை வனநாதர். இறைவி கோதை. இங்கேயும் ஒரு பாட பேதம். கிள்ளி வளவனது குதிரை ஊர்ந்து செல்லும்போது முல்லைக்கொடி ஒன்று அக்குதிரையின் காலைப் பிணைத்தது என்று சொல்கிறது தென் திருமுல்லை வாயில் புராணம். இந்தப் பாடங்களை யெல்லாம் அலசி ஆராய்ந்து முடிவு காண வேண்டியதை ஆராய்ச்சி யாளர்களுக்கு விட்டுவிடலாம். மூன்று கதையிலும், ஆம். களிறு, தேர், குதிரை என்றெல்லாம் பாடம் மாறு பட்டாலும் பிணைத்தது என்னவோ முல்லைக்கொடி என்பதை மறுப்பவர் இலர். முல்லைக்கொடி தடுத்த மூதூர், திருமுல்லை வாயில் என்று பிரசித்தி பெற்றிருப் பதும் உண்மை, அது போதும் அல்லவா நமக்கு?

நாம் இன்று பார்க்கப்போவது வடமுல்லை வாயிலேயே (தென் திருமுல்லை வாயில் தொலைதூரத்தில் தெற்கே இருக்கிறது. மிகவும் சின்னஞ் சிறிய கோயில்தான். ஆதலால் அதை விட்டு விடலாம்தானே!) இந்தத் திருமுல்லை வாயில் சென்னைக்கு மேற்கே பன்னிரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. சமீபத்தில் காங்கிரஸ் மகாசபை நடந்த ஆவடிக்கு வடகிழக்கே இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. சென்னையிலிருந்து செல்வோர் ஆவடி செல்லும் பாதையில் சென்று கொஞ்சம் வடக்கே திரும்பி ஊருக்குள் போகவேண்டும்.

கோயில் கோபுரம் தெற்கு நோக்கி இருந்தாலும், மாசில்லாமணி நாதர் கிழக்கு நோக்கியே இருக்கிறார். மகாமண்டபத்துக்கு வெளியே ஒரு சிறிய மண்டபத்தில் இருக்கும் நந்தியோ (திருவலத்தில் இருந்ததுபோல்) இறைவனுக்குப் பின்புறத்தைக் காட்டிக்கொண்டு கிழக்கு நோக்கியே இருக்கிறது தொண்டைமான் சக்கரவர்த்திக்குத் துணைபோன அவசரத்தில். கோயிலுக்குச் சென்றால் கர்ப்பக்கிருகத்துக்கு வெளியே இருக்கின்றன இரண்டு எருக்கத் தூண்கள். தேக்குமரத்தை விட வலிவுடைய தூண்கள் அவை. பித்தளைப் பூண்கள் வேறே கட்டி வழுவழு என்று இருக்கின்றன. இறைவனே தீண்டாத திருமேனி தாங்கியவராக இருக்கிறார். அவருக்குச் சந்தனக் காப்பிடுகிறார்கள். இவரையே வெட்டுத் தாங்கி ஈசுவரர் என்றும் அழைக்கிறார்கள். தொண்டைமான் சக்கரவர்த்தி வெட்டிய வெட்டினால் ஏற்பட்ட வடு இன்றும் இருக்கிறது அவரது திருவுருவில்.

இங்குள்ள இறைவியின் திருநாமம் கொடி இடை நாயகி. முல்லைக் கொடியின் அடியில் இருந்த இறைவன் வெளிவந்தபோது அவனைக் கொழு கொம்பாகச் சுற்றி நிற்கும் அம்மையைக் கொடி இடையாள் என்று சொல்வது எவ்வளவு பொருத்தம்! கோயில் நிரம்பப்


நந்தி மண்டபம்



பல்லவ சிங்கத் தூண்கள்

பழைய கோயில் என்பதற்குக் கோயிலின் பிரதான வாயிலை நோக்கி இருக்கும் விநாயகர் சந்நிதியை அலங்கரிக்கும் இரண்டு சிம்மத் தூண்கள் சான்று பகரும். பல்லவர் கோயில்களில்காணும் சிம்மத் தூண்கள் இங்கே கிடந்திருக்கின்றன. அவற்றை வைத்தே இச் சிறு கோயில் உருவாக்கப் பட்டிருக்கு மெனத் தோன்றுகிறது. இந்தக் கோயிலின் விமானத்திலே ஒரு பளிங்கு விநாயகர் வலம் சுழித்த தும்பிக்கையுடன் இருக்கிறார். ஓர் அடிக்கும் குறைவான உயரமே உடையவர் அவர். எங்கேயோ பூனாப் பக்கத்திலிருந்து வந்தவர் இவர் என்று தோன்றுகிறது.

இந்தத் திருக்கோயில் அமைப்பெல்லாம் அழகாக இருந்தாலும் சென்று காண்பவர்களுக்கு ஓர் ஏமாற்றம் இருக்கவே செய்யும். முல்லைக்காடாக இருந்த இடம் இது என்றும், முல்லைக் கொடி தடுத்து நிறுத்தியது தொண்டைமான் சக்கரவர்த்தியை என்றும் ஒன்றுக்கு மூன்றாகக் கதைகள் உருவாகி யிருக்க, இன்று கோயிலுக்கு உள்ளேயோ அல்லது வெளியிலேயோ மருந்துக்குக்கூட ஒரு முல்லைக் கொடியைக் காணோம். அரளியை எல்லாம் வைத்து வளர்த்திருக்கும் கோயில் நிர்

வாகிகள் முல்லைக்கொடியை மட்டும் வைத்து வளர்க்க மறந்ததன் காரணம் என்னவோ ? முல்லை வன நாதராம் மாசில்லாமணி ஈசுவரரையும், கொடியிடை நாயகியையும் தான் கேட்க வேண்டும்.



# 18

# ஒற்றியூர் உறை உத்தமன்

சம்சாரம் ஒரு பெரிய சாகரம். என்றாலும் அச்சாக ரத்தில் புகுந்து குளிக்காதவர்கள் இல்லை. அப்படிப் புகுபவர்களில் அலைகளால் மோதுண்டு சாகரத்திலேயே அமிழ்ந்து விடுகிறவர்கள்தான் அனந்தம். ஏதோ ஒரு சிலரே, இச்சாகரத்தில் நீந்தவும், முக்குளித்து வெளியே வரவும் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்க, இச்சாகரத்தைக் கடத்தலோ அருமையினும் அருமை. அதற்குத் தக்கதொரு தோணி வேண்டும். தோணியை வலிக்க நல்ல வலுவான துடுப்பு வேண்டும். இப்படி யெல்லாம் சென்றாலும் சாகரத்திலே பாறைகள் வேறே மறைந்திருக்கும்; கடும் புயல் வேறே அடிக்கும். இதை யெல்லாம் வெற்றி கண்டு வாழ்வின் பேறு பெறுவதற் குத் துணையாயிருப்பது இறை உணர்வு. அந்த இறை உணர்வில் லயித்து, இறை வழிபாட்டில் திளைப்பவர் களே 'மனிதரில் தலையாய மனிதர்' இப்படியெல்லாம் விரித்துச் சொல்வது நானல்ல. சமய குரவரில் பழுத்த அனுபவம் உடையவரான அப்பர் அ சொல்கிறார். அதுவும் கடற்கரையில் உள்ள திருவெ யூர் சென்று அங்குள்ள ஆதிமூர்த்தியைக் கண்டு வணங்

கியபொழுது சொல்கிருர். ஒற்றியூரை ஒட்டியுள்ள கடலைக் கண்டதும் கடற்கரையில் நின்ற அப்பர் பாடுகிருர்.

மனம் எனும் தோணிபற்றி
　　மதி எனும் கோலை ஊன்றி
சினம் எனும் சரக்கை ஏற்றி
　　செறி கடல் ஓடும் போது
மதன் எனும் பாறை தாக்கி
　　மறியும் போது அறிய ஒண்ணுது
உனை உனும் உணர்வை நல்காய்
　　ஒற்றியூர் உடைய கோவே.

என்று. ஆம்! இறை உணர்வு மக்களுக்கு எவ்வளவு அவசியம் என்பதை உணர்ந்திருக்கிருர் அவர். ஆனல் அந்த் உணர்வைப் பெறுவதற்கும் அவன் அருளையே நாடுகிருர்.

இறைவனை உன்னுதற்கு அப்பர் அவன் அருள் வேண்டி நின்ருல் இறைவனையே உண்டு சுவைத்து ருசி கண்டவராக நிற்கிருர் பட்டினத்தடிகள். திருவெண்காட்டிலே செல்வச் சீமாளுகப் பிறந்து வளர்ந்து, இறைவனும் மருதவாணனையே மகனுகப் பெற்று, அம்மகன் 'காதற்ற ஊசியும் வாராதுகாண் உன் கடை வழிக்கே' என்று உணர்த்த, அதனுல், மாடு மனை, மக்கள் சுற்றம் எல்லாம் துறந்து, பல இடங்களில் அலைந்து கடைசியில் ஒற்றியூர்க் கடற்கரை வந்து சேர்கிருர். அங்கு முளைத் திருந்த பேய்க்கரும்பும் இனிப்பதை ஊணர்கிருர். காணும் பொருளில் எல்லாம் இறைவனைக் காணும் [illegible] பெற்ற அவர், அந்தக் கரும்பிலும் இறைவனையே [illegible]கிருர். 'கனியினும் கட்டிபட்ட கரும்பினும் இனிய [illegible] இருப்பவன் இடை மருதன்' என்பதை விடக் [illegible]பயே கடவுளாகக் காணவும், அந்தக் கரும்

ணையே சுவைக்கவும் பேறு பெறுகிறார். தாம் பெற்ற அனுபவத்தையே எடுத்துச் சொல்கிறார்.

கண்டம் கரியதாய் கண் மூன்று உடையதாய்
அண்டத்தைப் போல அழகியதாய்-தொண்டர்
உடல் உருகத் தித்திக்கும் ஓங்கு புகழ் ஒற்றிக்
கடல் அருகே நிற்கும் கரும்பு

என்பதுதான் புட்டினத்தார் அனுபவம். அந்தக் கரும்பைச் சுவைக்க விரும்புபவர் எல்லோரும் சென்று தொழவேண்டிய தலமே திரு ஒற்றியூர்.

இந்தத் திரு ஒற்றியூர் சென்னைக்கு வடக்கே ஆறு, ஏழு மைல் தொலையில் உள்ள ஒரு சிறிய ஊர். கடற்கரையை அடுத்திருக்கிறது. சென்னையின் ஒரு பகுதியான வண்ணாரப் பேட்டையைக் கடந்து காரில் சென்றால் இங்குள்ள கோயில் வாயில் வந்து சேரலாம். கோயிலுக்கு வடபுறம் பெரியதொரு தெப்பக்குளம் இருக்கிறது. குளம் இருக்கிறதே ஒழிய அதில் தண்ணீர் இருப்பது அருமை. குளக்கரையில் தெற்கு நோக்கிய ஒரு பெட்டிக்கடை. அந்தக் கடையை அடுத்து ஒரு சின்னஞ்சிறு சிலை. அதைக் கரும்பேந்திய பட்டினத்தாரோ என்று எண்ணத் தோன்றும். இல்லை, அது காந்திஜியின் சிலை யென்பார்கள். (ஐயகோ! காந்திஜியின் ஜாதக விசேஷமே அப்படி. எவ்வளவு பிரபல சிற்பி உருவாக்கினாலும் அவர் சரியாக உருவாவதே இல்லை. காரணம் அவர்களால் அவரது உள்ளத்தில் வீசிய உண்மை ஒளியை உணர முடிவதில்லை; அவ்வளவுதான்; சிற்பியின் திறமைக்குப் பழுது சொல்லுதல் கூடாது.) காந்திஜியானாலும் பட்டினத்தடிகளானாலும் இருவரும் வணக்கத்துக்கு உரியவர்கள் தாமே. ஆதலால் அவரை வணங்கிவிட்டு, இனி கோயிலுக்குள் போகலாம். கோயிலினுள் சென்றதும்

நமக்கு முன் எதிர் நிற்பது துவஜ ஸ்தம்பமும், நந்தி மண்டபமும் அல்ல. அவை யெல்லாம் ஒரு மகிழ மரத்துக்குப் பிரதான இடம் கொடுத்துவிட்டு, தென்புறமாக ஒதுங்கி நிற்கும். இது என்ன இந்த இடத்தில் இந்த மகிழடிக்கு இவ்வளவு மகத்துவம் என்று எண்ணுவோம் நாம். அதற்கு விளக்கம் பெறுவோம் அங்குள்ள அர்ச்சகரிடம். உங்களுக்குத் தெரியாதா? இங்கு மாசி மகத்தில் நடக்கும் மகிழடி சேவையைப் பற்றி என்று விவரிப்பார். அவர் விவரிக்கும் சரிதத்தின் முழு விவரமும் தெரிவிக்கப் பெரிய புராணம் பாடிய சேக்கிழார் விரைந்து வருவார்.



திரிபாத மூர்த்தி

வன் தொண்டராம் சுந்தரரை இறைவன் திருவெண்ணெய் நல்லூரிலே தடுத்து ஆட்கொள்கிருர். அதன் பின் அவர் திருவாரூர் சென்று அங்குள்ள பரவையாரை மணக்கிருர். பின்னர் பல தலங்கள் சென்று இறைவனைப் பாடி வணங்கிவிட்டுத் திருஒற்றியூர் வருகிருர். அங்கு இவருக்காகவே பிறந்து வளர்கிருள் ஒரு பெண், சங்கிலி என்ற பெயரோடு. கோயிலில் அவளைக் கண்டு காதலிக்கிருர்

சுந்தரர். இவர் அப்படி ஒன்றும் பிரமாத ஏக பத்தினி விரதர் அல்ல. இது அவரது தோழராம் இறைவ னுக்குமே தெரியும். ஆதலால், தம் தோழராம் ஆதி மூர்த்தியின் அருளை நாடுகிறார்; சங்கிலியை மணக்க. அவரும் சங்கிலியிடம் சென்று, 'சால என்பால் அன் புடையவனான சுந்தரன் உன்னை இரக்கின்றான், நீ



ஒற்றியூர் மகிழடி

அவனை மனத்தால் அணைவாய் மகிழ்ந்து' என்கிறார். அவளும் சம்மதிக்கிறாள். ஆனால் நிபந்தனை விதிக் கின்றாள், 'தன்னை ஒருகாலும் பிரியேன்' என்று சுந்தரர் சத்தியம் செய்ய வேண்டும் என்று. காரிய சித்தியி லேயே கண்ணாய் இருக்கும் சுந்தரரோ அதற்கும் சரி என்கிறார். இறைவனோடு மிக்க உரிமை கொண்டாடும் சுந்தரர் இதற்கும் ஒரு வழி கண்டு பிடிக்கின்றார். இறை வனிடமே 'ஐயனே! நான் இந்த சத்தியத்தில் நிலைத்து நிற்கப் போவதில்லை. ஆதலால் நான் சங்கிலி யுடன் உன் சந்நிதிக்குச் சத்தியம் செய்ய வரும்போது, நீ கோயிலினுள் இராதே. கோயில் பிரகாரத்தில்

உள்ள மகிழ மரத்தடிக்குச் சென்றுவிடு. அப்படிச் சென்றுவிட்டால் என் சத்தியத்தைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டிய அவசியம் இராதல்லவா' என்கிறார். இழுத்த இழுப்புக்கெல்லாம் இறங்கும் இறைவனும் சரி என்கிறார். ஆனால் ஒரு சிறு குறும்பு மாத்திரம் செய்கிறார். அன்றிரவே சங்கிலியின் கனவில் தோன்றி "நங்கையே! நானை ஆரூரன் சூள் உரைக்க உன்னையும் அழைத்துக்கொண்டு என் சந்நிதிக்கு வருவான். நீ சந்நிதியில் சத்தியம் செய்யவேண்டாம், பக்கத்தில், உள்ள கொங்கலர் பூ மகிழின் கீழ் சத்தியம் செய்தால் போதும் என்று சொல்லு' என்று கூறி மறைகிறார். அவளும் மறுநாட் காலை அப்படியே சொல்கிறாள். என்ன செய்வார், இந்த முனைப்பாடிப் புரவலனும் சுந்தரர்? இறைவன் செய்யும் திருவிளையாட்டை நினைந்து, 'மூவாத திருமகிழை முக்காலும் வலம் வந்து மேவாது இங்கு யான் அகலேன்' என்று சத்தியம் செய்து கொடுக்கிறார், சங்கிலிக்கு. அன்று மகிழடிக்கு வந்த ஆதிபுரீசுவரர் அங்கேயே நிலைத்து விடுகிறார் அன்று முதல். அதனால் இந்த மகிழ மரத்துக்கே ஒரு சாந்நித்யம், அதனையே இறைவன் திருவுரு என்று வழிபாடு நடக்கிறது. மகிழடி சேவை இன்றும் பெரியதொரு திருநாளாகவே கொண்டாடப்படுகிறது. எவ்வளவு அரிய உண்மையை அழகான ஒரு கற்பனை விளக்குகிறது. கல்லிலும், புல்லிலும், மண்ணிலும், மரத்திலும் இறைவன் என்றுமே நிலைத்திருக்கிறான் என்ற அரிய உண்மையை விளக்க எழுந்த கதையாக இந்த மகிழடி சேவையைக் கொண்டால் எத்தனை இன்பம் நமது உள்ளத்துக்கு. சத்தியம் செய்ய வேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஒன்றும் நமக்கு இல்லாவிட்டாலும் நாமும் இந்த மகிழ மரத்தை மூன்று சுற்றுச் சுற்றி வணங்கிவிட்டு மேல் நடக்கலாம்.

இந்த மகிழ மரத்தை ஒரு சுற்றுச் சுற்று முன்பே நம் கண் முன் ஓர் அழகிய வடிவம் தோன்றும். அழகிய சிற்பம் என்பதை விட, அபூர்வம் என்பதிலேயே அதில் ஒரு கவர்ச்சி. பிரதான கோயிலின் கோஷ்ட விக்கிரகமாக வடக்கு நோக்கி இருப்பவர் திரிபாத திரிமூர்த்தி, தமிழ் நாட்டிலே இச் சிற்ப வடிவம் இரண்டே இரண்டு இடத்தில்தான். ஒன்று திருவானைக்காவில், மற்றொன்று திருவொற்றியூரில். திரிவானைக்காவில் உள்ளதை விடப் பெரியவராக அழகுடையவராக இருப்பவரே திருவொற்றியூரில் உள்ள திரிபாத திரிமூர்த்தி. பிரமனும் விஷ்ணுவும் சிவனிடத்தே, அடக்கம் என்னும் சிவபரத்துவத்தை விளக்க எழுந்த திரு உருவே இது. மான் முழுவேந்தி நிற்கும் சிவனுக்கு ஒரே திருப்பாதம். அவர் உருவில் இருந்து கிளைத்து எழும், பிரமன், விஷ்ணுவுக்குமே ஒவ்வொரு திருப்பாதமே. யோக நிலையில் சிவன் நின்றால் கூப்பிய கையராய் மற்றவர் இருவரும் நிற்கிறார்கள். எல்லாம் ஒரே கல்லில் மூன்றடி உயரத்தில் சிற்ப உலகிலேயே ஓர் அதிசய உருவாக இருக்கிறது. இந்த அபூர்வ வடிவைக் காண்பது உங்களுக்கு எளிதாகலாம் இங்கு உள்ள படத்தின் மூலம்.

மகிழடியில் உள்ள ஆதி மூர்த்தியையும் அதனை அடுத்த கோஷ்ட விக்கிரகமாக எழுந்தருளியிருக்கும் திரிபாத திருமூர்த்தியையும் வணங்கிவிட்டு இனி பிரதான கோயிலினுள் நுழையலாம். இக் கோயிலில் உள்ள லிங்கம் புற்று வடிவமாக இருக்கிறது. இவரையே படம்பக்கநாதர் என்கிறார்கள். பழைய பெயர் ஆதிபுரீசுவரர். அவர்தான் இன்று மகிழடிக்கு வந்து கோயில் கொண்டுவிட்டாரே! இந்த ஆதிமூர்த்தியாம் படம்பக்கநாதரையே தேவாரம் பாடிய மூவரும் பாடித் துதித்திருக்கிறார்கள். 'விழிதரும் நீரும் மண்ணும் விசும்

பொடு அனல் காலும் ஆகி, அளிதரு பேரருளாளர் அரனுகிய ஆதிமூர்த்தி' என்று சம்பந்தரும், 'உள்ளத்துள் ஒளியும் ஆகும் ஒற்றி ஊர் உடையகோ' என்று அப்பரும் பாடியவரையே, 'பந்தும் கிளியும் பயிலும் பாவை சிந்தை கவர்வார் செந்தீ வண்ணர்' என்று சுந்தரர் பாடுகிருர். இந்த ஆதிமூர்த்தியின் அருமைத் துணைவியாம் வடிவுடை அம்மைக்குத் தனிச் சந்நிதி. அது கோயில் வடகிழக்கு மூலையில் இருக்கிறது. இது தவிர புதுப்பிக்கப்பட்ட கோயில் (ஆம்! அழகற்ற திருவுரு வங்களாலும் இரும்புக் கம்பியும் கிராதிகளாலும் உரு வானது) ஒன்று கோயிலின் மேலப் பிராகாரத்தில் இருக்கிறது. கோயிலுக்குள்ளேயே வடக்கு நோக்கிய காளியம்மையும் அவள் முன் ஒரு பலிபீடமும் இருக் கின்றன. பலி கொடுப்பதெல்லாம் இப்போது நிறுத்தப் பட்டிருக்கிறது என்று அறிகிருேம். அங்கு தரும் குங்குமப் பிரசாதத்தையும் பெற்றுக்கொண்டு திரும்ப லாம் வந்த வழி நோக்கி.

இத்தலம் சம்பந்தர் காலமாகிய கி. பி. ஏழாம் நூற் ருண்டிலிருந்தே பிரசித்தியடைந்திருக்கிறது. கோவி லில் திருவிளக்குத் தொண்டு செய்த கலிய நாயனரது அவதார ஸ்தலம் இது. பல சோழ மன்னர்கள் இக் கோயிலைக் கட்டவும், இக் கோயிலில் வழிபாடுகள் நடக்கவும் போதிய நிலபுலன்களை மான்யமாக விட்டி ருக்கிருர்கள். கோயிலில் பல உற்சவங்கள் சிறப்பாக நடைபெற்றிருக்கின்றன. அவைகளை யெல்லாம் நடத்தி வைக்கச் சோழ மன்னர்களே இவ்வூருக்கு வந்திருக் கிருர்கள். இரண்டாம் ராஜராஜன், தான் பட்டத்துக்கு வந்த ஒன்பதாம் ஆண்டிலே இக் கோயிலில் நடந்த பங்குனி உத்தர உத்சவத்துக்கு நேரில் வந்திருந்தான் என்று கோயிலின் இரண்டாவது பிராகாரத்தின் கிழக் குச் சுவரில் உள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது. இவ

னுக்குப் பின்னுல் பட்டத்துக்கு வந்த மூன்ரும் குலோத் துங்கனும் இங்கு வந்து ராஜ ராஜன் திரு மண்டபத்தி லிருந்து ஆனி உற்சவம் பார்த்தான் என்றும் அங்கு ஒரு தர்பாரே நடத்திஞன் என்றும் வரலாறு. இப்படி யெல்லாம் சோழ மன்னர்களால் பாராட்டப்பட்ட இக் கோயில் ஒரு பெரிய கலைக் கழகமாகவே விளங்கியிருக் கிறது அந்நாளில். இலக்கணம், தர்க்கம், கலை, ஞானம் எல்லாம் இங்கே கற்பிக்கப்பட்டிருக்கின்றன. ராஜேந் திர சோழன் பெயராலும், குலோத்துங்க சோழன் பெய ராலும் ஏற்பட்ட மடங்களில் எல்லாம் நல்ல உணவு அளிக்கப்பட்டிருக்கிறது. இப்படித் தமிழ் பரப்பவும் கலை வளர்க்கவும் ஒரு நல்ல கலைப் பள்ளியாகவே இருந் திருக்கிறது இத்தலம்.

இத்தனை விஷயங்கள் தெரிந்தாலும் இன்னும் ஒரு குறை வாசகர்களுக்கு இருக்கவே செய்யும். திரு ஒற்றி யூர் என்ருல் பட்டினத்தார் ஞாபகத்துக்கு வருகிருரே. அவருடைய ஞாபகச் சின்னம் ஒன்றும் இல்லையா இங்கே என்று கேட்கத் தோன்றும். ஓ, அதுவா! பட்டினத்தார் சமாதியையா கேட்கிறீர்கள் என்று சொல்லி ஊரில் உள்ளவர்கள், கடற்கரைப் பக்கம் கையைக் காட்டுவார்கள். நாம் அங்கு சென்ருல் செல்லும் வழி யிலே வலக் கைப்பக்கம் ஒரே சமாதிக் கூட்டங்கள் தென்படும். அங்கு சென்ருல் தகரக் கொட்டகையும் கள்ளிக்கோட்டை ஓடும் வேய்ந்த ஒரு சிறு கட்டிடம் தெரியும். அங்குதான் பட்டினத்தார் மாடு மேய்க்கும் பையன்களுடன் விளையாடி, சாலுக்குள் மறைந்து சமாதி அடைந்தார் என்பதை விசாரித்துத் தெரிந்து கொள்ளலாம். கடல் அருகே நிற்கும் கரும்பைச் சுவைத்த அவரது திரு உருவம் செப்புச் சிலைவடிவில் இருக்கும். கரும்பேந்திய கையராய் அவர் நிற்பார் அங்கே. அவரைத் தொழுதுவிட்டு வெளியே வந்து

வலது பக்கம் நோக்கினுல் அங்கு ஒரு கட்டிடம். கட்டிட வாயிலில் உள்ள போர்டைப் பார்த்தால் அதிச யிப்போம். காரணம் அது வட்டார அபிவிருத்தித் திட் டத்தின் கீழ் அமைந்த, மகப்பேறு மருத்துவ இல்லம் ஆகும். 'பார் அனைத்தும் பொய்யெனவே பட்டினத் துப் பிள்ளையைப்போல் யாரும் துறத்தல் அரிது அரிது' என்று பறைசாற்றும் பட்டினத்தார் சமாதியின் பக்கத் திலா மகப்பேறு மருத்துவ இல்லம்? என்று வியப்போம். அதை அங்கு நிறுவிய அன்பர்களின் கலாரசனையைக் கண்டு சிரிப்போம். ஒரே ஒரு சமாதானம். பிறந்த பின் தானே துறக்கும் எண்ணம். ஆதலால் பிறவியும் துறவும் அடுத்தடுத்து வருவது வாழ்வில் சகஜந்தான் என்று தேற்றிக் கொள்ளலாம்.



19

# அல்லிக்கேணி அழகன்

பார்த்தனுக்கு அன்று கண்ணன் செய்த கீதை உபதேசம், பாரில் உள்ள மக்களுக்கு எல்லாம் இன்று பயன்படுகிறது. 'பலன் கருதாது உன் கருமத்தைச் செய்யக் கற்றுக்கொள்' என்று கீதாசாரியனுன கண்ணன் பார்த்தனுக்குக் கூறியிருக்கிருன் அன்று. கீதோபதேசம் செய்ய நேர்ந்த சந்தர்ப்பம் பாரதக் கதையிலேயே ஓர் அழகான கட்டம். அதைக் கீதையிலேயே விரிவாகக் குறிப்பிட்டிருந்தாலும், மிகவும் ரத்தினச் சுருக்கமாக அழகான வெண்பாக்களில் கூறுகிருர் பாரதம் பாடிய பெருந்தேவனுர். குருக்ஷேத்திரத்திலே பாண்டவர் படையும் கௌரவர் படையும் அணிவகுத்து நிறுத்தப் பட்டிருக்கின்றன. அப்போர்க்களத்துக்கு அர்ச்சுனன் வருகிருன் தேரூர்ந்து. தேரை நடத்துபவன் கண்ணன். பாண்டவரில் ஒருவனுன அர்ச்சுனன் எதிர்ப் பக்கத்தில் இருக்கும் உறவினர்களையும் படை வீரர்களையும் பார்த்த் உடனே 'இத்தனை பேர்களையும் கொன்று குவித்துத்தான் நாடாட்சி செய்ய வேண்டும் என்ருல், அந்த அரசு அவசியம் வேண்டியதுதானு'? என்று எண்ணுகிருன். உள்ளத்தில் ஒரு சோர்வே

ஏற்படுகிறது அவனுக்கு. கையில் உள்ள வில் நழுவு கிறது. தேர்த்தட்டின் மீதே திகைத்து இருக்கிறான்.

உற்றாரை எல்லாம் உடன்கொன்று அரசாளப்
பெற்றாலும் வேண்டேன் பெருஞ்செல்வம்-சொல்த்தாழ்ந்து
வாள்தடக்கை வில் நெகிழ வாளா இருந்திட்டான்
தேர்த்தட்டின்மீதே திகைத்து

என்று ஆரம்பிக்கிறார் பெருந்தேவனார். பூபாரம் தீர்க்கப் பிறந்த புயல் வண்ணனான கண்ணன் இந்த நிலையில் பார்த்தனைப் பார்க்கிறான். அவனுக்குக் கீதோபதேசமே செய்கிறான். ‘இவ்வுலகில் ஒவ்வொரு மனிதனும் தான் செய்யும் காரியங்களுக்குத் தானே கர்த்தா என்று எண்ணிக் கொள்வதனால் தானே இத்தனை மனக்கஷ்டம். ஆக்கி, காத்து, அழிப்பவன் இறைவன்; ஆத லால் செய்யும் காரியங்களை யெல்லாம் அவனே செய் கிறான் என்று மட்டும் எண்ணத் தெரிந்து விட்டால் எவ்வளவு கஷ்டங்கள் மனிதன் மனத்தில் இருந்து நீங்கிவிடும். மேலும், கருமங்கள் செய்வதும் அப்படிச் செய்யும் கருமங்களின் பலாபலன்களைச் சிந்திப்பதும் மனிதன் செய்ய வேண்டிய செயல் அல்லவே. பலன் கருதாது பணி செய்ய மனிதன் கற்றுக்கொள்ள வேண் டும். ஆதலால் பார்த்தா! நீ உன் கருமத்தைச் செய். பலாபலன்களைச் சிந்தியாதே’ என்று உபதேசிக்கிறான் பார்த்தசாரதியான கண்ணன். அப்படி உபதேசம் பண்ணியவன் எல்லா அண்டங்களிலும் அவனே நிறைந்திருக்கிற தன்மையை விளக்கத் தனது விசுவ ரூபத்தையே காட்டுகிறான். இதையுமே சொல்கிறார் பெருந்தேவனார்.

பிறப்புநிலை கேடு இவையாவான், பாவம்
அறத்தினோடு ஐம்பூதம் ஆவான்—உறற்கரிய
வானவான், மண்ணவான் மன்னுயிர்கள் அத்தனையும்
தான்ஆதல் காட்டினான் தான்

அந்த உபதேசத்தைக் கேட்டு, அந்த விசுவ ரூபத்தைத் தரிசித்த பின், பார்த்தனது மயக்கம் தெளிகிறது. போர் ஏற்கிருன். போரில் பகைவர்களை யெல்லாம் வென்று வாகை சூடுவதற்குக் காரணமா யிருந்தவனும் அவன்தானே. ஆம். அந்தப் பார்த்தசாரதியாம் கண்ணன்தானே. அந்தப் பார்த்தசாரதி கோயில்கொண்டிருக்கும் இடம்தான் சென்னையின் ஒரு பகுதியான திரு அல்லிக்கேணி. அங்குதான் செல்கிரும் இன்று.

மகாவிஷ்ணு எடுத்த அவதாரங்கள் பத்து. ஒவ்வொரு அவதாரத்திலும் அவர் கொண்ட கோலங்கள் பல. அதில் பார்த்தனது சாரதியாய் இருந்து தேரோட்டியது கிருஷ்ணுவதாரத்தில். கிருஷ்ணனுக்கு என்று பல கோயில்கள் இருந்தாலும், பார்த்தசாரதிக் கோலத்துக்கு என்று இருப்பது இக்கோயில் ஒன்றே ஒன்றுதான். மேலும் ஒரு விசேஷம் இக்கோயிலில், அரங்கநாதனைக் காண கோயில் என்னும் ஸ்ரீரங்கம் செல்ல வேண்டும். வேங்கடேசனைப் பார்க்க, திருமலை என்னும் வேங்கட மலைமேல் ஏறவேணும். வரதராஜனைக் காண, பெருமாள் கோயில் என்னும் காஞ்சிக்கே போக வேணும். இன்னும் நரசிம்மனைக் காண அஹோபலத்திற்கும், ராமனைக் காண அயோத்திக்கும் போக வேணும். ஆனல் அந்தப் பஞ்ச மூர்த்திகளையும் இந்தத் திருவல்லிக்கேணி கோயில் ஒன்றிலேயே கண்டு விடலாம், இங்கு பார்த்தசாரதியைத் தொழச் சென்ருல் பஞ்சபாண்டவர்க்காகத் தூது சென்ற பார்த்தசாரதி கோயிலிலே பஞ்சமூர்த்திகளையும் ஒருங்கே வழிபாடு செய்ய வகை செய்திருக்கிருர்களே, அதுவே ஒரு பெரிய விசேஷம்தானே.

இந்தக் கோயிலைப் படத்தில் பார்த்தாலும் சரி, நேரில் சென்று கண்டாலும் சரி, கோயில் முன்னல், சந்நிதிக்கு நேர் எதிரே இருக்கும் புஷ்கரணியைப்

பார்க்காமல் இருக்க முடியாது. அதுவே ஆதியில் அல்லி மலரும் சிறிய கேணியாயிருந்து பின்னர் விரிந்து பரந்த பெரிய தெப்பக் குளமாக இருக்கவேணும். இதனையே கைரவணீ புஷ்கரணி என்று நீட்டி முழக்கிச் சொல்கிறது ஸ்தல புராணம். இந்த புஷ்கரணி தீர்த்தம் கங்கையை விடப் புனிதம் என்று கூறும் தல வரலாறு. இத்திருக்குளத்தில் மீன்களே வசிப்பதில்லை. யாரோ ஒரு முனிவர், இக்குளக்கரையில் தவம் செய்யும்போது குளத்தில் உள்ள மீன்கள் துள்ளி விளையாடி அவர் தவத்தைக் கலைத்ததென்றும், அதனால் கோபமுற்ற முனிவர் இக்குளத்தில் மீன்களே இல்லாமல் போக என்று சபித்ததாகவும் கதை. (சரி! இச்சாபத்தால் துயர் உறுகிறவர் நாமே. அழுக்கை யெல்லாம் உண்ணும் மீன்கள் இல்லாது போக, எல்லா அழுக்கும் சேர்ந்து திரண்டு குளத்தையே மிக மிக அசுத்தமாக வைத்திருக்கிறது முனிவர் சாபம்). இந்தப் புஷ்கரணியில் தான் பார்த்தசாரதியின் தெப்போற்சவம் ஏழு நாட்கள் நடைபெறுகிறது. சிறப்பான திருவிழா.



ஆனந்த விமானம்

இனி, கோயிலுள் நுழையலாம். கோயிலின் முன்புள்ள மண்டபங்களைக் கடந்துதான் மகா மரியாதை வாயிலுக்கு வரவேணும். இந்த வாயிலுக்கு மேல்தான்

முகத்துவாரக் கோபுரம் இருக்கிறது. ஐந்து அடுக்கும் ஏழு கலசமும் கொண்ட கோபுரம் புதுப்பிக்கப்பட்டி ருக்கிறது, சில வருஷங்களுக்கு முன்னமேயே. இதைக் கடந்து, இன்னும் உள்ளே யிருக்கும் தொண்டரடிப் பொடி வாசலையும் கடந்துதான், பார்த்தசாரதியைச் சேவிக்கச் செல்லவேணும். இந்தக் கோயிலில் ஒரு சம்பிரதாயம், பார்த்தசாரதியைச் சேவிக்கும் முன்பே மற்றவர்களை யெல்லாம் தரிசித்துவிட வேணும் என்று. ஆகவே பார்த்தசாரதியை வலமாகச் சுற்றி வணங்க வேண்டியவர்களை வணங்கிவிடலாம் முதலில். சந்நிதி வாயிலிலிருந்து தென்பக்கம் திரும்பியதும், நம்மை ஆட்கொள்ள இருப்பவள் வேதவல்லித் தாயார். இவள் சர்வாங்க சுந்தரி. ஸ்ரீவைகுண்டத்தில், ஸ்ரீமந் நாரா யணனோடு கூடிய மகாலக்ஷ்மி பூலோகத்தில் பிருந்தா ரண்யம் என்னும் இந்தத் திரு அல்லிக்கேணிக் கரை யிலே பிருகு மகரிஷியின் பர்ணசாலையருகே ஒரு சந்தன மரத்தடியிலே, பெண் மகவாகத் தோன்று கிறாள். அவளை எடுத்து வேதவல்லி என்று பெயரிட்டு வளர்க்கிறார் பிருகு மகரிஷி. இவள் மங்கைப் பருவம் அடைந்தபின் இவளைக் கண்டு காதலித்து மணம் புரிந்து கொள்கிறான் மந்நாதன். இவனைக் கண்டு 'இவனே என் நாதன்' என்று வேதவல்லி மிக்க நாணிக் கோணி கூறியதால் இவன் மந்நாதன் என்று பெயர் பெற்று இங்கேயே தங்கிவிடுகிறான். கொஞ்சம் சவுகரிய மாக்க் காலை நீட்டியே படுத்தும் விடுகிறான். இந்த மந்நாதனுக்கு (அரங்கநாதன் கோலத்தில் இருப்பவ னுக்கு) ஒரு தனி சந்நிதி இக்கோயிலின் உள்ளேயே. இந்த 'ஒரு வல்லித்தாமரையாள் ஒன்றிய சீர்மார் பனையே திருவல்லிக்கேணி வந்து கண்டு' தொழுதிருக் கிறார் பேயாழ்வார்.

இனி நாம் வணங்க வேண்டியவர் தெள்ளிய சிங்கமாம் நரசிங்கப்பெருமானையே. இவர் பார்த்தசாரதி

யின் கர்ப்பக் கிருஹத்துக்குப் பின் மேற்கு நோக்கிய வராய் யோக நிலையில் இருக்கிறார். இவர் இந்த பிருந் தாரண்யத்திலே அத்திரி மகரிஷிக்கும் பிரத்தியக்ஷம் ஆன அவசரத்திலே இருக்கிறார் என்பது புராணவரலாறு. இந்தக் கோவிலுக்குள்ளே ராமன் எப்படிக் குடிபுகுந் தான் என்பதற்கும் ஒரு வரலாறு உண்டு. சசிபதர் என்னும் முனிவர் பாண்டாரம் என்னும் மலையில் தவம் புரிகிறார். அவர் தவத்தைக் கலைக்க ஹேலை என்னும் அப்ஸரஸ் வருகிறாள். (பெரிய முனிவர் தவத்தை ஒரு சிறிய மீன் கலைத்தது என்றில்லையே, போகட்டும் அந்த மட்டும்) முனிவர் தவம் கலைகிறது. ஆண்மகவு



புஷ்கரணி

பிறக்கிறது. அந்த ஆண் மகவை விட்டு விட்டுப் பிரிந்து விடுகின்றனர் முனிவரும், தேவகன்னிகையும். குழந்தை மரத்திலிருந்து சொட்டிய தேனை உண்டே வளர்கிறது. மதுமான் என்றே பெயர் பெறு கிறது; இந்த மதுமானுக்குத் தரிசனம் தரவே அன்று மாயமானை வேட்டுச் சென்ற ராமன் இங்கு எழுந் தருளியிருக்கிறான். அனுமனோடு சீதா லக்ஷ்மண பரத



நாச்சியார்

சத்துருக்கன சமேதஞக. இத்தனை பேர்கள் இங்கு வந்திருக்கும்போது அந்தக் கருடவாகனர் கஜேந்திர வரதராஜனைச் சும்மா இருக்க விடுவார்களா? ஸப்த சோமா என்ற மகரிஷி அவரை வரவழைக்கிருர் இங்கே. அவருக்கும் ஒரு தனிச் சந்நிதி. இவ்விதமே மந்நாதன், நரசிம்மர், ராமர், வரதர் எல்லோருமே வந்து சேர்ந்திருக்கிருர்கள் இந்தக் கோயிலுக்கு. இவர்களைத் தவிர ஆண்டாள், அனுமன், ஆழ்வார்களுக்கு எல்லாம் தனித்தனிச் சந்நிதிகள் உண்டு.

ஆண்டாள் சந்நிதிப் பக்கத்திலிருந்து பார்த்த சாரதியின் கர்ப்பக் கிருஹத்தின் மேல் உள்ள விமான சேவை செய்துவிட்டு பார்த்தசாரதியைத் தரிசிக்க விரையலாம். மூலத்தானத்தில் கம்பீரமாக முறுக்கிய மீசையோடு நீண்டுயர்ந்த தோற்றத்தில் காட்சி அளிப்பவனே வேங்கடகிருஷ்ணன். கர்ப்பக்கிருஹத்தில் நிற்கும் மூலமூர்த்தியை வேங்கடகிருஷ்ணன் என்றும் உற்சவமூர்த்தியைப் பார்த்தசாரதி என்றும் அழைக்கிருர்கள்.. திருமலைமேல் நிற்கும் அம்மாதவ

னைக் கண்டு தொழச் சென்ற சுமதி என்ற தொண்டைமான் சக்கரவர்த்தி உள்ளத்தில் ஓர் ஆசை. உன்னை எத்தனையோ கோலங்களில் எல்லாம் காண்கிறேனே, அன்று பார்த்தனுக்குச் சாரதியாய்த் தேர் ஊர்ந்தபோது எந்தக் கோலத்தில் இருந்திருப்பாய் என்று நான் காண வேண்டாமா?' என்று மிக்க ஆதங்கத்தோடேயே பிரார்த்தித்துக் கொள்கிறாள். அவனுடைய பிரார்த்தனைக்கு இரங்கி பிருந்தாரண்ய க்ஷேத்திரமான இந்தத் திரு அல்லிக் கேணியிலே திருவேங்கடமுடையானே, பார்த்தசாரதியின் கோலத்தில் எழுந்தருளுகின்றான் என்பது கதை. பார்த்தசாரதி தனியே வரவில்லை. அண்ணன் பலராமன், தம்பி சாத்தகி, மனைவி ருக்மிணி மகன் பிரத்தியும்நன், பேரன் அநிருத்தன் சமேதனாகக் குடும்பத்தோடேயே இங்கு வந்திருக்கிறான். பார்த்தனுக்குத் தேரோட்டியாய் எழுந்த அவசரம் ஆனதால் சக்கர ஆயுதம் இல்லை. இடது கையில், வலது கையில் சங்கு உண்டு. ஆம். வெற்றியை ஊதி அறிவிக்கச் சங்கம் அவசியம்தானே. இடது கை வரத முத்திரையோடு இலங்குகிறது. மிக்க அழகோடு ருக்மிணி பக்கத்திலே நிற்கிறாள். சிசுபாலனை மணக்க இருந்த அவளை அவள் விருப்பப்படியே சகோதரர் பலராமன் சாத்தகி முதலியவர்கள் துணைகொண்டு தேரில் தூக்கிக்கொண்டு வந்து மணம்புரிந்து கொண்டவன் அல்லவா கண்ணன். ஆதலால் இத்தலத்திலே ருக்மிணி கல்யாண உற்சவமும் சிறப்பாக நடைபெறுகிறது. மூல மூர்த்திக்கு முன்னால் உற்சவமூர்த்தமாக நிற்பவனையே பார்த்தசாரதி என்கிறார்கள். இவர் ஸ்ரீதேவி பூதேவி என்ற உபயநாச்சிமார்களோடேயே எழுந்தருளி யிருக்கிறார். 'கண்ணன் என்னும் கருந்தெய்வம்' என்பதற்கேற்ப நல்ல கரிய திருமுக மண்டலம். நல்ல வசீகரமான திருமேனி. முகத்தில் எல்லாம் போரில் ஏற்பட்ட வடுக்கள். ஆடை அணிகலன்களைப்

பற்றியோ கேட்கவே வேண்டாம். எல்லாம் ஒரே வைர மயம். உத்சவர் கரத்தில் தேரோட்டுவதற்கு உரிய சாட்டை உண்டு என்பார்கள். அதையெல்லாம் நகை கள் மறைத்துவிடும். மூலவர் இடையிலே யிருந்து ஒரு கத்தி தொங்கும். பார்த்தனுக்குத் தேரோட்டும்போது ஆயுதமே எடுப்பதில்லே என்று சத்தியம் செய்து கொடுத்திருந்தானே அப்படி இருக்கக் கத்தியை இடை யில் சொருகி இருப்பது சரிதான? என்று எண்ணு வோம் நாம்: இதற்குச் கீதாச்சாரியனுய், ஞானயோ கத்தை விளக்கும்போது, 'அஞ்ஞானம் வேர் ஊன்றிய நெஞ்சில் எழும் ஐயங்களே ஞானவாளால் அறுத்து யோக நிலேகொள். பார்த்த! எழுந்து நில்' என்று பார்த்தசாரதி சொன்னனே அந்த ஞானவாளே இடையில் இருப்பது என்று கொண்டால் நம் சந்தே கமும் நீங்குந்தானே.

இந்த அல்லிக்கேணி நிற்கும் அமுதனேப் பேயாழ் வாரும், திருமழிசை ஆழ்வாரும், திருமங்கை மன்னனும் பாடி மகிழ்ந்திருக்கிருர்கள். முன்னவர் இருவரும் ஆளுக்கு ஒருபாட்டே பாட, திருமங்கை ஆழ்வார் மட்டும் பத்துப் பாட்டுக்கள் பாடியிருக்கிருர். இவர் 'பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேர்முன் நின்ருனே' மட்டும் பாடவில்லே. சிற்றவை பணியால் முடிதுறந்து இராவண வதம் முடித்த இராவ ணுந்தகனேயுமே பாடுகிருர். இதோடு விடுகிருரா?

> பிள்ளேயைக் கீறி வெகுண்டு தூண் புடைப்ப
> பிறைஎயிற்று அனல்விழிப் பேழ்வாய்
> தெள்ளிய சிங்கம் ஆகிய தேவை
> திருவல்லிக்கேணி கண்டேனே.

என்று அழகிய சிங்கரையுமே பாடுகிருர். (இத்தெள்ளிய சிங்கமே, துளசிங்கராக இன்று மக்கள் நாவில் வழங்கு கிருர்) 'ஆனேயின் துயரம் தீரப் புள் ஊர்ந்து ஆழி

தொட்ட கஜேந்திர வரதனே' தென்னன் தொண்டையர்கோன் செய்த நன்மயிலைத் திருவல்லிக் கேணியில் நிற்கிருன் என்றும் அறுதியிட்டுரைப்பார். ஆழ்வார் கண்ட அல்லிக்கேணியான் அழகன், அமுதன் ஆதியான் என்பதையெல்லாம் அறிகின்றபோது, நாமும் அவனைச் சென்று தொழுது அவனது கீதோபதேசத்தைக் கேட்டு வீடு பெறலாகும் அல்லவா என்றே நினைக்கத் தோன்றுகிறது எனக்கு.



20

# கடல் மயிலைக் கபாலி

நான் சிறு பையனாகப் படித்துக் கொண்டிருந்த போது, 'மாஜிக்' என்றால் எனக்கு நிரம்பப் பிரியம். சர்க்கஸ் விளையாட்டுக்களிலும் மோகம் உண்டு. அதில் எல்லாம் ஏதோ சில அபூர்வமான 'பார்' விளையாட்டுக் களும் ஆணும் பெண்ணும் சேர்ந்து ஆகாயத்திலேயே 'அந்தர்' அடிப்பதும்தானே. காட்டு மிருகங்களான சிங்கம் புலிகளை யெல்லாம் பிடித்து, அவைகளின் பற்களை யெல்லாம் பிடுங்கி, அவைகளைப் பட்டினி போட்டு வைத்திருப்பார்கள். அவைகளைக் கூண்டிற் குள் வைத்துச் சில விளையாட்டுக்களும் காட்டுவார்கள். அபூர்வமான விளையாட்டுக்களாகவே இருக்கும். ஆனால் அதிசயப்படுவதற்கு என்ன இருக்கிறது சர்க்கஸில்? ஆனால் மாஜிக் என்னும் கண்கட்டி வித்தை யில் என்ன அற்புதமான வேலைகள்? கண்மூடிக் கண் திறப்பதற்குள் என்ன என்ன ஜாலங்கள்? கண்ணைத் தான் மூடுவானேன்? விழித்த கண் விழித்தபடியே பார்த்துக்கொண்டிருக்கும்போதே, நாம் நடக்க முடி யாது என்று நினைத்துக் கொண்டிருப்பதை அல்லவா நடத்திக் காட்டுவார்கள் இந்த மந்திரவாதிகள். கூட்

டத்தில் முன் வரிசையில் இருப்பவரிடம் பத்திரமாய் வைத்துக்கொள்ளச் சொல்லிக் கொடுத்த தங்க மோதிரத்தைக் கூட்டத்தின் கடைசியில் இருப்பவர் ஒருவர் ஜேபியில் இருந்து எடுத்துக் காட்டுவார்கள். காலியான பெட்டி ஒன்றிலிருந்து விதம் விதமான பூக்கள், சுவையான பழங்கள் எல்லாம் தருவிப்பார்கள். காசு ஒன்றும் கொடாமலேயே. இது எல்லாம் நாகரிக மந்திரவாதியின் வேலை. ஆனால் அந்தப் பழைய கழைக் கூத்தாடியின் வேலையோ இவற்றையெல்லாம் தூக்கி அடிக்கும். கூட்டம் கூடியிருக்கும்போதே ஒரு சிறு மாங்கொட்டையைப் பூமியில் நட்டு, மண்ணைப்போட்டு மூடி அதன்மேலே ஒரு கூடையைப் போட்டு மூடுவான். 'ஜல் மந்திரக்காளி, சூ, மந்திரக்காளி' என்று மந்திர உச்சாடனம் வேறே செய்வான். பின்னர் கூடையைத் தூக்கித் தூக்கிக் காட்டுவான். மாங்கொட்டை நட்ட சில நிமிஷ நேரங்களுக்குள்ளே அது செடியாக வளர்ந்து, மரமாக உயர்ந்து, பூத்துக் காய்த்துப் பழங்களையும் கொடுக்கிறது. என்ன அற்புதமான வேலை! (இந்த அற்புத வேலை நமது சர்க்காருக்குத் தெரிந்திருந்தால், உணவுப் பிரச்னையை எவ்வளவு எளிதாகத் தீர்த்து விடலாம். ஆனால் ஒன்றே ஒன்று, மரம் வளர்ந்து பூத்துக் காய்த்ததுபோலவே மாயமாய் மறைந்தும் போய் விடுமே என்ற கவலைதான்.) கழைக் கூத்தாடியின் கடைசி வேலை: தன் சொந்தப் பெண்ணை உட்கார வைத்துக் கூடையால் மூடுவான். பின்னர் கூடைக்குள் பல தடவைகள் நீண்ட கத்தியால் குத்துவான். நமக்கோ உடல் பதறும். பின்னர் கூடையைத் திறந்தால் அதனுள் பெண்ணிருக்க மாட்டாள். மறைந்து போயிருப்பாள். அதன் பின் 'ஏ! பொண்ணு, ஏ, கண்ணு' என்று கூவுவான். தெருக்கோடியிலிருந்து ஓடி வருவாள் பெண். இதுதான் அதி அற்புதமான

வேலே, கழைக்கூத்தாடியிடத்திலே, இதைக் காட்டி விட்டால் பணம் காசு எல்லாம் நிறையப் பெயரும் அவனுக்கு.

இப்படி நடப்பது கண்கட்டி வித்தை. இதை ஒரு வித்தையாகச் செய்யாமல் வாழ்விலே ஒரு நிகழ்ச்சியா கவே நடத்திக் காட்டினுர் ஒருவர். அவர்தான் சைவ சமய குரவர்களில் முதல்வர் ஆகிய திருஞான சம்பந்தர். கழைக்கூத்தாடிக்காவது கூடைக்குள் சென்று மறைய, உயிரோடு கூடிய எலும்புந்தோலும் சதையும் இரத்த மும் உள்ள ஒரு உயிருள்ள பெண்ணே தேவையாயிருந் திருக்கிறது. ஆனுல் ஞான சம்பந்தரோ, எலும்புக் குவிய லுக்குள்ளிருந்தல்லவா ஒரு பூம்பாவையை வரவழைக் கிருர். அப்படி அவர் எலும்பைப் பெண்ணுருவாக்கிய தலம்தான் மயிலேயிலுள்ள கபாலீச்சுரம் என்னும் கோயில். கதை இதுதான்: கிட்டத்தட்ட ஆயிரத்து முந்நூறு வருஷங்களுக்கு முன் மயிலாப்பூரிலே சிவநேசர் என்று ஒரு வைசியர் இருந்தார். அவர் ஆளுடைய பிள்ளே அத்தனே சிறு வயதிலேயே தலம் தலமாகச் சென்று இறைவனேப் பாடுவதும், சமணர்களே வாதிட்டு வெல் வதும் ஆகிய காரியங்களேச் செய்து வருகிருர் என்பதை அறிந்து அவரிடம் அளப்பரிய பக்தி செலுத்துகிருர். தம் ஒரே மகளான பூம்பாவையை அவருக்கே மணம் முடித்துக் கொடுக்க எண்ணி மிகக் கவனத்தோடு வளர்க்கிருர். ஆனுல் பூந்தோட்டத்துக்குப் போன இடத்திலே பூம்பாவையைப் பாம்பு தீண்டி விடுகிறது. மரணம் அடைந்த அவளது உடலேத் தகனம் பண்ணி, அந்த எலும்பையும் சாம்பரையும் ஒரு குடத்துள் இட்டுப் பத்திரமாகப் பாதுகாக்கிருர் சிவநேசர். சில வருஷங்கள் கழிகின்றன. சிவத்தலங்களேத் தரிசித்து வரும் சம்பந்தர் ஒற்றியூர் வருகிருர். அங்கு சென்று சிவநேசர் நடந்ததைச் சொல்லிச் சம்பந்தரை மயிலாப்

பூருக்கு அழைக்கிறார். அவரும் வருகிறார். பூம்பாவை யின் எலும்புகள் இருந்த பாண்டமும் கோயில் மதில் புறத்துக்குக் கொண்டு வரப்படுகிறது. கபாலி கோயி லுக்கு வந்த சம்பந்தர் பாடுகிறார்.

மட்டிட்ட புன்னையுங் கானல் மடமயிலைக்
கட்டிட்டம் கொண்டான் கபாலீச்சரம் அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திரபல் கணத்தார்க்கு
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்

என்று தொடங்கிப் பதினொரு பாடல் 'தேனமர் பூம்பா வை'ப் பாட்டாகவே பாடுகிறார். அவ்வளவுதான்: குடத்துக்குள்ளிருந்து பூம்பாவை அழகிய கன்னிப் பெண்ணாக வெளியே வருகிறாள், வணங்குகிறாள்.



மயிலைக் கபாலி கோயில்

உயிர் அற்ற உடலுக்கு உயிர் அளித்தவர் ஆனதால் தனக்கு அவள் மகள் முறை என்று சொல்லி அவளை மணக்க மறுக்கிறார் சம்பந்தர். பூம்பாவையும் கன்னி மாடத்திலிருந்து சிவத்தியானம் பண்ணி முக்தி அடைகிறாள்.

சாதாரணமாக எலும்பைப் பெண்ணுருவாக்கிய இச்செயலைக் 'கன்னித் தண்தமிழ்' செய்த காரியம்

என்று போற்றிப் புகழ்வர் புலவர். தமிழ் மொழியை விட, தமிழ்ப்பாடல் செய்த அற்புதமே இது என நினைவு கூர்வர் அருணகிரியார்.

அளகை வணிகோர் குலத்தில் வனிதை உயிர் மீள
அழைப்ப அருள் பரவு பாடல் சொற்றவரே

ஞான சம்பந்தர் என்பர் அவர் பாடிய திருப்புகழில், சமய குரவரில் ஒருவர் இப்படி எலும்பைப் பெண்ணுரு வாக்கி யிருக்கிறார். இன்னுமொருவர் (சுந்தரர்) முதலை யுண்ட பாலனையே அழைத்திருக்கிறார். 'கரைக்கால் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே' என்று சுந்தரர் இறைவனுக்கே உத்தரவு போடுகிறார். ஆனால் சம்பந்தர் இறைவனிடம் விண்ணப்பம் கூடச் செய்து கொள்ளவில்லை. 'கார்த்திகை நாள் விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்?' 'தைப்பூசம் காணாதே போதியோ பூம்பாவாய்?' என்று பூம்பாவையிடமே (எலும்புருவாக இருப்பவளிடத்திலேதான்) கேட்கிறார். கபாலீச்சரத்தில் இருக்கும் இறைவன் என்ன அவ்வளவு விதரணை தெரியாதவனா? பூம்பாவை பூத உடலோடே விளக்கீடு காணவும், ஆதிரைநாள் காணவும், தைப் பூசம் காணவும் வகை செய்து எலும்புக்கே உயிர் கொடுத்து விடுகிறான். உயிர் கொடுத்தவர் கபாலீச் சரர்தான் என்றாலும், பேரும் புகழும் 'நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தருக்கே.'

இந்தக் கபாலீச்சரம் இருப்பது பிரசித்திபெற்ற மயிலாப்பூரிலே. மயிலாப்பூர் என்றாலே அங்குள்ள சாந்தோம் கடற்கரை, குளிர்ந்த தென்னஞ் சோலை யெல்லாம் நம் கண்முன் வரும். இந்த 'ஆழிசூழ் மயிலா புரித் திருநகர்,' தொல் புகழ் உடையது. 'மடல் ஆர்ந்த தெங்கின் மயிலை' என்றெல்லாம் பாடிய ஞானசம்பந் தரே, மயிலையையும் கபாலியையும் இணைத்து 'கான்

அமர் சோலைக் கபாலீச்சரம்' என்றும் பாடியிருக்கிறார். கபாலீச்சரத்தான் கோயில் அழகுக்கு அழகு செய்வது அக்கோயிலுக்கு மேல்புறத்தில் உள்ள தெப்பக்குளம். குளத்தின் நடுவிலே நீராழி மண்டபம். குளத்தின் பகைப்புலத்திலே கோயில் கோபுரம், கண்ணுக்கு இனிய காட்சியாய் இருக்கும். கோபுரமோ ஏழு மாடங் களுடன் இருக்கிறது. இந்தத் தலத்துக்கு மயிலாப்பூர் என்று பெயர் வந்ததே அங்கு கோயில் கொண்டிருக்கும் கற்பகவல்லி அம்பிகையால்தான். உமை மயிலாக உரு வெடுத்துச் சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்திருக் கிறாள். அவள் மயிலாக இருந்து தவம் புரிந்தமையால்



மயில் வழிபாடு

இக்கோயிலுக்கு மயிலை என்றும் மயிலாப்பூர் என்றும் பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவ்வரலாற்றை விளக் குகின்ற சிற்பவடிவம் ஒன்று கோயில் வடக்குப் பிரா காரத்தில் இன்றும் இருக்கிறது. மயிலாக விளங்கிய அம்மைக்குக் கபாலம் ஏந்திய கையனைய்க் காட்சி

கொடுத்து ஆட்கொண்ட பெருமான் ஆனதினலே கபாலி என்று பெயர் நிலேத்திருக்கிறது இறைவனுக்கு.

இக்கோயிலின் பெரிய திருவிழா அறுபத்து மூவர் உற்சவம். எல்லாச் சிவன் கோயிலிலும் அறுபத்து மூன்று நாயன்மார்கள் இருந்தாலும் இந்தக் கோயில் ஒன்றிலே தான் அவர்கள் எல்லோரையும் சேர்த்து எடுத்து திருவீதி உலா நடத்துகிருர்கள். இந்த அறுபத்து மூவரில் ஒருவரான வாயிலார் நாயனுர் அவதரித்த தலமும் இதுவே. இவரும் பூசலார் நாயனுர் போலவே இறைவனே 'மனத்தகத்தான்' என்று கொண்டாடியவர். இறைவனேப் பகட்டான பூசை புனஸ்காரங்களால் கொண்டாடுவதைவிட மானசீகமாக வணங்கி உய்வதே சிறந்தது எனக் கொண்டவர். இவரும் சொர்ணத்தால் சமைத்த மனக்கோயில் உள்ளே, இறைவனே எழுந்தருளப்பண்ணி ஒழியாத ஆனந்தமென்னும் திருமஞ்சனம் ஆட்டுவித்து, அறிவாகிய திருவிளக்கு ஏற்றி, அன்பை நிவேதித்து, நியதி தவருது அருச்சனே செய்து இறைவன் திருவடி அடைகிருர். இவரையே.

மறவாமையால் அமைத்த
  மனக்கோயில் உள்ளிருத்தி
உறவாதி தனே உணரும்
  ஒளிவிளக்கு சுடர்ஏற்றி
இறவாத ஆனந்தம் எனும்
  திருமஞ்சனம் ஆட்டி
அறவாளர்க்கு அன்பென்னும்
  அமுதமைத்து அர்ச்சனேசெய்வார்

என்று சேக்கிழார் வியந்து பாடுகிருர். எல்லாக் காரியங்களும் மனத்தில் நிகழ்வதால், வாயினுல் செய்ய வேண்டியது ஒன்றுமே இல்லே வாயிலாராம் வாய் இல்லார்க்கு.

கோயிலின் பிரதான வாயில் கிழக்கு நோக்கி யிருந்தாலும் மக்கள் எல்லாம் அதிகமாக உபயோகப் படுத்துவது மேற்கு கோபுரவாயிலேயே. கபாலீச்சரத் தானே மேற்கு நோக்கியவராகத்தானே இருக்கிறார். கோயிலில் கற்பகவல்லி சந்நிதி சிறப்பானதொன்று. கோயிலுக்குள்ளே பூம்பாவை, சம்பந்தர் வாயிலார், முதலியவர்களுக்கு எல்லாம் தனித்தனி சந்நிதிகள் உண்டு.

இன்னும் வைணவ முதல் ஆழ்வார் மூவரில் ஒருவரான பேயாழ்வார் அவதரித்த தலமும் இதுவே. இவர் இங்கும், திருவல்லிக்கேணியிலுமாக இருந்து தமிழ் வளர்த்திருக்கிறார். பெருமாளை நூறு பாடல்களால் பாடிப் பரவி இருக்கிறார். இவருக்கும் வாயிலாருக்கும் ஒரு அரிய ஒற்றுமை. இறைவனை மனக்கோயில் உள்ளிருத்தி வழிபட்டவர் வாயிலார் என்றால், இவருமே 'மாகடல் நீர் உள்ளான் மனத்து உள்ளவனே' என்றும், 'உளன் கண்டாய், உத்தமன் உள்ளுவார் உள்ளத்து உளன் கண்டாய்' என்றுமே பாடிக் குருந்தொசித்த கோபாலனைக் குறிப்பார். இந்தப் பேயாழ்வாரையும் வாயிலாரையும் விடப் பிரசித்திபெற்ற திருவள்ளுவர் வாசுகியோடு இருந்து இல்லறம் நடத்திய இடமும் இம் மயிலாப்பூரேயாம். வள்ளுவர் பெருமையோ அளவிட்டு உரைக்கும் தரத்தது அன்று. இன்னும் சமண சமயத்தைச் சேர்ந்த பண்டிதர் சிலர் மயிலாப்பூரிலே இருந்துதான் தமிழ் வளர்த்திருக்கிறார்கள். நேமிநாதம் எழுதிய நேமிநாதர் இங்கே இருந்திருக்கிறார். அவருக்கு என்று ஒரு சிறு கோயில் இவ்வூரில் இருந்ததாகவும் அந்தக் கோயிலில் இருந்த நேமிநாதர் சிலையைப் பெயர்த்து எடுத்து தென் ஆற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த சித்தாமூர் ஜைன ஆலயத்தில் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள் என்றும் கதை. இப்படியே, சைவ

வைணவ, ஜைன சமரச பீடமாக மயிலாப்பூர் விளங்கி இருக்கிறது அந்நாளிலே.

இன்னும் வேதாந்த சாரமான பாடல்களைத் தாயுமானவர் அடிச்சுவட்டிலே நின்று பாடிய மஸ்தான் சாகிபு இந்த மயிலாப்பூரிலே வாழ்ந்தவர்தானும். மேலும் ஸெயிண்ட்தாமஸ் என்னும் கிறிஸ்துவ ஞானி, வந்து சமாதி ஆன இடமும் இதுவே. அவர் கல்லறையைச் சுற்றி உருவான ஊரையே சாந்தோம் என்று குறுக்கிச் சொல்கிறார்கள். மயிலாப்பூர் வக்கீல் பரம்பரை மிகவும் பிரசித்தமானதாயிற்றே. பேரும் புகழும் படைப்பது இத்தல விசேஷத்தினால்தானே என்னவோ யார் கண்டார்கள்? வாசகர்கள் மயிலையில் இடம் தேடி 'கற்றவர் ஏத்தும் கபாலீச்சுரம்' ஓடினால் அதிசயமில்லை.



21

# வான்மியூர்ப் பால்வண்ணர்

உலக மகா கவிஞர் வரிசையிலே, ஆதி கவி என்னும் புகழுக்கு உரியவர் வான்மீகர். அவர் எழுதிய ராமகாதை ராமனது காலத்திலேயே பாடப்பட்டிருக்கிறது. வான்மீகரது கவித்வம் ஒப்புயர்வற்றது என்பர் வடமொழி தெரிந்தவர்கள். அந்தக் கவித்வத்தைவிட உயர்ந்தது அவர் சொல்கிற கதை. சக்கரவர்த்தித் திருமகனுன ராமனது சரிதம், எவ்வளவோ நல்ல பல நீதிகளைத் தன்னுள் கொண்டது; அவைகளை மக்கள் கற்று அதன் மூலமாக, நல்லொழுக்க முடையவர்களாக வாழ உதவுவது. அதிலும் இன்று அதிகம் பேசப்படும் உலக சகோதரத்துவத்துக்கே அடிகோலுவதாகவும் இருக்கிறது. இந்தக் கதை கவிச் சக்கரவர்த்தி கம்பனையும் பரம பக்தனுன துளசிதாசனையும் கவர்ந்ததில் வியப்பில்லை. அதனுல்தானே, ஒரு ராமவதாரமும் ஒரு ராம சரித மானஸூம், இந்திய மக்களுக்குக் கிடைத்திருக்கிறது. ஸரயு நதிக்கரையில் பிறந்து கங்கை நதிக்கரையிலே வளர்ந்த ராமனை, காவேரி தீரத்துக்கே கொண்டு வந்து அவனை ஒரு நல்ல காவேரிதீர ரஸிகனுக ஆக்கியிருக்கிருன் கம்பன். உண்மையிலே ராமன் வட

நாட்டை விட்டுத் தென் தமிழ் நாட்டுக்கே குடிவந்து விட்டான் என்றே தோன்றும், இங்கு அவனுக்கு ஏற்பட்டுள்ள கோயில்களைக் கணக்கிட்டால். ராமன் வந்து விட்டால், ராமனை உருவாக்கிய வான் மீகருக்கு வட நாட்டில் என்ன வேலை? ராமனைத் தேடிக்கொண்டே, அவன் வழியைப்பற்றிக் கொண்டே வான்மீகரும் இங்கு வந்துவிடுகிறார். (பல கோயில் களில் இருக்கும் வன்மீகநாதரை—அதாவது புற்றிடம் கொண்ட பெருமானாக எழுந்தருளியிருக்கும் மூர்த் தங்களைக் குறிப்பிடவில்லை நான்) பல தலங்களில், ராமன் இல்லாத தலங்களில் கூடத் தங்கிவிடுகிறார் வான்மீக முனிவர் தமிழ் நாட்டில். அப்படி அவர் தங்கிய இடங்களில் சிறந்தவை இரண்டு. ஒன்று சிதம்



தியாகராஜர் சந்நிதி

பரத்துக்குப் பக்கத்தில் உள்ள திருக்கழிப்பாலை. இன்று அங்கு கோயில் இல்லை. கொள்ளிடநதி கொண்டுபோய் விட்டதாம். ஆனால் மற்றொரு கோயில் நன்கு நிலை பெற்றிருக்கிறது. அதுதான் திருவான்மியூர். திருவான்மி யூரில் உள்ள பால் வண்ணநாதர்கோயிலில் உள்ள

மூர்த்தியை மருந்தீசர், அமிர்தேசுவரர் என்று அழைத்தாலும், ஊர் மட்டும் வான்மீகர் பேராலேயே, வான்மியூர் என்று நிலைத்திருக்கிறது.

வான்மீகர் இத்தலத்துக்கு வந்ததே ஒரு ரஸமான வரலாறு. வான்மீகருக்குத் தான் ஆயிர வருஷ காலம் தவம் பண்ணினோம் என்றும் அது காரணமாகவே ராமாயணம் பாட முடிந்தது என்றும், ராமாயணம் பாடியதினாலேயே அமரத்துவம் பெற்று விட்டோம் என்றும் ஒரு கர்வம். இந்த எண்ணத்தோடு வாழும் முனிவரை என்றும் சிரஞ்சீவியாக இருக்கும் மார்க்கண்டேயர் வந்து காண்கிறார் ஒரு நாள். அவரே அமிர்த கடேசுவரராம் சிவனை வணங்கி, என்றும் அமரனாக இருக்க வரம் பெற்றவர். இவர் வான்மீகரைப் பார்த்து, 'அமரத்வம் பெற, ஆயிரம் வருஷம் தவம் செய்ய வேண்டுமா ? ஒரு பெரிய காவியமே பாட வேண்டுமா? சிவனை ஒரு நாள் ஒரு பொழுது நினைந்து வணங்கினால் அமரத்வம் சித்தியாகி விடாதா ?' என்று வினவுகிறார். வான்மீகர் உள்ளத்திலும் சிவனை வணங்கி முத்தி பெறும் விருப்பம் எழுகிறது. மார்க்கண்டேயரும் 'சரி ! நீர் உலகத்தைச் சுற்றி வாரும். எந்த இடத்திலே "நான் இங்கே இருக்கிறேன்" என்று அசரீரி எழுகிறதோ அங்கே தங்கித் தவமியற்றும்; சிவபிரான் காட்சி கொடுப்பார்' என்கிறார். அப்படியே செய்கிறார் வான்மீகி. கடற்கரையை அடுத்த ஒரு சிறிய ஊரிலே, சிவபிரான் வான்மீகருக்குத் தரிசனம் கொடுக்கிறார். வான்மீகர் விரும்பிய மூன்று வரங்களையுமே தருகிறார். வரங்கள், அந்த ஊர் அவர் பெயராலேயே நிலைக்க வேண்டும் என்பது ஒன்று. இறைவர் சடாமகுடத்திலே உள்ள கங்கையின் ஒரு பகுதி அங்கு தங்கவேண்டும் என்பது ஒன்று. மேலும் இறைவன் தன் தாண்டவக் கோலங்களை யெல்லாம் காட்டி அருளவேண்டும்

என்பது ஒன்று. அதனால் ஊர் வான்மியூர் என்று நிலைக்கிறது, இறைவன் மகுடத்தில் இருந்து இழிந்த கங்கை, ஜன்மநாசனி, பாபநாசனி, ஞானதயாநி, மோக்ஷ தயாநி என்று ஐந்து திருக்குளங்களில் பொங்கிப் பெருகி நிறைகிறது. வான்மீகருக்குத் தாண்டவ தரிசனமும் கிடைக்கிறது. இத்தகைய புகழ் பெற்று விளங்கும் ஊரே திருவான்மியூர்.



ராயர் கோபுரம் அடித்தளம்

திருவான்மியூர், சென்னை அடையாற்றுக்குக் கிழக்கே மூன்று மைல் தூரத்தில் கடற்கரையில் உள்ள சிறிய ஊர். ஊர் சென்று சேரும் வரை நல்ல ரோடு உண்டு. கோயில் கிழக்குப் பார்க்க இருக்கிறது. ராஜ கோபுரம் இல்லை. ஆனால் ராயகோபுரம் உண்டு. (ராயகோபுரம் என்றால் கட்டமுனைந்து முற்றிலும் கட்டப்படாமல் விட்ட கோபுரத்தின் அடித்தளம் என்று அறிவோம் நாம்—மதுரையிலும் ஸ்ரீரங்கத்திலும் இந்த ராயகோபுரங்கள் உண்டல்லவா!) அந்த ராய

கோபுரத்தின் அடித்தளம் வாயில் மேல்தளம் வரை வளர்ந்து அப்படியே நின்றுகொண்டிருக்கிறது, கோயில் வாசலுக்குக் கொஞ்சம் எட்டியே. இந்தக் கோபுரத்துக்கு வட பக்கத்திலே மிகப் பெரிய தெப்பக் குளம் இருக்கிறது. அதுவே வான்மீகருக்காக எழுந்த பாபநாசினி. ஆனல் நமது பாபங்களைக் கழுவித் துடைக்கப் போதிய தண்ணீர் இருப்பதில்லை அதில். ஆதலால் பாபத்தைக் கழுவக் குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொள்ளமலேயே கோயிலுள் நுழை யலாம்.

கோயிலுள் நுழைந்ததும் நாம் முதலில் காண்பது அம்மை திரிபுரசுந்தரியின் சந்நிதியே. இந்தத் திரிபுர சுந்தரி நல்ல கம்பீரமான தோற்றம் உடையவள். அவளை வலம் வந்து வணங்கிவிட்டுப் பிரதான கோயி லுள் செல்லலாம். மேற்கு நோக்கிப் போகும் நம்மை வரவேற்க, கிழக்கு நோக்கியே இருக்கிருர் தியாகராஜர் நடன மண்டபத்தில். இந்தத் தியாகராஜரே பதினெண் நடனங்கள் ஆடிக் காட்டியவர் வான்மீகருக்கு. வைகாசி மாதத்தில் நடக்கும் உற்சவத்தில் இந்த நடனக் கோலங்களை யெல்லாம் காணலாம் என்கி ருர்கள். இந்தத் தியாகராஜரை வணங்கிய பின் வடக்கே திரும்பி நடந்தால் மகாமண்டபம் வந்து சேரு வோம். அங்கு மேற்கு நோக்கிய சந்நிதியில் இருக்கிருர் மருந்தீசர். வேதங்கள் எல்லாம் வழிபட்டதால் வேதபுரி ஈசுவரர் என்றும், காமதேனுவே பால் சொரிந்து அபிஷேகம் ஆட்டியதால் பால்வண்ண நாதர் என்றும் பெயர் பெற்றிருக்கிருர். லிங்கத் திருவுருவில் இருக்கும் இவர் கொஞ்சம் வடபால் சாய்ந்திருக்கிருர். ஆம் வடநாடிருந்து தென்னடு வந்து தங்கியவர் அல் லவா வான்மீகர். ஆதலால் அவருக்காகக் கொஞ்சம் வடபால் தலைசாய்த்து அழைத்திருக்கிருர் போலும்.

காமதேனு பால் சொரிந்து அபிஷேகம் செய்தபொழுது அதன் குளம்பு வேறேபட்டிருக்கிறது. அதனுல் ஒரு பக்கமாகச் சாய்ந்தாரோ என்னவோ? அந்தக் குளம்பு பட்ட வடு வேறே லிங்கத் திருவுருவில் இருக்கிறது. பால் அபிஷேகம் பண்ணும்பொழுது அந்த வடு தெரிகிறதாம். இந்த லிங்கத் திருவுரு தேவர்கள் பாற்கடலைக் கடைந்தெடுத்த அமிதத்தாலேயே ஆனவராம். அதனுல்தான் அவரை அமுதீசர் என்றும் மருந்தீசர் என்றும் குறிக்கிருர்கள். தேவர் துயர் தீர்க்க எழுந்த மருந்துதானே அமுது. அமுதீசரை வணங்கினுல் நமது துயரும் துடைக்கப்படும்தானே. இதைத் தெரிந்தே பாடுகிருர்கள் சம்பந்தரும் அப்பரும்.

பொன்போலும் சடைமேல்
புனல்தாங்கிய புண்ணியனே!
மின்போலும் புரிநூல்,
விடைஏறிய வேதியனே!
தென்பால் வையமெலாம்
திகழும் திருவான்மிதன்னில்
அன்பா! உன்னையல்லால்
அடையாது எனதுஆதரவே

என்று சம்பந்தர் பாடினுர்.

படங்கொள் பாம்புஅரைப்
பால்மதி சூடியை
வடங்கொள் மென்முலை
மாதுஒரு கூறனைத்
தொடங்க நின்று
தொழுது எழுவார்வினை
மடங்க நின்றிடும்
வான்மியூர் ஈசனே

என்று அப்பர் பாடுகிருர், தன்னுயிர்க்கு உற்ற ஆதரவாக இறைவனைச் சம்பந்தர் நினைந்தால், வினைமடங்க

அவனையே சரண் புகுகிறார் அப்பர். நாமும் நமது வினை மடங்க இந்த மருந்தீசனும் பால் வண்ணனைத் தொழுது திரும்பலாம்.

இக்கோயிலில் செப்புச் சிலை வடிவங்கள் நிறைய இருக்கின்றன. அவைகளில் எல்லாம் நல்ல சிறப் புடையது, சோழர் காலத்தே உருவாகியதென்று கருதப்படுவது, ஆனந்த தாண்டவ நடராஜர்தான். அறுபத்துமூவர் எல்லோருமே இங்கில்லை. ஒரு சிலரே செப்புச் சிலை வடிவில் இங்கிருக்கிறார்கள். எல்லோருமே நல்ல இரும்புக் கிராதிகளுக்குள்ளே அடைபட்டிருக்கும் கைதிகளைப்போல, மலங்க மலங்க விழித்துக் கொண்டி ருக்கிறார்கள். ஆதலால் அவர்களை யெல்லாம் கொஞ்சம் எட்டி இருந்து பார்த்தே திருப்தி அடைய வேண்டியதுதான்.

இக்கோயில் நல்ல சோழர் காலத்துக் கோயில். பின்னர் பல பகுதிகள் புதுப்பிக்கப்பட்டிருக்கின்றன. பல்லவ மன்னர்கள் காலத்திலேயே இந்தக் கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும். என்றாலும், கோயிலின் பெரும் பகுதி சோழர் காலத்தில்தான் கட்டப்பெற்றிருக் கின்றது என்று தெரிகிறது. அம்மன் கோயில் பழைய நிலையிலேயே இருப்பதால் அங்குள்ள கல்வெட்டுக்கள் எல்லாம் அப்படி அப்படியே இருக்கின்றன. அந்தக் கல்வெட்டுக்களிலிருந்து, இக் கோயிலுக்குச் சோழ மன்னர்கள் நிபந்தங்கள் பல ஏற்படுத்தி இருக்கிறார்கள் என்று தெரிகிறது.

கங்கை கொண்ட சோழன் என்னும் ராஜேந்திர சோழனுக்கு இக் கோயிலிடத்து அதிக சிரத்தை என்று அறிகிறோம். அவன் இத்தலத்துக்குப் பலதட்வை வந் திருக்கிறான். நிபந்தங்கள் பல ஏற்படுத்தி இருக்கிறான். திரிபுர சுந்தரிக்குத் திருவிளக்கு ஏற்றவும், பால்வண்ண

னுக்கு மாலை அணிவிக்கவும் அவன் பொன், நெல், ஆடுகளை யெல்லாம் தானம் வழங்கி இருக்கிறான். அந்திம காலத்தில் அவன் தன் நோய் நீக்கம் விரும்பி இங்கு வந்து மருந்தீசரை வணங்கியிருக்கிறான். இவன் தன் கால்வழியினனான முதல் ராஜாதிராஜனும், இரண்டாம் ராஜேந்திரனும் ராஜேந்திரனைப் பின்பற்றிப் பல நிபந்தங்கள் ஏற்படுத்தி யிருப்பதாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

சோழ மன்னர்களுக்குப் பின் விஜயநகர மன்னர்களும் இக் கோயிலை நன்கு பரிபாலித்திருக்கின்றனர். இரண்டாம் தேவராயன் காலத்தே அருணகிரிநாதர் இங்கு வந்து இத்தலத்தில் உள்ள முருகனைத் திருப்புகழ் பாடிப் பரவியிருக்கிறார். பதினாறும் நூற்றாண்டில் நாயக்க மன்னர்களின் மதி மந்திரியாக இருந்த அப்பைய தீக்ஷிதரும் இத்தலத்துக்கு வந்திருக்கிறார், இவரது சிலை கூடக் கோவிலில் இருக்கிறது.

இவ்வளவு சொல்கிறீரே — இந்த வான்மியூரில் வான்மீகருக்கு ஒரு கோயில் இல்லையா என்று நீங்கள் கேட்பீர்கள். இருக்கிறது ஐயா இருக்கிறது. ஆனால் அந்த வான்மீகர் ஆலயம் ஊருக்கு வடமேற்கே ஓர் ஒதுக்குப் புறத்தில் இருக்கிறது. ஆனால் அவரது உற்சவ விக்கிரஹம் மருந்தீசர் கோயிலிலேயே இருக்கிறது. வான்மீகியை வணங்கித் திரும்பும்போது அவர் அளித்த காவியம் நினைவுக்கு வரும். அக்காவியத்தின் சாரத்தை யெல்லாம் வாரி வழங்கிய கவிச்சக்கரவர்த்தி கம்பனுமே ஞாபகத்துக்கு வருவான் அல்லவா ?



# 22

# போரூர் முருகப் பெருமான்

ஒருமையுடன் நினது திரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்!
உள்ளொன்று வைத்துப் புறம்பு ஒன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்;
பெருமை பெறு நினது புகழ் பேசவேண்டும்;
பொய்ம்மை பேசாது இருக்க வேண்டும்;
பெருநெறி பிடித்து ஒழுக வேண்டும்;
மதமானபேய் பிடியாதிருக்க வேண்டும்.

என்றெல்லாம் விண்ணப்பித்துக் கொள்கிறார் ராமலிகங் அடிகள். யாரிடம் இப்படி விண்ணப்பித்துக் கொள்கிறார் என்றால், அந்தக் கந்த கோட்டத்துக்குள் இருக்கும் கந்தவேளிடம்தான். கந்தகோட்டம் என்றால் பல ருக்குத் தெரியாமல் இருக்கலாம். சென்னை பூக்கடை கந்தசாமி கோயில் என்றால் எல்லோருக்கும் தெரியும். எவ்வளவோ 'கச்சவடம்' நடக்கும் இடத்திலே கோயில் அமைந்திருந்தாலும், ராமலிங்கர் அந்தச் சென்னையை, அச் சென்னையிலுள்ள கோயிலை 'தரும மிகு சென்னை' என்றும், 'கந்தக்கோட்டத்துள் வளர் தவம் ஓங்கும் கந்தவேள்' என்றுமே குறிப்பிடுவார்.

இந்தக் கந்தவேளிடம் அவர் விண்ணப்பித்து வேண்டிக் கொள்ளும் வேண்டுகோள்களோ அனந்தம். அத்தனை வேண்டுதல்களையும் இக் கோயிலுக்குச் செல்லும் அன்பர்கள் (டிரவுசர் கோட்டோடு, குல்லாவும் அணிந்தே செல்லும் அன்பர்கள்தான்) இன்றும் வேண்டிக் கொண்டே செல்கிறார்கள். கோயில் புராதனமான கோயில் இல்லை என்றாலும் பிரபலமான கோயில். அங்குள்ள மூர்த்திகள் எல்லாம் சின்னஞ்சிறு வடிவங்கள் தான். கோயிலுள் ஒரு மாடத்தில் ராமலிங்கரையுமே பிரதிஷ்டை பண்ணியிருக்கிறார்கள்.

இக் கோயிலைவிடச் சென்னையில் இன்று பிரபலமாயிருப்பது வடபழனி ஆண்டவர் கோயில்தான். பூக்கடை கந்தசாமி கோயில் ஏதோ இருநூறு வருஷங்களுக்குள் உருவான கோயில்தான் என்றால், சமீபத்தில் இருபத்தைந்து வருஷ காலத்துக்குள்ளேயே உருவான கோயில் கோடம்பாக்கம் வடபழனி ஆண்டவர் கோயில். 'பால் மணக்குது பழம் மணக்குது பழனி மலையிலே' என்று பாடி, காவடி தூக்கி ஆடியவனே, 'தேன் மணக்குது, தினை மணக்குது தென் பழனியிலே' என்று பாடி இருக்கிறான். உடனே அந்தப் பழைய பழனியில் உள்ளவனைத் தென்பழனி ஆண்டவன் ஆக்கி, புதிதாக உருவாக்கிய முருகனை இந்தப் பட்டினத்துக்காரர்கள் வடபழனி ஆண்டவனாக ஆக்கி இருக்கிறார்கள். அண்ணாசாமி நாயக்கர் என்ற ஒரு பக்தர், திருத்தணிகை முருகனிடத்தும் பழனி ஆண்டவனிடத்தும் ஆருத காதல் உடையவர். அவர் பழனி சென்றிருந்தபோது, பழனி ஆண்டவர் படம் ஒன்று வாங்கி வந்து அதை பூஜை செய்து வந்திருக்கிறார். பூஜை முடிந்ததும் அவருக்கு ஆவேசம் வருவதுண்டாம். அப்போது அவர் என்ன சொன்னாலும் அது அப்படியே நடக்க ஆரம்பித்திருக்கிறது. இந்த நிலையில் பிரபல

வியாபாரியான இரத்தினவேல் செட்டியார் இவருடைய சிஷ்யர் ஆகியிருக்கிருர். அவரும் துறவு பூண்டு, அண்ணுசாமி நாயக்கருடன் சேர்ந்து வழிபட்டிருக் கிருர். அவர் மிகக் குறைந்த முப்பத்தைந்து ரூபாய் செலவிலே ஒரு சிற்பியைக் கொண்டு பழனி ஆண்டவர் திரு உரு ஒன்றைச் செய்து வைத்திருக்கிருர். இந்த ஆண்டவருக்குக் கோயில் கட்ட இன்னெரு அன்பர் வரவேண்டி இருந்திருக்கிறது. பாக்கியலிங்கத் தம்பிரான் என்பவரே கோயில் திருப்பணியை ஆரம்பித்துச் செய்து முடித்திருக்கிருர். இப்படி மூவரால் உருவாக்கப் பட்ட கோயிலே இன்று பிரபலமாக இருக்கும் வடபழனி ஆண்டவர் கோயில். அந்தக் கோயிலில் மூலமூர்த்தி யாக இருப்பவர் அந்தத் தென்பழனியில் உள்ளவரைப் போல, மெலிந்து தேய்ந்தவர் அல்ல. நல்ல திடசரீரி. அதோடு நிற்கும் 'ஸ்டைலும்' மிக்க அழகு. இவரையே,

கண்டார்தம் மனம் கவரும் முண்டிதமாம்
சிரத்து அழகும், காணக் காணக்
கொண்டாடத்தக்க திரு நீற்று அழகும்,
கண்டிகையின் கோலச் சீரும்
பண்டாய நான்மறைக் கோவணச் சீரும்
கொண்டு வடபழனி மேவும்
தண்டாயுதப் பெருமான்

என்று தணிகை மணி செங்கல்வராய பிள்ளே அவர்கள் பாடி இருக்கிருர்கள். சென்னேயில் உள்ளவர்களும் சென்னேக்குச் செல்பவர்களும் அவகாசம் கிடைக்கும் போதெல்லாம் பூக்கடைக் கந்தசாமி கோயிலுக்கும், கோடம்பாக்கம் வடபழனி ஆண்டவர் கோயிலுக்கும் சென்று முருகனே வணங்கலாம். , வந்தித்து வாழ்வு பெறலாம்.

இன்று நான் உங்களே அழைத்துச் செல்ல விரும்பு வது சென்னேக்கு அணித்தேயுள்ள மற்ருெரு பிரபல

மான முருகன் கோயிலுக்கே. அந்தக் கோயில்தான் திருப்போரூர் கோயில். சென்னையிலிருந்து மகாபலிபுரம் என்று வழங்கும் மாமல்லபுரம் செல்லும் வழியில் முப்பத்து ஆறுமைல் தூரத்தில் உள்ள சிறிய ஊர் அது. இன்று அங்குள்ள கோயிலும் குளமும் முந்நூறு வருஷங்களுக்குள் உருவானவைதான். என்றாலும் அந்த இடத்தில் ஒரு பழைய முருகன் கோயில் இருந்திருக்க வேணும். பல்லவ மன்னர்கள் காலத்திலேயே இந்தக் கோயில் எழுந்ததாக வரலாறு. பதின்மூன்றாவது நூற்றாண்டில் பதிவு செய்யப்பட்ட கல்வெட்டில், இவ்வூர் தொண்டை நாட்டில் ஆமூர் கோட்டத்தில் உள்ள ஜெயங்கொண்ட சோழ மண்டலம் என்று குறித்திருக்கிறது. விக்கிரம சோழன் ஏற்படுத்திய நிபந்தங்களையும், விஜய கண்டதேவர் நந்தா விளக்குக்காகப் பொன் கொடுத்ததையும் அறிவிக்கும் கல்வெட்டுகள் எல்லாம் இங்குள்ள தெய்வயானையார் கோயில் சுவர்களில் சிதைந்து காணப்படுகின்றன. இவைகளே இக்கோயில் புராதனமானது என்பதற்குச் சான்றுகள். இந்த ஊருக்கு அந்த நாளிலே சமரபுரி என்ற பெயரும் இருந்திருக்கிறது. இந்தக் கோயிலைவிட இங்குள்ள முருகனைப் பற்றிச் சிதம்பர சுவாமிகள் பாடிய 'திருப்போரூர் சந்நிதி முறை' என்ற பிரபந்தம் சிறந்த இலக்கியப் பிரசித்தி உடையது. இந்தக் கோயில் திருப்பணி பண்ணியவரும் அவரே.

மதுரையில் சங்கப் புலவர் மரபிலே தோன்றியவர் சிதம்பர சுவாமிகள். இளமையிலேயே சிவானுபூதிச் செல்வராக வளர்ந்திருக்கிறார். விருத்தாச்சலத்திலே இருந்த குமர தேவரை அடுத்து அவரைக் குருவாகப் பெற்றிருக்கிறார். குமரதேவரோ, பேரூர் சாத்தலிங்க சுவாமிகளின் சிஷ்யர். இப்படி சாத்த லிங்கரது அருளும் குமரதேவரது ஆசியும் பெற்று விருத்தாச்சலத்திலே

சமாதி நிலையிலே இருந்தபோது வேலனுடைய மயில் ஆடும் காட்சியைக் கண்டிருக்கிறார். குருநாதரது கட்ட ளைப்படியே சமரபுரிக்கு வந்து ஒரு பனை மரத்தடியிலே புதைந்து கிடந்த முருகனையும் தேவியாரையும் வெளிக் கொணர்ந்து வணங்கியிருக்கிறார். நோய் தவிர்த்தல் முதலிய அற்புதங்களை இந்தச் சிதம்பர சுவாமிகள் செய்ய, அதனால் பக்த கோஷ்டிகள் பெருகியிருக்கிறார் கள். திண்டிவனத்தை அடுத்த கிளியனூரிலிருந்து ஒரு அம்மையார், தாம் அரும்பாடுபட்டுத் தேடிய பொன் ஒன்றைச் சமர்ப்பிக்க அதோடு சென்னை பாளை யத்தா செட்டியார் என்பவர் கொண்டுவந்து கொடுத்த இரண்டு பை வராகன்களையும் வைத்துக்கொண்டு திருப்பணி ஆரம்பித்துக் கோயிலைச் சிறப்பாகக் கட்டி முடித்திருக்கிறார். திருக்குளம் வெட்டியிருக்கிறார், உற்ச வாதிகள் நடத்த வேண்டிய ஏற்பாடுகளையும் செய் திருக்கிறார். அன்று, பரம்பரை பரம்பரையாக நாட்டை ஆண்ட அரச பெருமக்கள் செய்த சீரிய பணியையே, முருகன் அருள் கொண்டு ஓர் ஏழைத் துறவி சிறப்பா கச் செய்திருக்கிறார் என்றால் அது வியப்புக்கு உரியது தானே.

இந்தக் கோயிலுக்குள் செல்லுமுன் பக்கத்திலே மலைமேல் உள்ள கைலாச நாதரையும் அவர் துணைவி பாலாம்பிகையையும் தரிசிக்கலாம். அம் மலை ஏறுமுன் வேம்படி விநாயகர் வேறே வழியை மறிப்பார். இவர்களை யெல்லாம் வணங்கிய பின்பே முருகனைத் தரிசிக்கப் போகவேணும். மூர்த்தி கிழக்கு நோக்கி யிருந்தாலும் பிரதான வாயில் தெற்கு நோக்கியே இருக்கிறது. இந்த வாயிலைக் கடந்து வெளிப்பிரகாரத்தில் உள்ள கோபுர வாயிலையும் கடந்தே முருகன் சந்நிதிக்குச் செல்ல வேணும். மூலமூர்த்தி பனையடியில் புதைந்திருக்கிறார். ஆதலால் புற்றிடங் கொண்ட அந்தப்,பெருமானுக்கும்


பிரணவம் உபதேசிக்கும் முருகன்

அவன் துணைவி யாருக்கும் புனுகு சட்டமே சாத்தி அலங்கரிக்கின்றனர். அபிஷேகம் கிடையாது. உருவங்களும் மொழு மொழு வென்றே இருக்கும். இந்த மூல மூர்த்திகளுக்கு முன்னால் மிகச் சிறிய உருவிலே வள்ளி தெய்வயானை சமேதனாகக் கந்தனை உருவாக்கி நிறுத்தியிருக்கிறார்கள். இந்தக் கந்தன் கரங்களிலே உடம்பிடி, குலிசை முதலிய ஆயுதங்கள் இல்லை. தூக்கிய திருக்கரங்களிலே ஜபமாலையும் கமண்டலமுமே காணப்படுகின்றன. இங்குள்ள முருகன், பிரணவப் பொருள் அறியாத பிரமனைச் சிறையில் அடைத்தப் பின் தானே சிருஷ்டித் தொழிலை மேற்கொண்டிருக்கிறான். அந்த நிலை உருவாகி இருக்கிறது இங்கே. வள்ளியையும், தெய்வயானையையும் உடன் வைத்துக் கொண்ட பெருமான் இவர் என்றாலும் அவர்களுக்குத்

தனித்தனி சந்நிதி வேறே அமைத்துக் கொடுத்திருக் கிருர். இக் கோயிலில் இருபத்து நாலு தூண்களோடு கூடிய ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. ஒவ்வொரு தூணிலும் ஒரு கையில் கேடயமும் ஒரு கையில் வாளும் உடைய நவ வீரர் முதலியோரது உருவங்கள் உண்டு. இது போர் ஊர் அல்லவா? சூரபதுமனின் துணைவர்களான அசுரர்கள் போருக்கு எழுந்தபோது அவர்களை இங்குதான் சமர் புரிந்து வென்ருர் என்பது தானே வரலாறு. ஆகையால் சமரபுரி முருகன் சந்நிதி யில் இவ் வீரர்களை யெல்லாம் உருவாக்கி நிறுத்தியிருப் பது பொருத்தம் தான்.

இப்படியெல்லாம் சிதம்பரசுவாமிகள் கட்டிய கோயிலைவிட அவர் எழுநூற்று இருபத்தாறு பாடல் களால் பாடிப் பரவி முருகனை வணங்கியிருக்கும் திருப் போரூர் சந்நிதி முறை சிறப்பானது. பிள்ளைத் தமிழ், அலங்காரம், தாலாட்டு, திருப்பள்ளி எழுச்சி, கட்டியம் என்றெல்லாம் அந்தப் பாடல்கள் விரிந்திருக்கின்றன. 'ஏதுபிழை செய்தாலும் ஏழையேனுக்கு இரங்கித் தீது புரியாத தெய்வமே!' என்று போரூர் முருகனைக் கூவி அழைப்பார் ஒருதரம், பின்னர்.

> நோயில்த் தளராமல் தொந்து மனம் வாடாமல்
> பாயில் கிடவாமல் பாவியேன்—காயத்தை
> ஓர்நொடிக்குள் நீக்கி எனை ஒண்போரூர் ஐயா! நின்
> சீரடிக் கீழ் வைப்பாய் தெரிந்து.

என்று அவரிடமே வேண்டுவார். அவர் பாடிய பாடல் களைப் படிப்பவர்கள் பக்தி பரவசம் அடைவது கண் கூடு. 'குஞ்சரமுகற்கு இளைய கோவே! கொஞ்சி உமை முத்தமிடு பூவே!' என்று அவர் கொஞ்சும் தமிழில் முருகனை வர்ணிப்பதில்தான் எத்தனை அழகு. அவகாசமும் ஆர்வமும் உடையவர்கள் சந்நிதி முறைப்

பாடல்களை யெல்லாம் பாடிப் பாடி மகிழலாம்; பாராய ணமே பண்ணலாம்.

நீண்ட புராண வரலாறோ அல்லது பழைய சரித் திரப் பிரசித்தியோ இல்லாத இந்தத் தலத்தை இந்த வரிசையில் சேர்ப்பதற்கு முக்கிய காரணம் ஒன்று. இன்று அங்குள்ள கோயில் அவ்வளவு பழைய கோயில்



நவவீரர் மண்டபம்

அல்ல தான் என்றாலும், அக் கோயிலுக்குள் இரண்டு பழைய செப்புச் சிலை உருவங்கள் இருக்கின்றன. ஒன்று போர்க்கோலத்தில் வில்லேந்தி நிற்கும் வேலன். மற் றொன்று குருவாய் சிவனுக்கு உபதேசம் செய்த குகன். இரண்டுமே கலை அன்பர்கள் சென்று காணவேண்டிய திருஉருவங்கள். தேவசேனாபதியான கார்த்திகேயன் வில்லேந்திப் போருக்குப் புறப்பட்ட நிலையைக் கல்லுரு விலே திருவையாற்றிலும், திருவண்ணாமலை கம்பத்து இளையனார் கோயிலிலும் பார்க்கிறோம். அதோடு செப்புச் சிலை வடிவில், திருவெண்காட்டை அடுத்த

சாய்க்காடு என்னும் சாயாவனேசுவரர் கோயிலிலும் காண்கிறோம். அவைகளில் எல்லாம் இல்லாத கம்பீரம் இப்போரூரில் உள்ள சிலை வடிவில் இருக்கிறது. ஒரு காலைத் தரையிலும் மற்றொரு காலை மயிலின் முதுகிலும் ஊன்றி உடலை வளைத்து நிற்பதில், சேனாபதியின் மிடுக்குத் தெரிகிறது. சக்திவேல் தாங்கிய ஒரு கரம் போக மற்றொரு வலக்கரம் மயிலின் கழுத்தையே வளைந்துநிற்கிறது. இடக் கையை வில்லேந்தும் பாணி யில் தலைக்கு மேலேயே உயர்த்தி யிருப்பது மிக்க எடுப்பாக இருக்கிறது. வில்லென்று ஒன்று இல்லாம லேயே, முகத்திலே ஓர் உக்கிரம், நெஞ்சிலே ஒரு பதக்கம், அரையிலே ஒரு சல்லடம் எல்லாம் உடைய அவன் 'வானோர் வணங்கும் வில்தானைத் தலைவன்' என்பதை நன்கு எடுத்துக் காட்டுகிறது. வில்லேந்திய வேலனது திருவுருவங்களில் எல்லாம் சிறந்த திரு உரு இதுவே. அது சமரபுரியில் இருப்பதும் விசேஷமே.

அடுத்த வடிவமும் அழகானது. சின்னஞ் சிறு பாலன், ஆனாலும் பிரணவத்தின் பொருள் தெரி யாது விழித்த பிரமனைக் குட்டிச்சிறை இருத்திவிட்டுத் தன் தந்தையாம் இறைவனுக்கே பிரணவப் பொருளை விளக்கும் நிலையில் குரு மூர்த்தமாக எழுந்தருளும் கோலம் அல்லவா அது! இந்த நிலையைச் சுதை உரு விலே சுவாமி மலையிலே செய்து வைத்திருக்கிறார்கள். அங்கு மைந்தனாய குமரன் முகத்திலே பால் வடிகிறதே ஒழிய குருவாயிருப்பதிலே உள்ள மிடுக்கு இல்லை. ஆனால் இங்குள்ள மூர்த்தி தாமரைத் தவசில் இருந் தாலும் மடக்கிய கால் மேலே கையை நீட்டி, உபதேச முறையில் ஒரு கையை உயர்த்தி அபயம் அருளும் நிலையில் இருக்கிறது. இதைவிடச் சிறப்பாகச் சீடனாக இருக்கும் சிவபிரான், கை கட்டி வாய் பொத்தி மகன் செய்யும் உபதேசமே என்றாலும் அதைப் பவ்வியமாகக்

கேட்கும் நிலையையும் நன்றாக உருவாக்கி யிருக்கிறான் சிற்பி. 'இரு என இருந்து, சொல் எனச் சொல்லி, பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகி, சித்திரப்பாவை யின் அத்தக அடங்கி, செவி வாயாக, நெஞ்சுகளனாகக் கேட்டவை கேட்டவை விடாது உளத்து அமைக்கும்' சீடனின் நிலையை, நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவர் சொல்கிறார். அவர் சொல்லும் இலக்கணத் துக்கு இலக்கியமாய் அமைந்த சீடனாக இறைவன் இருப்பது பார்த்துப் பார்த்து அனுபவிக்கத் தக்கது. இந்த இரண்டு வடிவங்களையுமே பார்க்கிறீர்கள் இங்கே. இவை எக்காலத்தன என்று சொல்ல இயல வில்லை. சோழர் காலத்து விக்கிரகமாக இருக்கலாம். இத்தலத்தில் முருகனைக் கண்டு வணங்கித் திரும்பும் போது, இத்தகைய அரிய சிற்ப வடிவங்களை உருவாக்கிய தமிழகத்துச் சிற்பிகளுக்குமே வணக்கம் செய்து திரும்பலாம் தானே.



23

# மாமல்லைத் தல சயனர்

துவாபர யுகத்திலே ஓர் அரசன். அரக்கர் இனத்தைச் சேர்ந்தவன் என்ருலும் நல்ல இதயம் படைத்திருந்தான். மக்களையெல்லாம் நீதி தவருது ஆண்டு வந்தான். ஆனல், மூன்றுலகையும் அடிமை கொண்டு திரிலோகத்துக்குமே ஏக சக்ராபதியாக வாழ்ந்து வந்தான். ஆதலால் அவனை வீழ்த்த வேண் டினர் தேவர்கள் நாராயணனிடம். நாராயணனிடத்து இந்த அரசனுக்கு அளவிடற்கரிய அன்பு. ஆதலால் நாராயணனும் அதனை ஆட்கொள்ள நாளும் கிழமையும் எதிர்நோக்கி இருந்தார். அரசன் ராஜசூய யாகம் ஒன்றைச் சிறப்பாக நடத்தினன். யார் எதைக் கேட் டாலும் கொடுக்கிறேன் என்று கங்கணம் கொண்டு செய்யும் யாகம் அது. அந்த யாகசாலைக்கு ஒரு குள்ள வேதியன் வருகிருன். அரசனிடம் மூன்றடி மண் யாசித்துப் பெறுகிருன். அரசனின் குலகுருவாம் சுக்கி ராச்சாரியார் தானம் கொடுக்காதே என்று தடுக்கிருர். அதையும் மீறியே கேட்ட தானத்தைக் கொடுத்து விடுகிருன் அரசன். உடனே குள்ளனுக வந்த

வேதியன் விசுவரூபம் எடுக்கிருன். விண்ணுக்கும் மண்ணுக்கும் வளர்ந்து திரிவிக்கிரமனுக உயர்கிருன். ஒரு தாளால் வானம் முழுவதையும் மற்ருெரு தாளால் இந்தப் பூவுலகம் முழுவதையுமே அளந்து விடுகிருன். மூன்ருவது அடிக்கு இடம் எங்கே என்று கேட்டபோது பரமபக்தனுன அரசன் தன் தலையையே தாழ்த்திக் கொடுக்கிருன். அவன் தலையில் கால் வைத்து அவனைப் பாதாளத்துள் அமிழ்த்துகிறபோது அவன் வேண்டிக் கொள்கிருன், அவன் இருந்து அரசாண்ட இடம் அன்று முதல் அவன் பெயராலேயே வழங்க வேண்டுமென்று. பக்தன் விருப்பத்தை நிறைவேற்றுகிருன் பரந்தாமனும். ஆதலால்தான்-அந்த அரசனுன மகாபலியின் பெயரா லேயே இந்த ஊர் மகாபலிபுரம் என்று பெயர் பெற்றிருக் கிறது.

இப்படி ஒரு வியாக்கியானம் மகாபலிபுரத்துக்கு. இந்த வியாக்கியானம் சொல்பவர்கள், கால் ஆங்கில மும் அரைக்கால் இந்தியும் அரைத்தமிழும் பேசும் அங் குள்ள வழிகாட்டிகள் (Guides). இதோடு விடுவார் களா? அங்குள்ள கல் ரதங்களைக் காட்டி, இங்கு பஞ்ச பாண்டவர்கள், பாரத யுத்தம் முடிந்த பின் ரதங்களில் வந்திருக்கிருர்கள். அவர்களது அஸ்தினுபுரத்திலே ரதங்களையெல்லாம் நிறுத்த இடம் இல்லை என்று கண்டு இங்கேயே நிறுத்திவிட்டுப் புஷ்பக விமானத்தில் ஏறி ஊர் சென்றிருக்கிருர்கள். அவர்கள் நிறுத்திப்போன ரதங்கள்தான் இந்தப் பஞ்சபாண்டவ ரதங்கள் என்பார்கள். மேலும், இது 'ஹஸ்பென்ட் எலிபென்ட்' இது 'ஒய்ப் எலிபென்ட்', இது 'சன் எலிபென்ட்' என்றெல்லாம் விளக்கம் தருவார்கள். இவர்கள் சொல்லும் அத் தனையும் உண்மை அல்ல. சுத்த 'கப்ஸா' என்று சரித்திரம் படித்தவர்கள் நன்கு அறிவார்கள்.

பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் ஒரு பெரிய சித்தி ரக்காரப் புலி. சிற்பக்கலையில் அளவில்லாத காதல் உடையவன். அவன் மகன் நரசிம்மவர்மனே தந்தை யையும் மிஞ்சிய ஆர்வம் உடையவன் சிற்பிகளை ஆத ரிப்பதிலே. மலைகளைக் குடைந்து குடைந்து குடை வரைக் கோயில்களை உருவாக்கிக்கொண்டிருந்தான் மகேந்திரன் என்றால், மலைகளையே வெட்டிச் செதுக்கிக் கோயில்கள், விஹாரங்கள், ரதங்கள் எல்லாவற்றையும் நிர்மாணித்துக் கொண்டிருந்தான் நரசிம்மன். அவன் உருவாக்கி இருக்கிறான், ஓர் அரிய சிற்பக்கலைக் கூடத்தை. சிற்பக்கலை விற்பன்னனான நரசிம்மன், நல்ல மல்லனும் கூட. பெரிய பெரிய மல்லர்களை யெல்லாம் யுத்தத்தில் வீழ்த்தியவன் ஆனதினாலே 'மாமல்லன்' என்ற விருதுப் பெயரும் பெறுகிறான். இந்த மாமல்லன் ஆதரவில் உருவாகிய சிற்பக் கூடத்தையே அன்று அதை உருவாக்கிய சிற்பிகள் "மாமல்லபுரம்" என்று அழைத்திருக்கிறார்கள். இந்த மாமல்ல புரத்தையே, திருமங்கை மன்னர் 'கடல் மல்லை' என்று பாடி யிருக் கிறார். மல்லபுரம் மல்லை ஆனது வியப்பில்லை. ஆனால் மகாபலிபுரம் என்றே ஆகிவிட்டதே, அதுதான் வியப் புக்குரியது. இதைவிட வியப்புக்குரியது, இத்தனை விவரமும் தெரிந்த இந்த நாளிலே லக்ஷக்கணக்கான பணத்தைச் செலவு செய்து விருந்தினர் விடுதி கட்டும் சர்க்கார்கூட அந்த மகாபலியை விடாப்பிடியாய்ப் பிடித்துக் கொண்டு 'மகாபலிபுரம் விருந்தினர் விடுதி' என்று பெயர் வைத்திருப்பதுதான். போகட்டும், மகா பலியின் பெயராலேயாவது மகாமல்லனது புகழ் நின்று நிலவினால் சரிதான்.

இன்று இப்பிரசித்தி பெற்ற மாமல்லபுரத்துக்கே போகலாம். இங்குள்ள கற்பாறைகள் சொல்லும் கதை களையும் அவை விரிக்கும் கலைச் செல்வங்களையும்

பற்றித் தெரிவதற்கு முன்பு, இங்குள்ள பிரதான கோயிலையும் அங்கு கோயில் கொண்டிருக்கும் தல சயனரையும் பற்றிக் கொஞ்சம் தெரிந்துகொள்ளலாம். மகாவிஷ்ணு நிற்பார், இருப்பார், கிடப்பார் என்பதை அறிவோம். இதில் அவரது சயனத் திருக்கோலமே நிரம்பவும் வசீகரமானது. கிட்டத்தட்ட இருபத்து ஏழு தலங்களில் அவர் சயனித்திருக்கிறார். அந்தச் சயன யத்தில் தான் எத்தனை எத்தனை வகை. இருபதுக்கு மேற்பட்ட இடங்களிலே அவர் சயனித்திருப்பது ஆதி சேஷன் பேரிலேதான். இதனையே புஜங்க சயனம் என்பர். மற்றவையெல்லாம் உத்தியோக சயனம், தர்ப்ப சயனம், போக சயனம், மாணிக்க சயனம், வட பத்ர சயனம், வீரசயனம் என்பனவாம். இதையெல் லாம் விட்டுவிட்டு ஓரிடத்திலே தரையிலேயே படுத் துக்கொள்கிறார். அதனைத் தலசயனம் என்றே சொல் கிறார்கள். அப்படி, படுக்கப் பாயோ, தலைக்கு அணையோ இல்லாமல் சும்மா தரையிலே கிடக்கிறவர் தான் தலசயனப் பெருமாள். அப்படிக் கிடக்கும் இடம் தான் மாமல்லபுரம், இவரையே திருமங்கை ஆழ்வார் கடல் மல்லைத் தலசயனர் என்று அழைக்கிறார்.

ஞானத்தின் உருவாகி,
நிலமங்கை எழில் கொண்டான்,
வானத்தில் அவர் முறையால்
மகிழ்ந்து ஏத்தி வலங்கொள்ள,
கானத்தின் கடல் மல்லைத்
தலசயனத்து உறைகின்ற
ஞானத்தின் ஒளி உருவை
நினைவார் என்நாயகரே,

என்று பாடியும் மகிழ்கின்றார்.

இங்கு எப்படி இவர் தரையிலேயே படுக்கும்படி நேர்ந்தது என்று தெரிய வேண்டாமா? அதற்குப்

பிரும்மாண்ட புராணத்தையே ஒரு திருப்புத் திருப்ப வேணும். புண்டரீகர் என்று ஒரு மகரிஷி. அவர் மகாவிஷ்ணுவிடம் அத்தியந்த பக்தி உடையவர். தினம் தாமரை மலர் கொண்டே அர்ச்சித்து வழிபடு பவர். அவர் தலம் தலமாகச் செல்லும்போது திருவிட வெந்தை வந்து அங்குள்ள வராகப் பெருமாளை வணங்குகிருர். அங்குள்ள தடாகத்தில் ஆயிரம் இதழ்கள் உள்ள ஓர் அரிய தாமரை மலர் கிடைக்கிறது அவருக்கு. அதனைப் பரந்த கடலில் உள்ள பரந்தாமர் திருவடியில் சேர்க்க அவரது உள்ளுணர்வு கூறியது. பாற்கடல் செல்வதற்குமுன், இடையே உள்ள கருங் கடலைக் கடக்க வேண்டியிருக்கிறது. இதனை எப்படிக் கடப்பது ? அதற்காக அக்கடற்கரையிலே ஒரு கொண் டம் கட்டுகிருர். அந்தக் கொண்டத்துக்கு அப்புறம் கடல் தண்ணீரையெல்லாம் இறைத்துக் கொட்டிக் கடலை வற்ற அடித்து விட்டால், பாற்கடல் செல்வது எளிதாக இருக்குமே என நினைக்கிருர். இது முடிகிற காரியமா என்றுகூட எண்ணவில்லை. வேலையைத் துவங்கி விடுகிருர். மலர் வாடுவதற்குள் கடல் நீரை வற்ற வைக்க வேண்டுமே என்று துரிதமாகவே வேலை நடக்கிறது. இவர் எடுத்துக் கொள்ளும் சிரமத்தைக் கண்டு பரந்தாமனே ஒரு வயோதிகர் வடிவில் வந்து, 'நானும் உமக்குத் துணை செய்யட்டுமா?' என்கிருர். அதற்குக் கூலியாகக் கொஞ்சம் உணவும் தண்ணீரும் கேட்கிருர். புண்டரீகர் அதற்கு ஒத்துக்கொண்டு அவருக்கு உணவு கொண்டுவர ஊருக்குள் செல்கிருர். திரும்பி வந்து பார்த்தால் வயோதிகர் சங்கு சக்ரதாரி யாய், புண்டரீகர் கட்டிய கொண்டத்திலேயே படுத்துக் கொண்டிருக்கிருர். கடல் நீர் வற்றியிருக்கிறது. பாற்கடலுக்கு வழி நேரே திறந்திருக்கிறது. புண்டரீகரை வழிமறித்துத் தரிசனம் கொடுக்கவே, பரந்தாமன் இந்தத்

தலசயனனுக எழுந்தருளியிருக்கிருர். அன்று புண்டரீக மகரிஷி வேண்டிக் கொண்டபடி என்றுமே தரையில் கிடக்கும் தலசயனனுகவே மக்களுக்குச் சேவை சாதிக் கிருர். இவர் வெறும் தலசயனன் மட்டும் அல்ல, ஜல சயனரும் கூடத்தான். தலசயனர் கோயில் கொண் டிருப்பது மாமல்லபுரம் ஊரில் உள்ள கோயிலில் என் ருல் ஜலசயனர் கோயிலில் கொண்டிருப்பது கடற் கரைக் கோயிலிலே. இருவரையும் சேர்த்தே இருபத் தேழு பாசுரங்களில் மங்களா சாஸனம் செய்திருக் கின்ருர் மங்கை மன்னன்.



புஜங்க சயனர்

மகாபலிபுரத்திற்குச் சென்னையிலிருந்தும் செல்ல லாம்; செங்கல்பட்டிலிருந்தும் செல்லலாம். கார் வசதி யில்லாதவர்கள் பஸ்ஸில் ஏறித்தான் செல்லவேண்டும். எப்படிச் சென்ருலும் செல்கின்றவர்களைத் தலசயனப் பெருமாளை வலம்வரச் செய்து, அவர் கோயிலுக்கு இடப்பக்கம் இருக்கும் காலி மனையில் இறக்கி விட்டு

விடுவார்கள். கொஞ்சம் பக்தி உடையவர்கள் என்ருல் முதலில் தலசயனர் கோவிலுள் நுழைந்து, தலசயன ரைத் தரிசித்துவிட்டு வெளியே வரலாம். இல்லை நமக் கும் பக்திக்கும் வெகு தூரம்; நமக்கும் கலைக்குமே நெருங்கிய தொடர்பு என்று பெருமைப்பட்டுக் கொள்கி றவர்கள் எல்லாம் அப்படியே மேற்கு நோக்கி நடக்கவே புறப்பட்டு விடலாம். உண்மைதான்; தலசயனர் கோயில் உள்ளே தலசயனரைத் தவிர பார்க்க வேண் டிய சிற்ப வடிவங்கள் அதிகம் இல்லை. இருக்கின்ற ஒரு சில ஆழ்வார்களின் வடிவங்கள் பேரில் இருக்கும் எண்ணெய்க் கசடு எல்லாம் எத்தனையோ வருஷ காலத்தவை. ஆதலால் எல்லாம் மொழுமொழு வென்றே இருக்கும். அதனுல் விரைவாகவே கோயி லுக்கு வெளியே உள்ள கலைச் செல்வங்களைக் காண்பதி லேயே அக்கரை காட்டலாம்.

இப்படி நமது பிரயாணத்தைத் துவங்கும்போது நாம் முதலில் காண்பது கிருஷ்ண மண்டபத்தையே. அங்குதான் கண்ணன் கோவர்த்தன கிரியைக் குடை யாகப் பிடித்துக் கோக்களையும் கோவலர்களையும் காத் துக் கொண்டு நிற்கிருன். அங்குள்ள கண்ணன் அப்படி ஒன்றும் சின்னப் பையன் இல்லை. எட்டடிக்கு மேலே வளர்ந்த ஆஜானுபாகு. அவனையும் மற்றவர்களையும் பார்க்கிறபோதே அங்கு பால் கறக்கும் கோபாலனையும் பார்க்கிருேம். அந்தக் கோபாலன் இன்றையக் காலத் தியவன். நாம் படம் பிடிக்கிருேம் என்று தெரிந்து நம்மைத் திரும்பிப் பார்த்து ஒரு நல்ல 'போஸ்' வேறே கொடுக்கிருன். பெரியதொரு பாறையிலே வெட்டிச் செதுக்கிய அற்புதச் சிற்பம். பின்னுல் யாரோ மண்டபம் எல்லாம் கட்டி நாமெல்லாம் நின்று பார்க்க நல்ல வசதி பண்ணியிருக்கிருர்கள்.



கடற் கரைக் கோயில்

இதற்குக் கொஞ்சம் மேற்கே நகர்ந்தால் பிரபலமான அர்ச்சுனன் தவம் என்னும் அர்த்த சித்திரப் பாறைமுன் வந்து நிற்போம். நாம் நிற்கும் இடத்திலிருந்து பதினைந்து அடி தாழ்ந்தும் மேலே இருபது அடி உயர்ந்தும் நீண்டபெரிய இரண்டு பாறைகள் முழுவதையுமே அடைத்துக் கொண்டிருக்கும் இந்தச் சிற்பங்கள் (இது அர்ச்சுனன் தவமா? இல்லை பகீரதன் தவமா? என்பது இன்னும் விவாதத்துக்குரிய விஷயமாகவே இருக்கிறது. ஆனால் புதை பொருள் இலாகா டைரக்டர் திரு டி. என். ராமச்சந்திரன் பேச்சை ஒரு தரம் கேட்டுவிட்டால் அவர் காது கேட்க இதைப் பகீரதன் தவம் என்று சொல்லத் துணிய மாட்டோம்!) இந்தச் சிற்ப சித்திரம் கல்லிலே சமைத்த ஒரு கவிதை. எத்தனையோ விதமான வடிவங்கள், பூனை முதல் யானை வரை; தேவர் முதல் தவசிவரை. அர்ச்சுனன் தாடி சடையுடன் தவம் செய்யும் கோலமும் அங்கு சிவபெருமான் எழுந்தருளிப் பாசுபதம் அளிக்கும் காட்சியும் தத்ரூபம். இடையே ஒரு 'கார்ட்டூன்' சித்திரமும்கூட. உண்மைத் தவசிகளிடையே ஒரு போலித் தவசிபோல ருத்திராக்ஷப் பூனை தவம் செய்யும் காட்சி ஒன்றும்

செதுக்கப் பட்டிருக்கிறது. தவம் செய்யும் பூனையைச் சுற்றி எலிகள் அடிக்கும் கும்மாளம் எல்லாமே விவரிக் கப்பட்டிருக்கிறது அங்கே. இன்னும் என்ன என்ன அங்கே இருக்கிறது என்பதை விட என்ன என்ன இல்லை என்பது எளிது. அங்கு 'இல்லாதன இல்லை' என்று சொல்லித் தப்பித்துக் கொள்ளலாம் தானே.



மஹிஷ மர்த்தனி

இன்னும் சற்று மேற்கே நகர்ந்தால் பேன் பார்க்கும் குரங்குகள்; கண்ணன் வெண்ணெய் உண்டை என் றெல்லாம் காட்சிகள். பின்னல் தெற்கே திரும்பி மேட்டில் ஏறினல் அடுக்கடுக்காய் மண்டபங்கள். லக்ஷ்மி மண்டபம், வராக மண்டபம், மகிஷாசுரமர்த்தனி மண்டபம் என்று பல மண்டபங்கள். எல்லாம் மலைகளைக் குடைந்து நிர்மாணிக்கப் பட்டவை. ஒரு மண்ட பத்திலே வராகருக்கு எதிரே உலகளந்தார், மற்றொரு மண்டபத்திலே மகிஷமர்த்தனிக்கு எதிரே புஜங்க சயனர். இப்படி அழகு அழகான சிற்ப வடிவங்க ளெல்லாம் Bas relief என்னும் அர்த்த சித்திர சிற்

பங்கள். இவைகளையே பார்த்துக்கொண்டு பல்லவர் காலத்துக் கலை வளத்தை வியந்துகொண்டே நிற்கலாம், எவ்வளவு நேரம் வேண்டுமானாலும்.

இன்னும் இம் மாமல்லையில் பார்க்க வேண்டியது எவ்வளவோ இருக்கின்றனவே. மலைமேல் கட்டிய கோயில், அக்கோயிலை அடுத்துக் கட்டிய கலங்கரை விளக்கம், எல்லாவற்றையுமே ஏறிப் பார்க்கலாம், நேரமும் காலில் வலுவும் இருந்தால். இதற்கெல்லாம் நேரம் இல்லை என்றால், விறுவிறு என்று கீழே இறங்கி ஐந்து ரதங்கள் என்று கைகாட்டி காட்டும் திசையில் சென்றால் அந்தப் பஞ்சபாண்டவ ரதங்களைப் பார்க்கலாம். பாண்டவர்களுக்கும் இந்த ரதங்களுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்றாலும் ரதங்கள் எல்லாம் அழகானவை; பிரும்மாண்டமானவை. ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாணியிலே, நல்ல வேலைப் பாட்டுடன் செதுக்கப்பட்டவை. எத்தனை சிற்பிகள் எவ்வளவு காலம் வேலை செய்து இந்த அசையாத தேர்களை ஆக்கி முடித்தார்களோ?

இதோடு தீர்ந்து விடுகிறதா? இன்னும் கொஞ்சம் திரும்பிவந்து கிழக்கே பார்க்க நடந்து சவுக்கந் தோப்புகளையெல்லாம் கடந்தால்—அந்தக் கடற்கரைக் கோயிலுக்கே வரலாம். மற்றவையெல்லாம் கற் பாறைகளை வெட்டிச்செதுக்கியதாக இருக்க, இங்குள்ள கோயில்கள் இரண்டு மட்டும் கல்லால் கட்டிய கோயில் களாக இருக்கப் பார்ப்போம். ஒன்று சிவனுக்கு, ஒன்று விஷ்ணுவுக்கு என்று பங்கு. சிவனது லிங்கத் திருவுரு வைவிட, ஜலசயனனாக இருக்கும் பெருமான் மிகவும் காத்திரமான வடிவம். கையில் டார்ச் இருந்தால், இருட்டில் புதைந்து கிடக்கும் அவரை நன்றாகத் தரிசிக் கலாம். பூஜை புனஸ்காரத்தை எல்லாம் தலசயன ருக்குக் கொடுத்துவிட்டு, இந்த ஜலசயனர் ஒதுங்கியே

வாழ்கிருர். இந்தக் கோயில்களை அடுத்த கடற்கரை அழகானது. எவ்வளவோ பகுதிகளைக் கடல் கொண்டு போய்விட்டது என்பர். இருக்கிற பகுதியைக்கூட விழுங்க வருவதுபோலவே கடல் அலை, அலையாக வந்து மோதும். கொண்டு வந்திருக்கும் கட்ட முதை இங்கு அவிழ்க்க வேண்டியதுதான். அதைக் கொண்டுவர மறந்தவர்கள், அங்கு விற்கும் பட்டாணிக் கடலையை மெல்லுவதுடன் திருப்தி அடைய வேண்டியதுதான்.

தமிழ் நாட்டில் கலை வளர்த்த பேரரசர்களில் தலையாய மகாமல்லன் புகழ் எல்லாம் இந்தக் கடல் மல்லையிலே கற்பாறை காட்டும் கவின் உருவிலேயே அடங்கிக் கிடக்கின்றன என்று சொன்னல் வியப்பில்லை. தமிழ் நாட்டின் கலைச்செல்வம் என்று உலகோர் எல்லாம் வியந்து நிற்கும் கடல் மல்லையை மகாமல்லன் பேரால் மாமல்லபுரம் என்று அழைத்ததுதான் எவ்வளவு பொருத்தம். மாமல்லனது கனவெல்லாம் நனவான இடம் அது. நமக்கும் நம் நாட்டைப் பற்றி, நம் மொழியைப் பற்றி, நம் கலைகளைப் பற்றி, நம் இலக்கியங்களைப் பற்றி எத்தனையோ கனவுகள். அதெல்லாம் நனவாக வேண்டுமென்ருல், மாமல்ல புரத்துக்கு ஒரு நடை விறுவிறு என்று போய்த் திரும்பிய உடனடியாகவே காரியத்தைத் துவங்கலாம்; அப்போது நம் கனவும் நனவாகும் என்று நம்பலாம்.



# 24

## கழுகுதொழு வேதகிரி

என் நண்பர் ஒருவர் நல்ல பகுத்தறிவு வாதி. செங்கல்பட்டில் நான் உத்தியோகம் ஏற்றிருந்தபோது என் வீட்டுக்கு வந்திருந்தார். மாமல்லபுரம் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். என்னைத் துணைக்கு அழைத்தார். 'மாமல்லபுரம் செல்லும் வழியில் திருக் கழுக்குன்றம் இருக்கிறதே, அங்கு பக்ஷி தரிசனம் செய்ய வேண்டாமா? தினசரி சரியாய்ப் பகல் பதினேரு மணிக்கு இரண்டு கழுகுகள் அந்த மலைமேல் வந்து அங்கு பண்டாரம் கொடுக்கும் சர்க்கரைப் பொங்கலைச் சாப்பிட்டுவிட்டுப் போகின்றனவே, அதைப் பார்க்க வேண்டாமா' என்றேன் நான். 'இது என்ன பெரிய அதிசயம்! நான் மத்தியானச் சாப்பாட்டைச் சரியாக ஒரு மணிக்கு என் ஆபீஸ் அறையிலேயேதான் வைத்துக் கொள்கிறேன். அங்கும் தினசரி அதே நேரத் துக்கு இரண்டு அணில்கள் வருகின்றன. நான் போடும் உணவைச் சாப்பிட்டு விட்டு; போகின்றன. பக்ஷி களுக்கும், மிருகங்களுக்கும் ஏன், சிறிய பிராணி களுக்கெல்லாம், கால உணர்வு (Time sense) ரொம்பவும் அதிகம். ஆதலால் குறித்த காலத்தில் இங்கு இன்னது

கிடைக்கும் என்ற நியதி ஏற்பட்டு விட்டால் அந்த இடத்துக்கு அவை வரத் தவறுவதே இல்லை' என்று என்னை விளாசி விட்டார் அந்தப் பகுத்தறிவு வாதி. 'உண்மைதான். மனிதனைத் தவிர மற்ற ஜீவராசி களுக்கு எல்லாம் கால உணர்வு அதிகமே. என்றாலும், ஒரு நாளல்ல, இரண்டு நாள் அல்ல. நூற்றுக் கணக்கான வருஷங்களாக, குறித்த வேளையில் குறித்த



சங்கு தீர்த்தம்

இடத்தில் இரண்டு கழுகுகள் தினம் வந்து உண்டு செல்கின்றன என்றால் அது ஓர் அதிசயம்தானே? அதிலும் இன்றைக்கு இருநூற்று எழுபத்தொன்பது ஆண்டுகளுக்கு முன்பு, ஆம், 3-1-1681 அன்று பகல் பன்னிரண்டு மணிக்கு இங்கு வந்த டச்சுக்காரர்கள் கூட இப்படிக் கழுகுகள் வருவதையும் அவை உண்டு திரும்பு வதையும் பற்றி அன்றே எழுதி வைத்திருக்கிறார்களே, அதற்கு என்ன சொல்கிறீர்? இத்தனை வருஷமும் இரண்டே கழுகுகள் கால உணர்வு பெற்றிருக்கின்றன என்கிறீரா?' என்று மடக்கினேன் நண்பரை. அதன்பின்

அவரைக் காரில் ஏற்றிக்கொண்டு திருக்கழுக்குன் றத்தின் மலையடிவாரத்துக்கு இழுத்துச் சென்றேன்.

இருநூற்று அறுபத்துநாலு ஏக்கர் நிலத்தில், ஐந் நூறு அடி உயரத்தில் இருக்கிறது அந்தச் சஞ்சீவிமலை. அதற்கு நாலு சிகரங்கள். நான்கு வேதங்களுமே நான்கு சிகரங்களாக இருப்பதனால் வேதகிரி என்றும், அந்த வேதகிரிக்கு உரிய வேதகிரி ஈசுவரர், அதர்வண வேத சிகரத்தின்மேல் இருக்கிறார் என்றும் சொல்வார்கள். மலை யின்மேல் ஏற நல்ல படிக்கட்டுகள் கட்டியிருக்கிறார்கள். ஒன்றிரண்டு இடத்தில்தான் படிக்கட்டுகள் செங் குத்தாக இருக்கின்றன. மற்றப்படி எளிதாகவே ஆங்காங்குள்ள மண்டபங்களில் தங்கி இளைப்பாறிப்



கழுகுகளுடன் பண்டாரம்

படிகளில் ஏறி மலைச்சிகரத்தை அடையலாம். சுமார் பத்து பத்தரை மணிக்குள்ளேயே சென்று விடவேணும். நூற்றுக்கணக்கானவர்கள் நமக்கு முன்னேயே அங்கு வந்திருப்பார்கள். எல்லோரும் வசதியாக இருந்து பார்க்க ஏற்பாடுகளை யெல்லாம் கோயில் நிர்வாகிகள்

செய்திருக்கிறுர்கள். சரியாய்ப் பதிஞேரு மணி அளவில் இரண்டு வெள்ளைக் கழுகுகள் மலையைச் சுற்றியும் மலையில் உள்ள கோயிலைச் சுற்றியும் வட்டமிடுவதைப் பார்ப்போம். அதில் ஒன்று கோயில் மதில்சுவரிலே வந்து தங்கும். அதன்பின், படிப்படியாக இறங்கித் தத்தி ஒரு சிறு பாறையிலே சர்க்கரைப் பொங்கல் தட்டோடு உட்கார்ந்திருக்கும் பண்டாரத்தின் பக்கத் துக்கு வந்து சேரும். அவர் கையிலே உள்ள சர்க்கரைப் பொங்கலைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சாப்பிடும். குன்றிலே உள்ள தண்ணீரில் தங்கள் அலகுகளைக் கழுவிக்கொண்டு திரும்பவும் வட்டமிட்டுப் பறந்து வான்வழியில் மறைந்து போகும். அதன்பின் அங்கு கூடி யிருப்பவர்கள் என்ன என்ன எல்லாமோ பேசிக் கொள்வார்கள். ஒருவர் சொல்வார்: 'இந்த இரண்டு கழுகுகளும் காலையில் காசியில் கங்கையில் ஸ்நானம் செய்கின்றன. மத்தியானம் உணவு அருந்தக் கழுக் குன்றம் வந்து விடுகின்றன. இரவு ராமேசுவரம் கோயில் கோபுரத்தில் சென்று நித்திரை செய்கின்றன' என்று. இருக்கலாம். ஆனுல் காசியிலும் ராமேசுவரத் திலும் இவர்களுக்குப் பூஜை இல்லை. பார்த்ததற்குச் சாட்சியும் இல்லை. உண்ண உணவுக்குத் திருக்கழுக் குன்றம் வருவது நிதரிசனம். தினசரி நிகழ்ச்சி.

இது விஷயம் என்னவென்று அறியத் தல வரலாற் றைப் புரட்டவேண்டும். ஏதோ பிரம்ம புத்திரர்கள் எட்டுப்பேர் சாரூப பதவி வேண்டிக் கடுந்தவம் புரிந்து, பின்னர் சிவபெருமான் காட்சியளித்தபோது மறந்து போய் சாயுச்சிய பதவி கேட்டு விட்டதாகவும் அதற்கா கவே அந்த எட்டுத் தவசிகளையும், யுகத்துக்கு இரண் டிரண்டு பேராய்க் கழுகுகளாகப் பிறந்து வாழ இறை அருள்செய்திருக்கிறுர் என்று சொல்கிறது புராணம். அவர்களே முந்திய யுகங்களிலே சண்டன் பிரசண்டன்



துவார பாலகர்

எனவும் ; சம்பாதி சடாயு எனவும் ; சம்புகுந்தன், மாகுத்தன் எனவும் பிறந்து முத்தி எய்தி யிருக்கிருர்கள். அவர் களில் இருவரே இந்தக் கலியுகத்திலே பூஷா, விதாதா என்னும் இரண்டு கழுகுகளாகப் பிறந்து வாழ்ந்து வருகிருர்கள் என்று அறிவோம். கலி யுகம் முழுவதும் இருப் பது இதே இரண்டு கழுகுகள்தானு, இல்லே அவற்றின் பரம்பரையா என்று, முன்னிருந்து கண்டவர்களும் இல்லே. இனி இருந்து காணப் போகிறவர்களும் இல்லே. ஒன்று மட்டும் உண்மை. இரண்டு கழுகுகள், இத் தனே வருஷங்களாக இதே இடத்துக்கு இதே நேரத்துக்கு வந்து செல் கின்றன என்பது மட்டும் மறுக்க முடியாததாக இருக் கிறது. வேதகிரி ஈசுவரரைத் தேடி இக்கழுகுகள் வந்தா லும், அந்த வேதகிரி ஈசுவரரே, இந்தக் கழுகுகளால் தானே பிரசித்தி பெற்றிருக்கிருர். ஏன் கோயிலும், மலேயும், ஊரும் குளமும், கழுகுக் குன்றம் என்ற பெயரில்தானே நிலேத்திருக்கின்றன.

இந்தக் கழுக்குன்றம், சென்னையிலிருந்து நாற்பத்தைந்து மைல் தொலைவிலே இருக்கிறது. சென்னையிலிருந்தும் செல்லலாம். இல்லை, செங்கல்பட்டு வந்து அங்கிருந்து தென் கிழக்காக ஒன்பது மைல் போனாலும் சென்று சேரலாம். இந்த ஊரிலே பிரசித்தி பெற்றது, கழுகுகள் வரும் சஞ்சீவிமலையும் அம்மலைமேல் கட்டியிருக்கும் வேதகிரி ஈசுவரர் கோயிலுந்தான். மலை ஏறுவதற்குமுன், மலையையே வலம் வரலாம். இரண்டரை மைல் நடக்க முடியுமானால் நடக்கலாம். இல்லாவிட்டால் காரிலேயே கிரிப் பிரதக்ஷிணத்தை முடித்துக் கொள்ளலாம். மலைமேல் ஏறிக் கழுகு வந்து போவதையெல்லாம் பார்த்தபின், அங்குள்ள கோயிலுக்குள்ளே நுழையலாம். இந்தக் கோயிலின் கர்ப்பக்கிருஹம் பல்லவ மன்னன் மகேந்திர வர்மனால் குடைந்து ஆக்கப்பட்டிருத்தல் வேண்டும். அங்குள்ள உட்புறத்துச் சுவர்களில் சோமாஸ்கந்தர், பிரும்மா, யோகதக்ஷிணாமூர்த்தி முதலியவர்கள் செதுக்கப்பட்டிருக்கிறார்கள். இந்தச் சிற்ப வடிவங்களை யெல்லாம் அங்குள்ள இருட்டில் காண்பது கொஞ்சம் கஷ்டமான காரியமே. இங்கு கோயில்கொண்டிருப்பவர் வாழைக் குருத்துப்போன்ற வடிவம் உடையவர். சுயம்புமூர்த்தி என்பார்கள். ஆனால் நாம் காண்பது கவசமிடப்பட்ட சிவலிங்க உருவைத்தான். இவர்தான் வேதகிரி ஈசுவரர். கிழக்கு நோக்கியவராய் அமர்ந்திருக்கிறார். இந்த வேதகிரியானைத்தான் ஒரு வியாழ வட்டத்துக்கு ஒருதரம் இந்திரன் பூஜை புரிவதாகப் புராணங்கள் கூறுகின்றன. இந்திரன் பூஜை என்றால், ஏதோ நீரால் அபிஷேகம் மலர்களால் அர்ச்சனை என்றில்லை. இடி இடித்தே பூஜை. இடி கோபுரத்தின் பேரிலேயே விழுந்து, மூலவரை மூன்று முறை வலம் வந்து பூமிக்குள் இறங்கி விடுகிறது என்கிறார்கள். இதனால் கோயிலுக்கோ, இறைவ

னுக்கோ கெடுதி ஒன்றும் நேரிடுவதில்லை. இந்தத் தகவலை நிந்தாஸ்துதியாகச் சொக்கநாதப் புலவர் வெளி யிடுகிருர் ஒரு பாட்டில்:

அடிபட்டீர், கல்லாலும் எறிபட்டீர்,
அத்தனைக்கும் ஆளாய் அந்தப்
படிபட்டும் போதாமல் உதைபட்டீர்,
இப்படியும் படுவார் உண்டோ?
முடிபட்ட சடையுடையீர்! கழுக்குன்றீர்!
முதற்கோணல் முற்றும் கோணல்
இடிபட்டும் பொறுத்திருந்தீர், சிவசிவா
உமைத் தெய்வம் என்னலாமோ?

என்பது பாட்டு.

வேதகிரி ஈசுவரரை வணங்கியபின் கோயிலின் வட பக்கமாக இருக்கும் படிகளின் வழியே இறங்கலாம். அந்த வழியிலே, ஒரு குடைவரைக் கோயில் உண்டு. இங்கும் சிவலிங்கம், துவாரபாலகர் எல்லாம் கற்பாறை யிலே செதுக்கப்பட்டிருக்கின்றன. துவார பாலகர் நல்ல அழகான வடிவம். பல்லவ மன்னன் மகேந்திரன் காலத்துச் சிற்பம். அங்குள்ள துவாரபாலகர்களை உத்தரீயத்தை லாகவமாகத் தோளில் போட்டுக்கொண்டு, ஒரு கையை உயர்த்தி எல்லாரையும் மலைமேல் போய்ப் பார்க்க வேண்டியதைப் பாருங்கள் என்று சொல்லும் நிலையில் செதுக்கியிருக்கிருன் சிற்பி. (நாம்தாம் மலையில் உள்ள சிற்பவங்களைப் பார்த்து விட்டோமே, அந்தத் தகவலை அந்தத் துவார பாலகரிடம் சொல்லி விட்டுக் கீழே இறங்கி விடலாம்) மலையைவிட்டு இறங்கி அடிவாரத்தில் உள்ள சித்தாத்ரீ கணபதியை யும் வணங்கி விட்டு, ஊர் மத்தியில் இருக்கும் தாழக் கோயிலுக்குள் செல்லலாம். அங்கு செல்லாமல் திரும்ப முடியாதே. மலைமேல் தரிசிக்காத அம்பிகையை இங்கு தானே தரிசிக்கவேண்டும். இந்தக் கோயிலை ஒரு

பெரிய கோபுரம் அழகு செய்கிறது. கோயிலுக்குள் பிரதான மூர்த்தி சிவலிங்க உருவில் அமைந்த பக்தவத்சலர்தான் என்றாலும், சிறப்பெல்லாம் அன்னை திரிபுர சுந்தரிக்குத்தான். இவளையே 'பெண்ணின் நல்லாள்' என்று பாடி மகிழ்கிறார் திருஞானசம்பந்தர்.

துணையல் செய்தான், தூயவண்டு
பாழ்செயச் சுடர்க்கொன்றைப்
பிணையல் செய்தான், பெண்ணின்
நல்லாளை ஒருபாகம்
இணையல் செய்தான், இலங்குஎயில்
மூன்றும் எரிஉண்ணக்
கணையல் செய்தான் காதல்செய்
கோயில் கழுக்குன்றே.

என்பதுதானே சம்பந்தர் தேவாரம். இந்தக் கோயிலில் வரப்பிரசாதி ஆன அம்பிகையைத் தரிசிப்பதோடு ஏழு அடி உயரத்தில் கம்பீரமாகக் காட்சி கொடுக்கும் வீரபத்திரரையும் தரிசித்து வணங்கலாம். இந்தக் கோயில் கட்டிய இடம் எல்லாம் கதலி வனமாக இருந்ததாகவும் அந்தக் காட்டை அழித்தபோது வண்டுகள் ரீங்காரமிட்டுக் கொண்டிருந்த பிள்ளையார் ஒருவர் கிடைத்தார் என்றும் அவரே வண்டுவனப் பிள்ளையார் என்று இன்றும் விளங்குகிறார் என்பது கர்ண பரம்பரை.

இத் தலத்துக்குச் சம்பந்தரைத் தவிர, மற்ற சமய குரவர் மூவருமே வந்திருக்கிறார்கள். கழுக்குன்றமர்ந்த கற்பகத்தைக் கண்ணாரக் கண்டதாகப் பாடிப் பரவசம் அடைகிறார் அப்பர். 'சென்று சென்று தொழுமின் கழுக்குன்றமர்ந்த பிரானை' என்று சுந்தரர் மக்களை யெல்லாம் வேண்டிக் கொள்கிறார். எல்லோருக்கும் மேலாக மணிவாசகர் கழுக்குன்றத்து உச்சியானை நினைந்து நினைந்து பாடுகிறார். 'கணக்கிலாத திருக்கோலம் நீ

வந்து காட்டினாய் கழுக்குன்றிலே' என்று சொன்ன தோடு திருப்தி அடையாது 'காண ஒண்ணாத் திருக் கோலம் வந்து காட்டினாய் கழுக்குன்றிலே!' என்றும் கூறி அவர் பெற்ற அனுபவத்தை விரிக்கிறார். மணிவாசகர் திருவடி என்று ஓரிடத்தையும் பார்க்கலாம், கிரி சுற்றும் போது. அங்கு மணிவாசகர் விழா சிறப்பாக நடை பெறுகிறது வருஷம் ஒருமுறை.

இந்தத் தலத்தில் வேதகிரியானையும் திரிபுர சுந்தரி யையும் விடப் பெருமை யுடையது சங்கு தீர்த்தம். ஊருக்குத் தென்கிழக்குக் கோடியிலே இருப்பதுதான் அச் சங்குதீர்த்தம் என்னும் தெப்பக்குளம். சுமார் ஆயிரம் சதுர கஜம் உள்ள பெரிய குளம். ஒரு நல்ல நீராழி மண்டபம். இந்தக் குளத்தின் தண்ணீரில் தாமிரச் சத்து இருக்கிறது என்கிறார்கள். இக்குளத்தில் பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒருதரம் ஒரு சங்கு பிறக் கிறது. (அப்படிக் கிடைத்த சங்குகளை யெல்லாம் கோயிலிலே சேகரித்து வைத்திருக்கிறார்கள்) சங்கு பிறக்கும் சமயத்தில் இந்தத் தீர்த்தத்தில் குளிப்பது மிகவும் விசேஷம். கும்பகோணத்து மகாமக தீர்த்தத் தோடும், கோதாவரி புஷ்கர தீர்த்தத்தோடும் போட்டி யிடும் இச் சங்கு தீர்த்த ஸ்நானம். இச் சங்கு தீர்த்தத் துக்குத் தென் கிழக்கே ஒரு பர்லாங்கு தூரத்தில் ஒரு சிறு கோயில். அங்கு கோயில் கொண்டிருக்கிறார் ருத்ர. கோடீசுவரர் அபிராமி நாயகியுடன். அவுணர்களை எல்லாம் கொலை செய்த பாவத்தைப்போக்க கோடி ருத்திரர்கள் இங்கு வந்து வணங்கி, இந்த லிங்கத் திரு வுருவைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள் என்பது புராண வரலாறு. • இன்று இத்தலத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருப்பவர்கள் வேதகிரியானும் பக்தவத்சலனும் ருத்ரகோடி ஈசுவரனுமே என்றாலும் அன்று இத்தலத் தில் வேத நாராயணன் கோயில் கொண்டிருந்ததாகவும்

வரலாறு உண்டு. இந்த ஊருக்கே வேதநாராயணபுரம் என்று ஒருபெயர் உண்டே. ஆனுல் அந்த வேதநாராய ணர் எங்கிருக்கிருர் என்று தெரியவில்லை. சைவ வைணவ பேதம் எல்லாவற்றையும் ஒதுக்கி விட்டு, தன் துணைவியைக் கூடக் கீழே விட்டுவிட்டு வேதகிரி யான்தான் கழுகு முனிவர்களுக்கு ஆசி கூற மலை மேலேயே ஏறி நின்றுகொண்டிருக்கிருனே. நாமும் கழுகு வேத கிரியானைத் தொழுவதோடேயே திருப்தி யடையலாம். வேத நாராயணனைத் தேடி அலைய வேண்டாம்.



25

# பெரும்பூதூர் உடையவர்

வைஷ்ணவ மத ஆச்சாரியர்களில் தலை சிறந்தவ ராக விளங்குபவர் ஸ்ரீராமானுஜர். ஆதி சங்கரர் வேதங்கள், உப நிஷதங்கள் ஆகியவற்றுக் கெல்லாம் பாஷ்யங்கள் செய்து பரப் பிரம்மம் ஆம் இறைவனை அடைய ஞானமார்க்கத்தை நமக்குக் காட்டிச் சென் ருர். ஞான மார்க்கத்தோடு பக்தி மார்க்கமும் சேர்ந் தால்தான், பிரம்மத்தை உணர்வது எளிது என்று உப தேசித்து, சங்கரரின் அத்வைத சித்தாந்தத்தைக் கொஞ்சம் மாற்றி விசிஷ்டாத்வைத சித்தாந்தமாக நமக்கு அருளியவர் ஸ்ரீராமானுஜர். இவரது வாழ்க்கை வரலாறு சுவையுடையது.

சற்று ஏறக்குறைய தொள்ளாயிரத்து நாற்பத்து இரண்டு வருஷங்களுக்கு முன் பரம பாகவதர்களான கேசவசோமயாஜி, காந்திமதி என்பவர்களின் பிள்ளை யாக ராமானுஜர் அவதரிக்கிருர். இவர் அவதரித்த தலம் ஸ்ரீபெரும்பூதூர். இவருக்குத் தாய் தந்தையர் அன்று இட்ட பெயர் இளையாழ்வார். பாலப்பருவம் கழிந்ததும், காஞ்சியை அடுத்த திருப்புட்குழியில்

உள்ள யாதவப் பிரகாசரது குருகுலத்தில் சேர்த்துவிடு கின்றனர் பெற்ருேர். இவருக்கோ, யாதவப்பிரகாசர் சொல்லும் வேதாந்த விளக்கங்கள் எல்லாம் விபரீத மாய்ப்படுகின்றன. குருவையே திருத்த முனைகிருர்



உடையவர்

அந்த இளவயதிலேயே இவர். தம்மை மிஞ்சிவிடு வான் பையன் என்று கண்ட குரு யா்தவப் பிரகாசர், காசி யாத்திரை செய்வதென்றும் அங்கு கங்கையில் பயலை மூழ்கடித்துவிடுவது என்றும் திட்டமிட்டுப் பயணம் துவக்குகிருர். ஆனல் இவர் தமிழ் நாட்டுக்

குச் செய்யவேண்டிய காரியங்கள் எத்தனையோ இருக்கின்றனவே, பரந்தாமன் சும்மாயிருப்பானு? விந்திய மலைச் சாரலிலேயே இளைய பெருமாளைச் சந்திக்கிருன், தானும் தன் மனைவியும் வேடன் வேட்டுவச்சி உருவில் வந்து யாதவப் பிரகாசர் சிஷ்ய குழாத்திலிருந்து இளைய பெருமாளைக் கூட்டி வந்து, காஞ்சிக்குப் பக்கத்தில் உள்ள சோலையில் விட்டு விட்டு மறைந்து விடுகிருன். காஞ்சிக்கு வந்த இந்த இளையபெருமாளுக்கு, அங்குள்ள பேரருளாளனுக்குச் சேவை செய்ய ஆவல் உண்டாகிறது. அப்படியே காஞ்சிக்கு இரண்டு மைல் தொலைவில் உள்ள சாலைக் கிணற்றிலிருந்து தினம் தண்ணீர் இறைத்து, திருமஞ்சன கைங்கர்யத்தைச் செய்து வருகிருர். இந்தச் சமயத்தில்தான் ஸ்ரீரங்கத்திலிருந்து ஸ்ரீ ஆளவந்தார், கச்சி வரதனது தரிசனத்துக்கு வந்தவர் இந்த இளைஞனைப் பார்க்கிருர். அவனது தேஜஸைக் கண்டு, தான் நீண்ட நாட்களாகத் தேடி வந்தது இவனல்லவா என்று தெரிந்து இவனைத் தன்னிடம் சேர்க்க அந்த அத்திகிரி வரதனிடமே வேண்டிக் கொள்கிருர். பெரிய நம்பியிடம் சொல்லி இளைஞனை ஸ்ரீரங்கம் கூட்டிவரச் சொல்கிருர். ஆனல் இளைஞன் ஸ்ரீரங்கம் போய்ச் சேருமுன்பே ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளிவிடுகிருர். அவரைத் திருப்பள்ளி படுத்தி வைத்திருக்கிருர்கள். (திருநாட்டுக்கு எழுந்தருள்வது என்ருல் வைஷ்ணவ பரிபாஷையில்—இறந்துவிட்டார் என்றும் திருப்பள்ளிபடுத்துதல் என்ருல் கிடத்தி வைத்திருத்தல் என்றுமே பொருள்) அப்படி அவரது பூத உடல் இருக்கும்போது, அவரது வலது கையில் மூன்று விரல்கள் மட்டும் மடங்கியே இருக்கின்றன. ஆளவந்தார் மனத்தில் இருந்த மூன்று அபிலாஷைகளையும் தட்டின்றி நிறைவேற்றுவேன் என்று இளையாழ்வார் வாக்குக் கொடுத்த பின்பே

மடங்கிய விரல்கள் நிமிர்கின்றன. இதன்பின் வைஷ்ணவ மதப்பிரசாரகராக இளையாழ்வார் முனைந்து வேலை செய்கிறார். வீட்டைத் துறக்கிறார்; மனைவியைத் துறக்கிறார்; சந்நியாசியாகிறார். ஸ்ரீராமானுஜர் என்ற திருநாமத்தோடு ஸ்ரீரங்கம், மேல்கோட்டை, திருநாராயணபுரம் முதலிய இடங்களில் தங்கியிருந்து, வைஷ்ணவமத ஸ்தாபகராகத் தன் புகழ் நிறுவுகிறார். கிட்டத் தட்ட நூற்று இருபது வயதுவரை வாழ்ந்த இந்த ஆச்சாரியாரையே இளையாழ்வார், இராமானுஜர், எம்பெருமானார், எதிராஜர், ஸ்ரீ பாஷ்யக்காரர், உடையவர் என்றெல்லாம் வைஷ்ணவ உலகம் இன்றும் போற்றுகிறது. இவரது புகழையே திருவரங்கத்து அமுதனார் இராமானுஜர் நூற்றந்தாதி என்று நூற்று எட்டுப் பாடல்களில் பாடி மகிழ்கிறார்.

நாட்டிய நீசச் சமயங்கள்
    மாண்டன, நாரணனைக்
காட்டிய வேதம் களிப்புற்றது,
    தென் குருகை வள்ளல்
வாட்டமிலா வண் தமிழ்மறை
    வாழ்ந்தது, மண்ணுலகில்
ஈட்டிய சீலத்து இராமானுஜன் தன்
    இயல்பு கண்டே.

என்ற பாட்டு, நூற்று எட்டுப் பாடல்களில் ஒரு பாட்டு. 'நல்லார் பரவும் இந்த இராமானுஜரது தெளிவுற்ற கீர்த்தி'யையே மேலும் மேலும் விவரிக்கிறார் திருவரங்கத்து அமுதனார். இராமானுஜருக்கு ராமாவதாரத்திலே அளவு கடந்த ஈடுபாடு. படிகொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் கோயிலாகவே இராமானுஜரைப் பார்க்கிறோம், அவரது வாழ்க்கை முழுதும். இந்த இராமானுஜரது அவதார ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூருக்கே செல்கிறோம் இன்று நாம்.

ஸ்ரீபெரும்பூதூர் சென்னைக்குத் தென்மேற்கே பெங்களூர் செல்லும் வழியில் இருபத்து ஐந்து மைல் தொலைவில் உள்ள பெரிய ஊர். செங்கல்பட்டிலிருந்து சிங்கப்பெருமாள் கோயில் வந்து அங்கிருந்து வடக்கு நோக்கித் திரும்பினாலும் இவ்வூர் வந்து சேரலாம். இந்த ஊருக்கு ஆதிப் பெயர் பூதபுரி என்று இருந்திருக்கிறது. மயான உருத்திரன் சடை விரித்து ஆடிய ஆட்டம் கண்டு பூதகணங்கள் சிரித்திருக்கின்றன. அதனால் கோபமுற்ற ருத்திரன் பூதகணங்களைத் தன் சந்நிதியிலிருந்து விலக்கி யிருக்கிறான். கவலையுற்ற பூதகணங்கள், ஸ்ரீமந் நாராயணனைப் பிரார்த்தித்திருக்கிறார்கள். நாராயணனே அனந்தனை அழைத்து ஒரு சரஸை அமைக்கச் சொல்லி, பூதகணங்களை அந்த அனந்தச் சரஸில் முழுகி எழச்சொல்லி, பூதகணங்களைத் திரும்பவும் ருத்திரனிடம் சேர்த்திருக்கிறான். இப்படிச் சமாதானம் பண்ணிவைத்த நாராயணன் பெற்ற 'நோபல் பரிசு'தான் இந்தக் கிராமம். பூதங்களே நிர்மாணித்ததனால் பூதபுரி என்று கிராமத்துக்குப் பெயர் நிலைத்திருக்கிறது. நாராயணனும், ஆதிகேசவப் பெருமாள் என்ற திருநாமத்தோடு அங்கேயே கோயில் கொண்டு விடுகிறான். பூதகிரி நாளடைவில் பூதூர் என்றும், உடையவர் பிறந்த மகிமை காரணமாகப் பெரும்பூதூர், ஸ்ரீபெரும்பூதூர் என்றெல்லாம் பிரசித்தி பெற்று விடுகிறது.

அம்பரீஷன் பௌத்திரனான ஹரீதரனுக்கு நேர்ந்த ஒரு சாபம் இத் தலத்துக்கு அவன் வந்து அனந்த சரஸில் நீராடியதால் நீங்கி யிருக்கிறது. அதனால் மகிழ்ச்சியுற்ற ஹரீதரன், ஆதிகேசவப் பெருமாளுக்குக் கோயில் எடுப்பித்து உத்சவாதிகளை யெல்லாம் ஏற்பாடு பண்ணியிருக்கிறார்கள். சென்னையிலிருந்து வரும்போது தூரத்திலேயே கோபுர தரிசனம் செய்யலாம். ரோட்டை

விட்டு விலகிக் கோயில் வாசலுக்கு வந்து சேரலாம். கோபுர வாசலுக்கு நேராக உள்ள துவஜஸ்தம்பத்துக் குத் தெற்கே இருக்கும் குதிரைக்கால் மண்டபம் வழி யாக மேலே ஏறிச் சென்ருல் வட பக்கம் இருக்கும் உடையவர் சந்நிதியையும், வாசலுக்கு மேற்கே ஆதி கேசவப் பெருமாள் சந்நிதியையும் காணலாம். கூட வரும் அர்ச்சகர்கள் முதலில் நம்மை உடையவர் சந்நி திக்கே அழைத்துச் செல்வார்கள். ஆம்! அருளாளரான உடையவர் இங்கே ஆதிகேசவனைவிடப் புகழ் பெற்ற வர் ஆயிற்றே. நாமும் அவரையே முதலில் தரிசித்து அவர் அருள் பெற்று அதன் பின் ஆதிகேசவன் அருள் பெற விரையலாம். உடையவர் சந்நிதியில் மூலவர் தெற்கு நோக்கிய திருக்கோலத்தில் இருக்கிருர். அந்த மூலவருக்கு இளையாழ்வார் என்ற பிள்ளைத் திருநாமமே நிலைத்திருக்கிறது. இந்த மூலவருக்கு முன் செப்புச் சிலை வடிவில் இருப்பவரே உற்சவ மூர்த்தி. கூப்பிய கையுடன் இருக்கும் இந்த எம்பெருமானுரைத் தமர் உகந்த திருமேனி என்பார்கள். இராமானுஜரது ஜீவிய காலத்திலேயே அவருடைய வடிவத்தை அழகாகச் சிற்ப வடிவங்களாகச் செய்து, அவ் வடிவங்களை அவரே ஆலிங்கனம் பண்ணச் செய்து, பிரதிஷ்டை செய்ததாக வரலாறு. அப்படிப் பிரதிஷ்டை செய்யப் பெற்றவைகளில் மூன்று பிரசித்தமானவை. இப்படி ஸ்ரீரங்கத்தில் பிரதிஷ்டை பண்ணியது தாஞன திருமேனி என்றும், மேல் கோட்டையில் பிரதிஷ்டை செய்ததைத் தான் உகந்த திருமேனி என்றும், இந்த ஸ்ரீபெரும்பூதூரில் பிரதிஷ்டை செய்யப்பட்டதைத் தமர் உகந்த திருமேனி என்றும் சொல்லப் படுகின்றன. தாஞன திருமேனியை யும் தானுகந்த திருமேனியையும் விடத் தமர் உகந்த திரு மேனியே அழகானது; பிரசித்தி உடையது. உடைய வரின் உறவினரும் சிஷ்யர்களுமான முதலியாண்



ஸ்ரீ பெரும்பூதூர் கோயில்

டானும், கந்தாடை ஆண்டானும் உவந்துபிரதிஷ்டை செய்தமூர்த்தியானதால் இவரைத் தமர் உகந்த திருமேனி என்கிறார்கள். உடையவரது திருவடியின் கீழ் சடகோபம் இருக்கும். இங்குள்ள சம்பிரதாயம் தெரியாமல் சடகோபம் சாதிக்கவேணும் என்று கேட்கக் கூடாது அர்ச்சகரை. அப்படிக் கேட்டால் அவர் மிகவும் கோபித்துக் கொள்வார். முதலியாண்டான் சாதிக்க வேணும் என்றே கேட்க வேண்டும். என்றுமே திருவடி தாங்க ஆசைப்பட்ட முதலியாண்டானுக்கு உடையவர் அளித்த கௌரவம் இது.

இந்த உடையவரை வணங்கிவிட்டு வெளியே வந்தால் துவஜஸ்தம்ப மண்டபம் வந்து சேருவோம். இங்கு நான்கு ஸ்தம்பங்களுக்கு மேற்பட்ட ஸ்தம்பங்கள் இருந்தாலும் அவைகளில் நான்கையே பூதங்கள் ஸ்தாபித்துக் கோவிலைக் கட்டியிருக்கின்றன. இங்குதான் உற்சவ காலங்களில் திருமஞ்சனம் முதலிய ஆராதனங்கள் நடைபெறுகின்றன.

இனி மேற்கே திரும்பி ஆதிகேசவர் சந்நிதிக்கு வரலாம். வாயிலிலேயே ஜய விஜயர் என்னும் துவாரப் பாலகர்கள் கம்பீரமாக எழுந்து நிற்பார்கள். அவர்களிடம் அனுமதி பெருமலேயே உள்ளே நுழையலாம். ஆதிகேசவப் பெருமாள் கிழக்கு நோக்கியவராய் நின்ற திருக்கோலத்தில் நமக்குச் சேவை சாதிப்பார். தூக்கிய இரண்டு கைகளில் சங்கும் சக்கரமும், மற்ருெரு வலது கை ஹஸ்தம் அபயப்பிரதானம் அளிக்கும். மற்ருெரு இடக்கையோ நீண்டு தாழ்ந்து தொடையில் இருத்தப்பட்டிருக்கும். ஆதிகேசவனைச் சென்று கண்டு வணங்குபவர்களுக்கு, சம்சாரமாகிய கடலின் ஆழம் தொடை யளவுதான் என்று காட்டுவதாக ஐதீகம். வலது மார்பில் ஸ்ரீவத்ஸம். இத்துடன் ஸ்ரீதேவி பூதேவியார் வேறே. இந்த ஆதிகேசவருக்கு முன்னுலே கேசவா நந்தன வர்த்தனன் என்னும் உத்சவர். இவரது திருஉரு மற்றப்படி ஆதிகேசவன் திருவுருவைப்போலவே இருந்தாலும் தாழ்ந்த இடக்கை மட்டும் ஆகூயவரதமாக இருக்கிறது. ஆம், மக்கள் எல்லோரையும் வாருங்கள் என்று அழைத்து அருளுகின்ற நிலே (இவருக்கு ஒரு பயம் போலும், பிரபலமான உடையவர் பக்கத்திலேயே இருப்பதால் அவரை வணங்கி, விண்ணப்பம் செய்ய வேண்டியவைகளைச் செய்து விட்டு, தம்மைக் கவனிக்காமலே சேவார்த்திகள் போய் விடுவார்களோ என்று. அப்படி அவசரமாக ஓடுபவர்களைக் கூடத் தன்பக்கம் அழைத்து அருள் செய்யும் அருளாளர் இவர்.)

இந்தக் கோயிலின் பெரிய பிரகாரத்தில் தென் மேற்கு மூலேயில் தாயார் சந்நிதி யிருக்கிறது. தாயாருடைய திருநாமம் எதிராஜவல்லி. உடைய்வர் அவதரித்த பின், பெருமாள் அவருடைய பெயரோடு தன் பெயரும் இணைந்திருக்க வேண்டுமென்று விரும்பி எதிராஜநாதன் என்ற பெயரை ஏற்றுக் கொண்டிருக்கிருர். எதிராஜ

நாதனது மனைவியாம் லக்ஷ்மியும் தன் பெயரை எதிராஜ வல்லி என்றே மாற்றிக் கொள்கிறாள். இத்தனை ஈடுபாடு எதிராஜனிடம் அந்தப் பெருமாளுக்கும் இந்தத் தாயாருக்கும். இவர் சர்வாலங்கார சுந்தரி. இன்னும் இக் கோயிலில் சக்கரவர்த்தித் திருமகனுக்கு, கருடனுக்கு எல்லாம் தனித்தனி சந்நிதிகள் இருப்பதுபோல் நம்மாழ்வாருக்கு, ஆண்டாளுக்கு, திருக்கச்சி நம்பிகளுக்கெல்லாம் தனித்தனி சந்நிதிகள் உண்டு. இவைகளில் பிரசித்தமானது ஆண்டாள் சந்நிதியே. ஆண்டாளிடத்து, அவளது பாசுரங்களிடத்து உடையவருக்கு நல்ல ஈடுபாடு. ஆண்டாளுக்கு ஓர் ஆசை, தான்பாடிய நாச்சியார் திருமொழிப் பிரபந்தத்தை, திருமாலிருஞ்சோலையில் பெருமானுக்கு, நூறு கடா நிறைய அக்கார அடிசில் பண்ணி அத்துடன் சமர்ப்பிக்க வேண்டுமென்று. அந்த ஆசையை நிறைவேற்றி வைக்கிறார் உடையவர். அந்த ஆசை நிரம்பிய குதூகலத்தில், ஸ்ரீபெரும்பூதூர் மாமுனியாம் உடையவரை 'அண்ணா' என்றே அழைக்கிறாள் ஆண்டாள். இதனாலேயே இவருக்குக் கோயிலண்ணன், திருப்பாவை ஜீயர் என்றெல்லாம் பெயர்கள் வழங்குகின்றன. ஆண்டாளை மங்களா சாஸனம் பண்ணிய பெரியவர்கள், 'பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே' என்றே வழிபடுகிறார்கள்.

இன்னும் இந்தக் கோயிலில் பார்க்க வேண்டியவை எவ்வளவோ உண்டு. அத்தனையும் பார்க்க நமக்கு நேரம் ஏது? அதிலும், இராமானுஜரை, அவரது தமர் உகந்த திருமேனி வடிவழகைக் கண்டபின் கண்கள் மாத்திரம் என்ன, இதயமுமே நிறைந்துவிடுமே. மற்றவைகளைப் பார்க்க, அவ்வடிவங்களை உள்ளத் திருத்த இடம் ஏது? ஆதலால், கோயிலைக் கடந்து வெளியே வருகிறபோது நாமும் அந்தப் பிள்ளைப் பெருமாள் ஐயங்காருடன் சேர்ந்து,

பிடிக்கும் பரசமயக்குல
　　வேழம் பிளிற, வெகுண்டு
இடிக்கும்குரல் சிங்க ஏறு
　　அலையான், எழுபாரும் உய்ய
படிக்கும் புகழ் எம்
　　இராமானுஜமுனி பல் குணமும்
வடிக்கும் கருத்தினற்கே
　　திருமாமணி மண்டபமே.

என்று பாடிக் கொண்டே திரும்பலாம்.



## 26

# உத்தரமேரூர் சுந்தரவரதன்

இது ஜனநாயக யுகம். மக்களை மக்களுக்காக மக்களே ஆளும் முறை இன்று எங்கும் பரவி இருக்கிறது. மக்களுக்காக அவர்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் முறையே 'எலெக்ஷன்' என்றும் தேர்தல் என்றும் சொல்கிறோம். வெள்ளைக்காரர்கள் காலத்தில் இந்த எலெக்ஷன் முறை அமுலுக்கு வந்தது. அப்போது முதலில் வாக்குரிமை, சொத்துடையவர்களுக்கும் கல்வி அறிவில் தேர்ச்சி பெற்றவர்களுக்குமே இருந்தது. பின்னர் நாளடைவில் எழுதப்படிக்கத் தெரிந்த எல்லோருக்கும் வாக்குரிமை உண்டு என்று வந்தது. இந்த நிலையில் கூட, வாக்காளர்களில் பெரும் பகுதியினர்க்குத் தங்கள் கையெழுத்தைப் போடத் தெரியுமே ஒழிய, பிறர் எழுதியதையோ அச்சடித்ததையோ வாசிக்கத் தெரியாது. ஆதலால் வாக்குரிமைச் சீட்டாம் 'ஓட்' பதிவு செய்வதில் எவ்வளவோ தகராறுகள். இவற்றைத் தவிர்க்க ஓட்டுப் பெட்டிகளில் பச்சை, சிவப்பு, மஞ்சள் என்ற வர்ணக் காகிதங்களை ஒட்டி, அந்த வர்ணத்துக்கு உரிய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தார்கள். 'மங்களகரமான மஞ்சள்'

என்பது போன்ற தேர்தல் முறையிருந்தது நமது தலைமுறையிலேயே.

காலம் மாறிற்று. வெள்ளைக்காரனை விரட்டி அடித்து விட்டு நாமே நம்மை ஆளும் சுதந்திரம் பெற்றோம். நாமோ நம் ஓட்டர்களுக்கு எழுதப் படிக்கத் தெரிய வேண்டுவது அவசியம் என்று கருத வில்லை. வயது வந்த எல்லா ஆண் மகனுக்கும், பெண் மகளுக்கும் வாக்குரிமை உண்டு என்று நிர்ணயித்தோம். இது காரணமாக, முன்னர் இருந்ததுபோல் பச்சை, மஞ்சள், சிவப்பு என்பதைக் கூட நமது வோட்டர் களால் வேறுபடுத்திக் காண வகையில்லை. அவ்வளவு அறிவு வளர்ச்சி! ஆதலால் இரட்டைக் காளை, கதிர் அறிவாள், ஓலைக் குடிசை, உதய சூரியன், தாமரை, கூஜா, சைக்கிள் என்றெல்லாம் சின்னங்களை ஓட்டுப் பெட்டியில் ஒட்டி, அந்தப் பாகுபாட்டைத் தெரிந்தாவது ஓட்டளிக்கச் செய்திருக்கிறோம் நம் ஓட்டர்களை. இந்த முறையில் கூட எத்தனையோ குளறுபடிகள். இந்த முறையெல்லாம் நமது தாயகமாம் இந்தியாவிலே.

இம்மட்டோடு, மக்களின் பிரதிநிதிகளாக யார் யார் வரலாம் என்பதற்கு யாதொரு நிர்ணயமும் இல்லை. யார் வேண்டுமானாலும் வரலாம் என்ற நிலை வேறே. இப்படித்தான் ஜனப் பிரதிநிதி, ஓட்டர்கள், ஓட்டளிக் கும் முறை என்றெல்லாம் நமது ஜனநாயகம் விரிந்திருக் கிறது. 'இந்த ஜனநாயகம் வாழ்க!' என்று ஊரோடு சேர்ந்து கூவுவதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய இயலாதவர்களாக இருக்கிறோம் நம்மில் பெரும் பாலோர். இப்படியெல்லாம் இன்று நடக்கும் நமது அருமைத் தமிழ் நாட்டிலே, அன்று, ஆம். ஆயிரம் வருஷங்களுக்கு முன் இந்தத் தேர்தல் முறை எப்படி நடந்தது என்று தெரிந்து கொள்ள வேண்டாமா?

இதைத் தெரிந்து கொள்ளவே இன்று நாம் உத்தர மேரூருக்குச் செல்கிறோம்.

உத்தரமேரூர் செங்கல்பட்டு ஜில்லாவிலே உள்ள ஒரு சிறிய ஊர்தான். இதற்குப் போகச் சென்னை திருச்சி டிரங்க் ரோட்டிலே, சென்னையிலிருந்து நாற்பது மைல் வந்து, செங்கல்பட்டு, பாலாற்றுப் பாலம் எல்லாம் கடந்து மாவண்டூர் பக்கம் மேற்கு நோக்கிப் பத்தொன்பது மைல் போக வேணும். இல்லை என்றால் சென்னையிலிருந்து காஞ்சி வந்து வேகவதி, பாலாறு எல்லாவற்றையும் கடந்து மாகறல் வழியாகவும் வந்து சேரலாம். ஊருக்குள் செல்லும் வழியிலேயே கடைத் தெருவையும் பஸ் ஸ்டாண்டையும் ஒட்டி, ஒரு சிறு மாடக் கோயில், மதில் எல்லாம் இடிந்து கிடப்பதால் ஊரில் உள்ள கழுதைகளும், மாடுகளும் இக்கோயில் பிராகாரத்திலேயே நிற்கும். இந்த அடையாளங்களை வைத்து எளிதாகக் கோயிலைக் கண்டு பிடித்து விடலாம். இந்தக் கோயிலில்தான் வைகுண்டப் பெருமாள் இருக்கிறார். அவருக்கு எண்ணெய், தண்ணீர் கிடைத்து எத்தனை நாட்கள் ஆயினவோ! என்றாலும் இந்தக் கோயில் சுவர்களில்தான் ஒரு கல்வெட்டு, சோழ மன்னர்கள் காலத்து 'எலெக்ஷன்' எப்படி நடந்தது என்று கூறுகிறது. இந்தக் கல்வெட்டின்படி அந்தக் காலத்து மக்கள் வாக்குரிமைச் சீட்டுகளை ஓலையில் எழுதி, அதற்கென வைத்துள்ள ஒரு குடத்தில் போடுவார்கள். இப்படிப் போடும் முறையையே 'குடவோலை' என்பார்கள். ஏரி வாரியம், தோட்ட வாரியத்துக்குப் பிரதிநிதிகளாக நிற்க விரும்புபவர்கள் பெயர்களை ஓட்டர்களை எழுதி இக் குடத்தில் இடுவார்கள். பின்பு குடவோலையை, பெரிய சபை கூட்டி, வயது முதிர்ந்த நம்பியாரின் முன்னிலையில், ஒரு சிறுவனைக் கொண்டு ஓலைகளை ஒவ்வொன்றாய் எடுத்து, ஒரு மத்தியஸ்தன் கையில் கொடுப்பார்கள்.

அவனும் உள்ளங்கையை அகல விரித்துக் காட்டி விட்டு ஓலையை வாங்கி வாசிப்பான். அவன் வாசித்த பிறகே, நம்பியாரும், சபையோரும் படிப்பார்கள். யாருடைய பெயருக்கு அதிகச் சீட்டுக்கள் கிடைத்திருக்கின்றனவோ அவர்களே, தோட்டவாரியம் ஏரிவாரியம் முதலிய பொதுக் காரியங்களுக்கு நியமிக்கப்படுவார்கள். இதையெல்லாம் விளக்கமாகவே கூறும் கல்வெட்டு. இக் கல்வெட்டு பண்டித வத்ஸன், வீரநாராயணன் குஞ்சரமல்லன் என்ற விருதுப் பெயர்களைப் பெற்ற பராந்தக சோழன் காலத்தில் பொறிக்கப்பட்டது என்று அறிகிறோம். இவன் ஆட்சிக் காலம் கி. பி. 907 முதல் 950 வரை நாற்பத்து மூன்று ஆண்டுகள். இக் கல்வெட்டின் ஒரு பகுதியைப் படிக்கிறீர்களா ?

"ஸ்வஸ்தி ஸ்ரீ மதுரை கொண்ட கோ பர
கேசரி, வர்மருக்கு, யாண்டு பதினாலாவது
நாள் பதினாறு. காளியூர்க்கோட்டத்து
தன்கூற்று உத்தரமேரூர் சதுர்
வேதி மங்கலத்து ஸபையோம் :
இவ்வாண்டு முதல், எங்களுக்குப் பெரு
மானடிகள் எம்பெருமான் ஸ்ரீவீர
நாராயணன், ஸ்ரீ பராந்தக தேவன்
ஸ்ரீ பரகேசரி வர்மருடைய
ஸ்ரீமுகம் வரக்காட்ட, ஸ்ரீமுகப்படு
ஆக்ஞையால் சோழநாட்டுப்
புறங் கரம்பை நாட்டு, ஸ்ரீவங்க
நகர், காரநிசை கொண்ட யகரமவித்த
பட்டனாகிய, சோமாசிப் பெருமாள் இருந்து
வாரியமாக ஆட்டொருகாலும் ஸம்வத்ஸர
வாரியமும் ஏரிவாரியமும் இடுவிதற்கு
வியவஸ்தை செய்த பரிசாவது......"

என்ன போதுமல்லவா! கல்வெட்டுத் தமிழ் என்றால் இப்படித்தான் இருக்கும். இதில் தலைவால் எல்லாம்

கண்டு பிடித்துச் சரித்திரம் உருவாக்குவது என்பது சிரம சாத்தியமான காரியமே. அதை எல்லாம் சரித்திர ஆராய்ச்சியாளர்களுக்கே விட்டு விடலாம்.

இக் குடவோலைக் கல்வெட்டு சாஸனத்தின்படி யார் யார் வாரியப் பிரதிநிதிகளாகத் தேர்தலுக்கு நிற்க யோக்கியதை உடையவர்கள், யார் யார் தகுதியற்ற வர்கள் என்றும் நாம் அறிகிறோம். எழுபது வயதுக்கு மேற்போகாதவர்களாகவும், முப்பத்தைந்து வயதுக்குக் குறையாதவர்களாகவும் இருத்தல் வேண்டும். தேர் தலுக்கு நிற்பவர்கள் சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தவர்



குடவோலை கல்வெட்டுள்ள கோயில்

களாகவும், குணங்களில் குறைபாடு இல்லாதவர்களா கவும் இருத்தல் வேண்டும். வாரியங்களில் வேலை செய்து கணக்குக் காட்டாமல் இருந்தாரும், அவர்களது பந்துக்களும் தேர்தலுக்கு நிற்கத் தகுதியற்றவர்கள். (இதைவிடக் கடுமையான நிபந்தனைகள் நமது இந்தியச் சட்டத்திலும் இருக்கவே செய்கிறது என்றாலும் அத்தனையையும் சரிக்கட்டி விட்டு, உண்மையிலேயே

தகுதி இல்லாதவர்கள் பலர் இன்றையத் தேர்தல் களுக்கு நின்று வெற்றி பெறுகிறுர்கள் என்பதும் உண்மைதான்) குடவோலையைப் பற்றிய கல்வெட்டுத் தகவல்கள் இத்தனையையும் எளிதாகத் தெரிந்து கொண்டீர்கள். ஆனல் இவ்வளவு தகவலேயும் வைகுண்டப் பெருமாள் கோயில் சென்ருல் தெரிந்து கொள்ள முடியாது. கோயிலின் முன்பாகம் கடை களால் மறைக்கப் பட்டிருக்கும். கல்வெட்டுக்களைப் படிப்பது என்பது இயலாத காரியம். இடிந்து விழுந்த கற்களை—கல்வெட்டு இருந்த கற்களைத்தான்—மக்கள் தங்கள் தங்கள் வீட்டுக் கட்டிடம் கட்ட எடுத்துப்



சுந்தரவாதர் கோயில்

போகிருர்கள் என்றும் கேள்வி. புதை பொருள் இலாக்காக்காரர்கள் கொஞ்சம் விழிப்போடிருந்து இதை யெல்லாம் தடுக்க வேணும். வந்ததோ வந்தோம், ஆதலால் படி ஏறி, மூடிய கதவிடுக்கு வழியாக வைகுண்டப் பெருமாளை வணங்கி விட்டு மேலே நடக்கலாம்.

இந்த உத்தரமேரூரில் பார்க்க வேண்டிய கோயில்கள் இன்னும் இரண்டு உண்டு. இங்கு அந்தக் காலத்தில் ஏழு கோயில்கள் இருந்ததாகச் சொல்கிறார்கள். இக் கோயில்களில் எல்லாம் பெரியதும் சிறப்புடையதும் சுந்தர வரதராஜ சுவாமி கோயில்தான். இது அந்த ஊரில் உள்ள பெரிய தெருவின் மேலக் கோடியில் விமானங்கள் கோபுரங்கள் எல்லாம் உடையதாயிருக்கிறது. இக்கோயில் மூன்று தளங்களோடு கூடிய கோயில். அடித்தளத்தில் இருப்பவர் சுந்தரவரதராஜர். இவர் நின்ற கோலத்தில் சேவை சாதிப்பார். இவரைத் தவிர இந்த அடித்தளத்திலேயே அச்சுதவரதன், அநிருத்தவரதன், கல்யாணவரதன், ஆனந்தவல்லித் தாயார், ஆண்டாள் முதலிய எல்லோரையுமே தரிசிக்கலாம். அடுத்த தளத்தில் இருப்பவர் வைகுண்டவரதர். அவருடன் கிருஷ்ணார்ச்சுனர், யோக நரசிம்மர், லக்ஷ்மிவராகன் எல்லோருமே இருக்கிறார்கள். இவர்களையும் தரிசித்த பின் மூன்றாவது தளத்தில் ஏறலாம். அங்கு நல்ல வசதியாகக் காலை நீட்டிக் கொண்டிருப்பவர் ரங்கநாதவரதர். இக் கோயில் இப்படி மூன்று தளங்களாகக் கட்டப்பட்டிருந்தாலும் அவைகளில் வீற்றிருக்கும் ஸ்திரபேரங்கள் நேருக்கு நேராக ஒன்றின் மேல் ஒன்றாக அமைக்கப்படவில்லை. இப்படி விமான அமைப்பும் மூர்த்திகளின் அமைப்பும் கொண்ட கோயில் தமிழ் நாட்டில் அதிகம் இல்லை. இந்த இடத்தில் உள்ள சுந்தரராஜவரதனை, பிரும்மா, ருத்ரன், பூதேவி, மார்க்கண்டேயர் முதலியோர் வழிபட்டு முத்தியடைந்தார்கள் என்பது தலபுராண வரலாறு. மார்க்கண்டனுக்கு அருள்புரிந்தவர் சிவபெருமான் என்பது தானே புராணப் பிரசித்தம். அப்படி இருந்தும், இந்த வரதனிடம் அவர் ஏன் வந்து சேர்ந்தார்? என்று சந்தேகிப்போம் நாம். நம் சந்தேகத்தைத் தீர்த்து வைக்க, நம்மாழ்வாரே வருவார்.

புக்கடிமையினுல் தன்னைக் கண்ட
மார்க்கண்டேயன் அவனை
நக்கபிரானும் அன்று உய்யக்கொண்டது
நாராயணன் அருளே
கொக்கலர் தடந்தாழை வேலி
திருக்குருகூர் அதனுள்
மிக்க ஆதிப்பிரான் நிற்க
மற்றைத் தெய்வம் விளம்புதிரே

என்பது தானே நம்மாழ்வார் விளக்கம்.

இந்த உத்தரமேரூர் முழுவதையும் இப்படியே வரதர்களும் வைகுண்ட வாஸர்களுமே ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிருர்கள் என்றில்லை. ஊருக்கு மேல் கோடியில் கொஞ்ச இடத்தைக் கைலாசநாதருக்கும், அவருடைய குமாரர் சுப்பிரமணியருக்கும் ஒதுக்கிக் கொடுத்திருக்கிருர்கள். சுப்பிரமணியர் கோயில் சமீபத்தில் எழுந்த கோயில். கைலாசநாதர் கோயிலையும் விமானத்தையும் பார்த்தாலே அது பல்லவர் காலத்திய கோயில் என்று தெரிவோம். அங்குள்ள கல்வெட்டு களும் அதனையே கூறுகின்றன. நடுவிலே பிரதானமான கோயில். அதைச் சுற்றிச் சின்னஞ்சிறு கோயில்கள் எழுந்திருக்கின்றன. அக் கைலாசநாதர் கோயிலைத் தவிர, கேதாரீசுவரருக்கும் ஒரு கோயில் உண்டு. அக் கோயில் சுவரில் உள்ள கல்வெட்டுகள் பழைமை யானவை. ஆனுல் இன்று அதனைப் புதுப்பித்துக் கட்டி யிருக்கின்றனர்.

சரித்திரத்தின் ஏடுகளைப் புரட்டினுல் ஒரு கோட்டை இருந்ததாகவும், அதில் யமுனைக் கரையி லிருந்து வந்த விராடராஜன் வசித்ததாகவும் சொல் வார்கள். இக் கோட்டையையே பின்னர் ராஜேந்திர சோழன் கைப்பற்றிக் கொண்டு, இந்த ஊருக்கே ராஜேந்திர சோழ சதுர்வேதிமங்கலம் என்று பெயரிட்டிருக்

கிருன். அவனே இங்கு வேதம் ஓதுதலுக்கும் ஓதுவித் தலுக்கும் நிபந்தங்கள் ஏற்படுத்தி நிலங்களைத் தானம் வழங்கி யிருக்கிருன். இவ்வூருக்கு அழகு தருவது ஊரின் மேற்கேயுள்ள ஏரி. மிகவும் பெரிய ஏரி அது. லோகமகா தேவி குளம் என்று கணக்குகள் கூறும். எந்த லோகமகாதேவி என்று தெரியவில்லை. சோழ மன்னரின் மனைவியரில் எத்தனையோ லோகமகாதேவிகள். அவர் களில் யார் பெயரால் இந்தக் குளம் வெட்டப் பட்டது என்பதை எல்லாம் ஆராய்ச்சியாளர்களுக்கே விட்டு விடலாம் நாம். சுந்தரவரதனையும் கைலாசநாதரையும் வணங்கிய திருப்தியோடு ஊர் திரும்பலாம். குட வோலைக் கல்வெட்டைத் தாங்கியும் கவனிப்பாரற்றுக் கிடக்கும் வைகுண்டப் பெருமானுக்காக ஒரு சொட்டுக் கண்ணீரும் வடிக்கலாம்.



# 27

# மதுராந்தகத்து கருணுகரன்

கவிச்சக்கரவர்த்தி கம்பன் தமிழ்நாட்டில் பல தலங்களுக்குச் சென்றிருக்கிருன். தொண்டைநாட்டிலுள்ள அந்தப் பிரபலமான கச்சிக்கே சென்றிருக்கிருன். அங்குள்ள ஏகம்பனேயே வணங்கியிருக்கிருன். கம்பன் ஏதோ கம்பங் கொல்லேயைக் காத்ததினுலாவது, இல்லே கம்பூன்றி நடந்ததினுலாவது தான் கம்பன் என்று பெயர் பெற்ருன் என்று கூறுவது அறியாமையே. தேரழுந்தூரில் வழிவழியாகச் சைவப் பெருங்குடியில் வந்த கம்பனது முன்ஞேர்களுக்கு, கச்சி ஏகம்பனே வழிபடு தெய்வமாக இருந்திருக்கிருன். ஆதலால் ஏகம்பன் பெயரையே, அவன் தந்தை அவனுக்குச் சூட்டியிருக்கிருர். அதனுல்தான் கம்பன் என்ற பெயர் நிலேத்திருக்கிறது. தக்க புகழையுமே பெற்றிருக்கிறது. இந்தக் கம்பன் தொண்டைநாடு சென்று கச்சி ஏகம்பனேக்கண்டு தொழுதுவிட்டு, தன் சொந்த ஊராகிய தேரழுந்தூருக்குத் திரும்பியிருக்கிருன். வருகிற வழியில் ஓர் ஊர். அந்த ஊரில் கோயில் கொண்டிருப்பவன் கோதண்டராமன் என்று அறிந்தபோது கோயிலுள் சென்று தன்னே ஆட்கொண்ட பெருமானுன ராமனே

வணங்கித் துதிக்க நினைத்திருக்கிறான். அவசரமாக ஊர் திரும்புகின்ற பயணம். ஆதலால், கடைகளில் நுழைந்து ஆராதனைக்குரிய பொருள்களை வாங்கிக் கொள்ளவோ நேரமில்லை. ஆதலால் கையை வீசியே நடக்கிறான். கோயிலுள் நுழைகிறான். நேரே கர்ப்பக் கிருகத்துக்கே வந்து விடுகிறான். அங்கு லக்ஷ்மண சமேதனாக நிற்கும் கோதண்டராமனை, அவன் ஆரா தித்த கருணாகரனை எல்லாம் கண்குளிரக் காணுகின் றான். அந்த அல்லியாண்டு அமைந்தமேனி அழகனை, அந்த அழகனது அழகை எல்லாம் எத்தனையோ பாடல்



கோதண்டராமன் கோயில்

களில் ராம கதை முழுவதும் சொல்லிச் சொல்லி மகிழ்ந் தவன் ஆயிற்றே, என்றாலும் செந்தாமரைக் கண் ணொடும், செங்கனி வாயினொடும், சந்தார் தடந் தோளோடும், தாழ்தடக்கைகளோடும், வில்லேந்தி நிற்கும், அந்த ராமனைக் கண்டபொழுது, தான் சொல்ல வேண்டுவது இன்னும் எவ்வளவோ இருக்கின்றன போல் தெரிகிறதே என்ற எண்ணம். இப்படித் தன்

எண்ணங்களை அலைபாயவிட்டு அப்படியே மெய்மறந்து நின்றிருக்கிறான். மேலே கிடந்த உத்தரீயத்தை எடுத்துப் பவ்யமாக அரையில் கட்டிக்கொள்ளவேண்டும் என்று தோன்றவில்லை. மூர்த்தியைக் கைகூப்பி வணங்க வேண்டுமென்றும் தோன்றவில்லை. இந்த நிலையில் நிற்கும் கம்பனைப் பக்கத்திலே நின்றுகொண்டிருந்த பரம பாகவதர் ஒருவர் பார்க்கிறார். அவருக்கோ இவன் பேரில் ஒரே கோபம். 'இப்படியும் இருக்குமா ஒரு பிரகிருதி? சந்நிதிமுன் வந்தும் வணங்காமல் நிற்கிறானே, அப்படி இவன் என்ன வணங்காமுடியனோ?' என்றெல்லாம் எண்ணுகிறார். அவருக்கு இருந்த ஆத்திரத்தில் கம்பன் விலாவிலேயே ஒரு குத்துக் குத்தி, 'என்ன ஐயா! ஆராதனைக்கு உரிய பொருள்தான் ஒன்றும் கொண்டு வரவில்லை என்றால், சந்நிதியில் மூர்த்தியைக் கைகூப்பித் தொழவுமா தெரியாது?' என்று கேட்கிறார். அப்போதுதான் விழித்துக்கொண்ட கம்பன், அப்பரம பாகவதருக்குப் பதில் சொல்கிறான். கவிச் சக்கரவர்த்தி அல்லவா, பதில் பாட்டாகவே வருகிறது. பாட்டு இதுதான்:

> 'நாராயணாய நம' என்னும் நல்நெஞ்சர்
> பாராளும் பாதம் பணிந்து ஏத்துமாறு அறியேன்
> கார்ஆரும் மேனிக் கருணாகர மூர்த்திக்கு
> ஆராதனை என் அறியாமை ஒன்றுமே.

என்ற பாடலைப் பரம பாகவதருடன் சேர்ந்து நாமும் கேட்கிறோம். கோயிலை அறிந்தாலும் கும்பிடத் தெரியாத தன் அறியாமையை எவ்வளவு எளிமையோடு சொல்கிறான். அதைவிட அவன் ஆராதனைக்குக் கொண்டுவந்த பொருள் தன் அறியாமையே என்று சொல்கிறபோது எத்தகைய விளக்கம் பெறுகிறோம். உண்மைதானே! இறைவனையும் பெரியவர்களையும் அணுகும்போது நாம் கொண்டுபோக வேண்டுவது

நம்மிடம் நிறைய இருப்பதும், அவர்களிடம் கொஞ்சமும் இல்லாததுமான பொருளைத்தானே கொண்டுபோய்க் காணிக்கையாக வைத்து ஆராதிக்க வேண்டும். நம்மிடம் நிறைய இருப்பது அறியாமை, இறைவனிடத்துக் கொஞ்சங்கூட இல்லாதிருப்பதும் அறியாமை. ஆதலால் நமது அறியாமையையே ஆராதனப் பொருளாகக்கொண்டு கொட்ட வேண்டியதுதானே. அதைத்தானே செய்கிறுன் கம்பன். நம்மையும் செய்யும்படி வற்புறுத்துகிறுன். இப்படிக் கம்பன் ஆராதித்த கோதண்டராமனை அந்த ராமன் ஆராதித்த கருணுகரனைக் காண, கம்பன் சென்ற ஊருக்கே நாமும் செல்ல வேண்டாமா? அந்த ஊர்தான் மதுராந்தகம்.

மதுராந்தகம் செங்கல்பட்டு ஜில்லாவிலே உள்ள தாலூக்காவின் தலைநகரம். நிரம்பச் சிறிய ஊரும் அல்ல, நிரம்பப் பெரிய ஊரும் அல்ல சென்னைக்குத் தெற்கே ஐம்பது மைல் தூரத்திலே இருக்கிறது இந்த ஊர். ரயிலிலும், பஸ்ஸிலும் ஏன் நல்ல காரிலுமே செல்லலாம். இந்த ஊருக்கு, வடக்கே இருந்து வந்தாலும், தெற்கே இருந்து வந்தாலும், ஊருக்கு மேற்கே உயர்ந்த கரையோடு கூடிய பெரிய ஏரி நம் கண்முன் வரும். அந்த ஏரியின் மறுகாலே கல்லாறு என்ற பெயரோடு ஒரு பெரிய நதியாக ஓடுகிறது என்றுல் கேட்பானேன். இந்த ஏரி தமிழ்நாட்டிலுள்ள பெரிய ஏரிகளில் ஒன்று. கரையின் நீளம் 12960 அடி. அதன் நீர்ப்படி பரப்பு பதின்மூன்று சதுர மைல். ஏரி நீர் நிறைந்தால் நூறு அடிக்குமேல் ஆழம். ஏரிக்கு ஐந்து மதகுகள். அந்த மதகுகள் வழியாகப் பாய்ந்து பெருகும் தண்ணீர், வளர்பிறை, அருங்குணம், முள்ளி, முன்னத்திக்குப்பம், மதுராந்தகம் முதலிய ஊர்களிலுள்ள 2702 ஏக்கர் நன்செய் நிலங்களில் மூன்று போகம் நெல் விளைவுக்குப் பயன்படுகிறது. இந்த

ஏரியின் தண்ணீர் வழிந்தோட அமைந்திருக்கும் கலிங் கல் நூற்று ஐம்பது அடி நீளம் என்ருல் ஏரியைக் கொஞ்சம் கற்பனைபண்ணி மானசீகமாகவே பார்த்துக் கொள்ளலாம்தானே. இந்தத் தலத்தில் நாம் முதன் முதலில் காணவேண்டுவது கோதண்டராமன் கோயிலை யல்ல, இந்தப் பெரிய ஏரியையும் அல்ல, இந்த ஏரியில் உள்ள இந்தக் கலிங்கலைத்தான். ஆம்! இந்தக் கலிங் கலில்தானே கோயிலினுள் சிலை உருவில் நிற்கும் ராம னும் லக்ஷ்மணனும் சோதி வடிவிலே காட்சி கொடுத் திருக்கிருர்கள், வெள்ளைக்காரக் கலெக்டர் கர்னல் பிளேசுக்கு. இந்த ராமன் காரியமே இப்படித்தான். நாளும் ராம நாமத்தையே ஸ்மரணை செய்துக்கொண் டிருக்கும் பக்தர்களுக்குத் தரிசனம் தர மாட்டான். ஆனல் அவனைப்பற்றிக் கொஞ்சம் நினைக்காதவர்களைத் தேடிப் பிடிக்க ஓடுவான். ராமதாஸின் சரித்திரம்தான் தெரியுமே? அல்லும் பகலும் அனவரதமும் துதித்து, பத்ராசலத்தில் கோயில் எடுப்பித்த அந்தக் கோபண் ணுவின் கனவில் கூடத் தோன்ருத அவன், ஹைதரா பாத்தில் உள்ள பாதுஷாவான மன்னனை நோக்கி விரைந்திருக்கிருன். அவனுக்குத் தரிசனம் தந்திருக் கிருன். மோகாராக்களாகவே அவன் முன் கொட்டி யிருக்கிருன் என்ருல் கேட்பானேன். ஆனல் இந்தக் கலெக்டர் பிளேசுக்குத் தரிசனம் தந்தது மிக்க ரசமான கதை.

மதுராந்தகத்து ஏரி பெரிய ஏரிதான் என்ருலும், இந்த ஏரிக்கு ஒரு சாபமோ என்னவோ வருஷா வருஷம் கரை உடைத்துக் கொள்வது ஓவுறுவது இல்லை. பெரும் பொருள் செலவில் ஏரிக் கரையைப் பழுது பார்ப்பார்கள் இந்த ம[illegible]த்து இலாகா அதிகாரிகள். என்ருலும் நல்ல [illegible]பசி, கார்த்திகை மாதங்களில் அடை மழை பெய்து ஏரி

நிறைந்து விட்டால் ஒரே கவலைதான். எங்கேயோ ஓர் இடத்தில் பிய்த்துக்கொண்டு கரை உடையும். தண்ணீ ரெல்லாம் வெளியே ஓடும். ஓடும் வழியிலுள்ள பயிர்களை அழிக்கும். மாடு மனை மக்களை யெல்லாம் வாரிக் கொண்டே போய்விடும். ஏரியில் உள்ள தண் ணீர் எல்லாம் இப்படி வடிந்துவிட்டால் பயிர் விளைவ தேது? நிலவரி வசூலாவது ஏது? இதனால் எல்லாம் சர்க்காருக்கு ஒரே நஷ்டம். கலெக்டர்களுக்கோ ஓயாத தலைவலி.

1795-1798 வருஷங்களில் செங்கல்பட்டு ஜாகீரில் கலெக்டராக இருந்தவர் கர்னல் லயனல் பிளேஸ் என்ற ஆங்கிலத்துரை. இவருக்கு இந்த மதுராந்தகம் பெரிய ஏரிக் கதை தெரியும். அவர் கலெக்டராக வந்த அந்த வருஷத்திலே (1795-ல்) ஏரி உடைப்பு எடுத்து, அதனால் மக்களுடன் சர்க்கார் அடைந்த நஷ்டங்களைப் பற்றி விவரமான குறிப்புக்களைப் படித்திருக்கிறார். ஆத லால் 1798-ல் இந்த ஏரிக் கரையைப் பலப்படுத்த விசேஷ சிரத்தை எடுத்திருக்கிறார். மழை காலம் முழுதும் இங்கேயே மராமத்து இலாக்கா அதிகாரி களுடன் முகாம் செய்வது என்று திட்டமிட்டுக் கொள் கிறார். தக்க பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்க முனைந்திருக்கிறார். அப்படி முகாம் பண்ணியபோது, ஏரியை, நகரை யெல்லாம் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தவர் கோதண்டராமசாமி கோயில் வாயிலுக்கு வந்திருக்கிறார். கோயில் கோபுரம் எல்லாவற்றையும் கண்டு அதிசயித்து நின்ற துரை மகனை, அர்ச்சகர் களும் ஊர்ப் பிரமுகர்களும் கோயிலுக்குள் வந்து மற்ற அழகுகளையும் காண அழைத்திருக்கின்றனர். அவரும் காலில் உள்ள பாதரட்சைகளை யெல்லாம் கழற்றி வைத்து விட்டுக் கோயிலுக்குள் நுழைந்து வெளிப் பிரகாரத்தைச் சுற்றி வந்திருக்கிறார். அங்கு ஓரிடத்தில்

கருங் கற்கள் பல குவித்து வைத்திருப்பதைப் பார்த்து, 'இவை ஏன் இங்கு குவித்து வைத்திருக்கின்றன ?' என்று கேட்டிருக்கிருர். அங்குள்ளவர்கள் 'இங்கு கோயில் கொண்டிருப்பவர் சக்கரவர்த்தித் திருமகனுன ராமன். அவருடைய தர்ம பத்தினி ஜானகிக்கு என்று ஒரு தனிக் கோயில் இல்லே. அந்தத் தாயாருக்கு ஒரு கோயில் கட்டலாம் என்றே கல் எல்லாம் சேகரித் தோம். ஆனல் கட்ட முடியவில்லே. வருஷா வருஷம் விளேச்சல் இல்லாத காரணத்தால், மக்களிடமும் போதிய பணம் வசூலிக்க முடியவில்லே. கோயில் கஜானுவிலும் பணம் இல்லே. அதனுல்தான் எடுத்த காரியம் தடைப்பட்டுக் கிடக்கிறது' என்று சொல் கிருர்கள். இதை யெல்லாம் கேட்ட கலேக்டரோ, கொஞ்சம் ஏளனமாகவே 'என்ன ஐயா ! உங்கள் சாமிக்கு இந்த ஏரி உடையாமல் பார்த்துக் கொள்ளத் தெரியவில்லே. இவருக்கு ஒரு கோயில் ? இவர் மனே விக்கு ஒரு கோயில் ? இது எல்லாம் வீண் பண விரயந் தானே ?' என்று பேசி யிருக்கிருர். இதைக் கேட்ட அர்ச்சகர்கள் துடிதுடித்து, 'துரைவாள் ! இப்படி எல்லாம் சொல்லக் கூடாது. எங்கள் ராமன் இக் கலியுகத்தில் கண் கண்ட தெய்வம். அவனே உள்ளன் போடு ஆராதிப்பவர்களுக்கு அவர்கள் வேண்டு வதையெல்லாம் முட்டின்றி அருளுவான்' என் றெல்லாம் சொல்கிருர்கள்.

ஏரிக் கரையில் இருந்த கலேக்டரும் இதைக் கேட்டு, 'சரி ! உங்களுக்கும் உங்கள் ராமனுக்குமே ஒரு சவால். நான் உள்ளன்போடு உங்கள் ராமனிடம் பிரார்த்தித்துக் கொள்கிறேன். இந்த வருஷத்து மழையில் இந்த ஏரிக்கரை உடையாமல் இருந்தால், நானே இந்த ராமன் மனைவி ஜானகிக்குக் கோயில் கட்டித் தருகிறேன்.

பார்ப்போம் இதை!' என்று சொல்லிவிட்டு, முஸாபரி பங்களாவுக்குத் திரும்பி விடுகிருர்.

அன்றிரவே நல்ல மழை. மறு நாள் காடுமேடு எல்லாம் நீர் வழிந்து ஓடுகிறது. ஏரியில் தண்ணீர் மட்டம் ஏறிக் கொண்டே இருக்கிறது. கலெக்டர் கருணுகரமூர்த்தியை மட்டும் நம்பிச் சும்மா இருந்து விடவில்லை. மராமத்து இலாக்கா அதிகாரிகள் அத்தனை பேரையும் ஏரிக்கரையில் பல இடங்களில் காவல்



கோதண்டராமன்

போட்டு, கரை எங்கே உடைத்துக் கொள்ளும் என்று தோன்றுகிறதோ அந்தப் பாகத்தை யெல்லாம் பலப் படுத்த முஸ்தீப்புகள் செய்கிருர். பகல் முழுதும் மழை பெய்கிறது; இரவும் நிற்கக் காணும். கலெக்டருக்கு ஓய்வில்லை. இரண்டாம் நாளும் உத்தியோகஸ்தர்கள் எல்லாம் சோர்வு இல்லாமல் கரையைக் காவல் காப்

பார்களா என்று. ஆதலால் அவர்களைச் சடுதி பார்க்க இரவு பத்து மணிக்கு கலெக்டர் புறப்படுகிறார், குடை ஒன்றை எடுத்துக் கொண்டு. தாசில்தார், டபேதார், மற்றும் ஊர்க்காரர் சிலரும் கலெக்டர் பின்னாலேயே வருகிறார்கள். எல்லோருமே ஏரிக்கரைமீது நடக்கிறார்கள் கொட்டுகிற மழையிலே. கலிங்கல் பக்கம் வந்தது. துரை தம் கையிலுள்ள குடையையும் தொப்பியையும் எறிந்துவிட்டு மண்டியிட்டுக் கூப்பிய கையராய்த் தொழுது கொண்டு இருக்கிறார். பக்கத்தில் உள்ளவர்கள் துரை வழுக்கி விழுந்து விட்டார்போலும் என்று எண்ணி அவரைத் தூக்கிவிட முனைகிறார்கள். அவரோ, 'அடே! முட்டாள்களே, அதோ பாருங்கள்! கலிங்கலின் இரு பக்கத்திலும் தேஜோமயமான இரண்டு வீரர்கள் அல்லவா நின்று காவல் புரிகிறார்கள். அவர்கள் வில்லேந்தி நிற்கின்ற அழகுதான் என்ன! முகத்தில் தான் எத்தனை மந்தஹாசம்' என்று கூவவே ஆரம்பித்து விடுகிறார். பக்கத்தில் நிற்கும் பக்தர்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை. கலெக்டருக்குக் கிடைத்த கோதண்டராம தரிசனம் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. கலெக்டரும் மக்களும் ஊர் திரும்புகிறார்கள். அன்று ஏரிக்கரை உடையவில்லை. கலெக்டரும் தாம் சொன்ன சொல்லை நிறைவேற்ற மறக்கவில்லை. ஜானகிக்கு ஒரு கோயிலைத் தம்முடைய மேற்பார்வையிலேயே கட்டி முடித்துக் கொடுத்து விட்டுத்தான் தம் தாய் நாட்டுக்குக் கப்பல் ஏறி இருக்கிறார். இந்தத் தரும கும்பினி ஜாகீர் கலெக்டர் கர்னல் லயனல் பிளேஸ் துரை அவர்களது என்று கோயில் மண்டபத்திலே கல்லில் வெட்டி வைத்திருக்கிறார்கள். இதை இன்றும் அங்கு செல்பவர்கள் காணலாம். கலெக்டர் வேண்டுகோளுக்கு இரங்கி ஏரிகாத்த இந்த ராமனையே ஏரிகாத்த பெருமான் என்று இன்றும் அழைக்கிறார்கள் மக்கள்.

இத்தனை விஷயங்களும் தெரிந்தபின் இனி நாமும் கோயிலுள் செல்லலாம். கம்பன் கண்ட கோதண்ட ராமனை, ஏரி காத்த பெருமாளைக் கண்டு வணங்கலாம். கோயிலுக்கு முன்னாலே பெரிய திருக்குளம். குளக் கரையில் எல்லாம் நல்ல தென்னஞ்சோலைகள். இந்தச் சோலைகளுக்கும் ஏரிக்கரைக்கும் இடையிலே கோயில். இந்தக் கோயிலிலே மூலவர் கோதண்டராமன். உற்சவ மூர்த்தி இருவர். ஒருவன் கருணாகரன். மற்றொருவன் கோதண்டராமன். இவர்களிடையே ஒரு பெரிய வேற்றுமை. கோதண்டராமனோ ஏகபத்னிவிரதன். கருணாக்ரனோ இரண்டு பெண்டாட்டிக்காரன். ஸ்ரீதேவி பூதேவி சமேதனாக அவன் நிற்கிறான். ஆனால் இந்தக் கருணாகரன் ராமன் வணங்கிய நாராயணமூர்த்தி என்கிறார்கள். கோதண்டராமன் கோயிலுக்கு வலப்பக் கத்திலே ஜனகவல்லித் தாயாரின் கோயில். இதைத் தான் கலெக்டர் லயனல் பிளேஸ் கட்டியிருக்கிறார். இத்தலம் வைஷ்ணவர்களுக்கு மிகவும் உகந்த ஸ்தலம். இங்குதான் இராமானுஜருக்கு, பெரிய நம்பி, பஞ்ச சம்ஸ் காரம் என்னும் வைஷ்ண தீக்ஷை செய்து வைத்திருக் கிறார். தீக்ஷை நடந்த இடம் மகிழமரத்தடியில். அந்த மகிழ மரமும், ஸ்தலப் பெயரான வகுளாராண்யம் என் பதை நிலைநிறுத்த அங்கேயே நின்று கொண்டிருக் கிறது. இந்த மகிழடியையே ஸ்ரீவைகுண்ட வர்த்தனம் என்று அழைக்கிறார்கள். கம்பன் கண்ட கருணாகரனை கோதண்டராமனை இளைய பெருமாளுடன் நிற்பவனைத் தரிசித்துவிட்டு வருவதுடன் பெரிய நம்பி, இராமானுஜர், மகிழடி எல்லோரையுமே சேவை செய்து திரும்பலாம்.

இந்த மதுராந்தகம், சோழ மண்டலத்தை ராஜராஜ க்கு முன்னால் ஆண்ட உத்தமச் சோழன் என்னும் மதுராந்தகச் சோழனால் வேதம் ஓதும் அந்தணர் களுக்கு மான்யமாக விடப்பட்டு மதுராந்தகச் சதுர்

வேதிமங்கலம் என்று நிலைபெற்றிருக்கிறது. மூலவர் கோயில் அப்போதே எழுந்திருக்க வேண்டும். பின்னர் வந்த சோழ மன்னர்களாலும், நாயக்க மன்னர்களாலும் விரிவடைந்திருக்கிறது. இதை அர்ச்சகர்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். மதுரசம் பொருந்திய புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்த நகரம் ஆனதால்தான் மதுராந் தகம் என்பார்கள். நாம் அவர்களோடு சண்டைக்குப் போக வேண்டாம்.

